# தமிழக வரலாறு
# சங்ககாலம் - அரசர்கள்

புலவர் கா. கோவிந்தனார்

எழிலகம்

தமிழக வரலாறு வரிசை — 1

# தமிழக வரலாறு
# சங்ககாலம் — அரசர்கள்


ஆசிரியர்

புலவர். கா. கோவிந்தனார்



**எழிலகம்**

46, செல்வ விநாயகர் கோயில் தெரு,
திருவத்திபுரம் (செய்யாறு)—604 407.

எழிலகம் வெளியீடு : எண் : 14
முதற்பதிப்பு : ஜூன் 1993
உரிமை : பதிப்பகத்தாருக்கு

விலை ரூ. 25-00

ISBN—81—85703—13—2

வெளியீடு :

**எழிலகம்**
46, செல்வவினாயகர் கோயில் தெரு,
திருவத்திபுரம் (செய்யாறு)
திருவண்ணாமலை சம்புவராயர் மாவட்டம்,
604407.

கிடைக்குமிடம்
17|12 பீட்டர்ஸ் சாலைக் குடியிருப்பு,
இராயப்பேட்டை, சென்னை—600 014

அச்சிட்டோர் :

**மூவேந்தர் அச்சகம்**
இராயப்பேட்டை
சென்னை—600014
தொலைபேசி, 8267189

# பதிப்புரை

இருபதாம் நூற்றாண்டு தமிழகத்தின் வரலாற்றில் தனக்கென ஒரு சிறப்பிடத்தைப் பெறத்தக்க வகையில் நல்ல தமிழ் அறிஞராக, வரலாற்றுத் திறனாய்வாளராக, செந்தமிழ்ப் பேச்சாளராக, இலக்கியப் படைப்பாளராக, பாதைமாறாத பகுத்தறிவு வாதியாக, அப்பழுக்கற்ற அரசியல் தலைவராக, சட்டமன்றப் பேரவைத் தலைவராக- என பல்திறன் படைத்த நற்றமிழ்ப் புலவராக விளங்கியவர்,

**புலவர். கா. கோவிந்தனார் அவர்கள்**

''தமிழுக்கும், தமிழ்ப்புலவர்கட்கும், தமிழ் நாட்டுக்கும் தொண்டாற்றத் தன்னையே அர்ப்பணித்தவர்'' என்று பேரறிஞர் அண்ணா அவர்களால் பாராட்டப் பெற்ற பேறு பெற்றவர்; பைந்தமிழ் வல்ல புலவராய் உயர்ந்து, சங்கத் தமிழ் ஏடுகளிலெல்லாம் திளைத்து, வரலாற்றுக் கண் கொண்டு ஆய்ந்து, தொல்காலத் தமிழர் வாழ்வை இக்காலத்தவரும் தெளிந்திடுமாறு தேன் தமிழ்ச் சுவடிகளாக வரைந்து வழங்கிய பெருமை உடையவர்,

## புலவர். கா. கோவிந்தனார் அவர்கள்

புலவர்களுள் பெரும் புலவராய் விளங்கி, திருவண்ணா மலை குன்றக்குடி ஆதீனத்தாரின் "புலவரேறு" பட்டம், தமிழக அரசின் "திரு.வி. க. விருது", மதுரை-காமராசர் பல்கலைக் கழகத்தின் "தமிழ்ப் பேரவைச் செம்மல்" பட்டம், போன்ற சிறப்புகளைப் பெற்ற புலவர் அவர்களது தமிழ்ப்பணி பொன்விழா கண்ட பெருமையினையுடையது.

"என் தமிழ்ப்பணி" என்ற தலைப்பில் புலவர் அவர்கள் எழுதிய கட்டுரையில், "என் எழுத்துப்பணி தொடரும். குறள்பற்றி, சங்க இலக்கியங்கள் பற்றி பல தலைப்புகளில் நூல் எழுதக் குறிப்பு எடுத்து வைத் துள்ளேன் "கல்வி கரையில, கற்பவர் நாள் சில" காலம் இடம் தந்தால் என் எழுத்துப்பணி தொடரும்" என்று தம் தமிழ்ப் பணியைத் தொடரவேண்டும் என்ற தணியா ஆவலை வெளியிட்டுள்ளார். ஆனால் காலம் இடம் தரத்தவறி விட்டதனால் முற்றுப் பெறாத நிலையிலேயே அவருடைய எழுத்துப்பணி எச்சமாகவே நின்று போயிற்று. காலம் செய்த கொடுமை அது!

தமிழால் உயர்ந்து, தம் தமிழ்ப்பணி மூலம் தமிழுக்கும் உயர்வு தேடித் தரும் வகையில், எழுத்துலகம் நினைவு கொள்ளும் வண்ணம் நூற்பணியாற்றிய புலவர் அவர்கள், 'செத்தும் பொருள் கொடுத்த சீதக்காதி வள்ளல்' போல தம் மறைவிற்குப் பின்னும் தமிழுக்கு அணி செய்யும் வகையில் பல இலக்கியப் படைப்புகளைத் தம் கையெழுத்து வடிவிலே அளித்துச் சென்றுள்ளார்.

அந்த எழுத்துச் சுவடிகளையெல்லாம் அச்சு வடிவில் வெளியிடுவதைத் தன் தலையாய கடமையாக எழிலகம் ஏற்று அதன் முதற்கட்டமாக, வள்ளுவர் சொல்லாட்சி மாட்சி, 'மனையுறை புறாக்கள்; ஆகிய இரு நூல்களை சென்ற ஆண்டு வெளியிட்டோம். சங்ககால அரசர் வரிசை, திருமாவளவன், அறம் உரைத்த அரசர், இலக்கியங் கண்ட காவலர், கலிங்கம் கண்ட காவலர், தமிழர் தளபதிகள், கழுமலப் போர், தமிழர் வாழ்வு' தமிழர் வாணிகம், பண்டைத் தமிழர் போர்நெறி, தமிழகத்தில் கோசர்கள், போன்ற வரலாற்று நூற்கள் பல படைத்த புலவர் அவர்கள், சங்ககாலம் தொட்டு இன்று வரையான தமிழர் வரலாற்றை, காலம் தோறும் தொகுத்து வரிசையாக எழுதும் பணியில் ஈடுபட்டிருந்தார்கள். அந்தப் பணியும் முற்றுப் பெறாது போனது. அந்தப் பணியில் அவர் எழுதி முடித்த வரலாற்றுப் படைப்புகளை தமிழக வரலாறு—வரிசை என்ற பெயரில் வெளியிட முனைந்து முதல் நூலாக,

**தமிழக வரலாறு-சங்க காலம்-அரசர்கள்**

என்ற இந்த நூலை தமிழ்கூறு நல்லுலகத்தின் முன் படைக்கிறோம்.

> **''மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்**
> **தம் புகழ் நிறீஇத் தாம் மாய்ந்தனரே''**

என்ற புறநானூற்று மொழிகளுக்கேற்ப, புகழுடம்பு பெற்று விட்ட புலவர் பெருந்தகை, இறவாத புகழுடைய இலக்கியங்கள் பலவற்றைத் தமிழன்னைக்கு அணி செய்ய அளித்து விட்டுச் சென்றுள்ளார். புலவர் அவர்களின்

முன்னைய படைப்புகளுக்குத் தமிழகத்துப் பெரியோர் களாகிய தாங்கள் காட்டிய பேரன்பையும், பாராட்டை யும், ஆதரவினையும் தொடர்ந்து அளித்திட வேண்டு கிறோம்.

"தமிழுக்குத் தொண்டு செய்வோர் சாவதில்லை" என்றார் பாவேந்தர். தம் வாழ்நாள் முழுவதும், காலம் கரம்பிடித்து அழைத்துப் போன அந்தக் கடைசி நொடி வரை, தமிழ்ப் பணி ஆற்றிய புலவர் அவர்கள் வாழ்வார்! அவர் தமிழ் உலகிற்கு அளித்துச் சென்றுள்ள இலக்கியச் செல்வங்கள் உள்ளவரை என்றென்றும் நிலைத்துவாழ்வார்! தமிழ் படிப்போர் நெஞ்சமெல்லாம் நிறைந்து வாழ்வார்! என்பது உறுதி.

எழிலகம் பதிப்பகத்தார்

# குறுக்க விளக்க அகர நிரல்

| | | |
|---|---|---|
| அகம் | — | அகநானூறு |
| இ. உலா | — | இராசராசசோழன் உலா |
| ஐங்குறு | — | ஐங்குறு நூறு |
| க. ஆ. அ | — | கல்வெட்டு ஆண்டு அறிக்கை |
| க. பரணி | — | கலிங்கத்துப்பரணி |
| கலி | — | கலித்தொகை |
| களவழி | — | களவழி நாற்பது |
| கு. உலா | — | குலோத்துங்க சோழன் உலா |
| கு. பிள்ளைத்தமிழ் | — | குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ் |
| குறுந் | — | குறுந்தொகை |
| சிலம்பு | — | சிலப்பதிகாரம் |
| சிறுபாண் | — | சிறுபாணாற்றுப்படை |
| தெ. இ. க. | — | தென் இந்தியக் கல்வெட்டுகள் |
| தொல் | — | தொல்காப்பியம் |
| நற் | — | நற்றிணை |
| நெடுநல் | — | நெடு நல்வாடை |
| பட்டின | — | பட்டினப்பாலை |
| பதிற்று | — | பதிற்றுப்பத்து |
| பரி | — | பரிபாடல் |
| புறம் | — | புறநானூறு |
| பெரும்பாண் | — | பெரும்பாணாற்றுப்படை |
| பொருநர் | — | பொருநராற்றுப்படை |
| மதுரை | — | மதுரைக்காஞ்சி |
| மலைபடு | — | மலைபடுகடாம் |
| வி. உலா | — | விக்கிரமசோழன் உலா |

# பொருளடக்கம்

# 1. தோற்றுவாய்

உலக அரங்கில், தமிழ்நாடு உயர்ந்து விளங்கிய காலம் ஒன்று இருந்தது. உலகத்தார்க்கெல்லாம், அறுசுவை உணவளித்து அவர் உடலை ஓம்பியும், ஆன்ற அறிவு அளித்து, அவர் உயிரை ஓம்பியும் உயர்வுற்ற காலம் அது. உலக நாடுகள் அனைத்தினும், அறிவில், ஆற்றலில், செல்வத்தில், பெருமையில், பொன்னில், பொருளில், நாகரீக நற்பண்பில் நனிசிறந்தது எங்கள் நாடு என்று, இன்று பெருமை கொள்ளும் நாடுகளெல்லாம்; தங்கள் உணர்வாலும் உணரலாகா, அத்துணை இருள் செறிந்துகிடந்த அக்காலத்தில், நாகரீகத்தின் நடுநாயகமாய், நல்லாட்சிக்கோர் எடுத்துக்காட்டாய், அறிவொளி வீசும் பெருநாடாய்ப் பெருமையுற்றிருந்தது நம் தமிழ்நாடு.

சிலம்பும், மேகலையும் சிறக்க அளித்த சேரர் கோவும் —சீத்தலைச்சாத்தனாரும், "தமிழகம்" எனப் பெயரிட்டு அழைக்கும் வட வேங்கடம், தென்குமரிகட்கு இடைப்பட்ட இந்நாட்டை, ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியனார், "வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு"[1] எனப் பெயரிட்டுப் போற்றுவதால், தமிழகம், மிகப் பழைய காலத்திலிருந்தே சேர, சோழ, பாண்டிய மரபினரால் ஆளப்பட்டு வந்துளது, என்பது புலனாம்.

இப் பேரரசுகள் மூன்றும், கிழக்கே சீனப்பேரரசும், மேற்கே உரோமானியப் பேரரசும் சிறந்துவிளங்கிய அக்காலத்திலேயே, அவற்றோடொப்பச் சிறந்து விளங்கிய பழமையும் பெருமையும் உடையனவாகும்; இவ்வரசுகள் இன்ன காலத்தே தோன்றின என்றோ, இன்னாரால் தோற்றுவிக்கப்பட்டன என்றோ, அறுதி இட்டுக் கூறமாட்டாப் பழமை வாய்ந்தன. இவ்வரசுகளின் பழமைகாண முற்பட்டார் அனைவரும், "கல் தோன்றி, மண்தோன்றாக் காலத்தே முன்தோன்றிய மூத்தகுடி", "படைப்புக் காலம் தொடங்கி மேம்பட்டு வரும் குடிகள்" என்றே கூறி அமைவராயினர். வடமொழி இராமாயண ஆசிரியர் வால்மீகியராலும், அம்மொழிப் பேரிலக்கணப் பேராசிரியர் காத்தியாயனராலும் தங்கள் நூல்களில், சீரும் சிறப்பும் பெற்ற நாடுகளாக, இந்நாடுகள் கூறப்பட்டுள்ளன. இந்திய நாட்டின் பெரும் பகுதியினை வென்று தன் ஒரு குடைக்கீழ் வைத்து உலகாண்ட மவுரியப் பேரரசன் அசோகன், "என் ஆட்சியோடொத்த, என் ஆட்சிக்குட்படாப் பேரரசுகள் சேர, சோழ, பாண்டிய அரசுகள்" எனப் பாராட்டியுள்ளான் எனின், இவ் வரசுகளின் பழமை, பெருமைகளை மேலும் விளக்குதல் வேண்டுமோ? வடமொழியின் முதற்பெரும் காவியமாகிய வான்மீகி இராமாயணமும், வியாசர் பாரதமும், மூவேந்தர் நாட்டின் நனிசிறப்புகளையும், அவ்வரசர்களின் ஆற்றற்பெருமையையும், பாராட்டிக் கூறுகின்றன, என்னே தமிழ்நாட்டின் தொன்மை! என்னே தமிழரசர்தம் பெருமை!

# 2. சேரர்.

சேர, சோழ, பாண்டியர் மூவரும் ஒருதாய் வயிற்றில் பிறந்தோரே எனவும், அவர்கள் தென்னாட்டில், நாகரீக வளர்ச்சிக்குத் தோன்றுமிடமாகிய தாமிரவருணி யாற்றங்கரையில், கொற்கையைத் தலைநகராகக் கொண்டு வாழ்ந்து வந்தனர் எனவும், பின்னர் யாது காரணத்தாலோ, தம்முள் பிரிந்தனர் எனவும், அவருள் பாண்டியர் அங்கேயே நிலைத்து விட்டனராக, ஏனை இருவரும் முறையே மேற்கிலும், வடக்கிலும் சென்று, தங்கள் தங்கள் பெயர்களால் தனியரசுகள் அமைத்துக் கொண்டனர் எனவும் பழைய வரலாறுகள் கூறுகின்றன.

மூவேந்தர்நாடுகள் மூன்றும், சேரநாடு, சோழநாடு, பாண்டியநாடு, என வழங்கப் பெறுதலோடு, அவை முறையே "குடபுலம்", "குணபுலம்", "தென்புலம்" என அவை அமைந்துள்ள திசையானும் அழைக்கப் பெறும். இது, அந்நாடுகாவல் கொண்டாரை, முறையே, "குடபுலம் காவலர் பெருமான்", "குணபுலம் காவலர் பெருமான்", "தென்புலம் காவலர் பெருமான்" எனப் பெயரிட்டுச் சிறுபாணாற்றுப்படை அழைப்பதால் புலனாகும்.

செந்தமிழ் மொழி வழங்கும் நாடுகளாகப் பண்டு விளங்கிய பன்னிரண்டு நாடுகளுள், குட்டம், குடம், கற்கா, பூழி, மலாடு என்ற ஐஞ்சிறு நாடுகளையும் உள்ளடக்கிய நிலமே, குடபுலம் என்ற பெயரில் வழங்

கிய சேரநாடாகும். சேலம், கோவை மாவட்டங்களைக் கொண்ட கொங்குநாடும், அச்சேர நாட்டின் உள் நாடுகளுள் ஒன்று. அயிரை, கொல்லி, பாயல், நன்றா, நேரி முதலாம் மலைகள் சேரநாட்டிற்குச் சிறப்பளித்து நிற்கும் மலைகளாம். அந்நாட்டின் வளம்பெருக ஓடும் ஆறுகள், ஆன்பொருநை, காஞ்சியாறு, குடவனாறு, காரியாறு, பேரியாறு முதலாயின. கன்னிக்காவிரியின் தோற்றமும், இளமையும் ஈண்டே. பொன்கொழிக்கும் புறநாட்டு வாணிப நிலையங்களாகவும், வளங் கொழிக்கும் உள்நாட்டு ஊர்களாகவும், அரசியல் தலைமை நிலையங்களாகவும் சிறப்பளிக்கும் சேர நாட்டுச் செல்வப் பேரூர்கள், கருவூர், தொண்டி, நறவு, மாந்தை, மரந்தை, வஞ்சி முதலாயினவாம். சேரநாடு பல்வேறு வளங்களையும் ஒருங்கு கொண்ட நாடே ஆயினும், அஃவளங்களுள் குறிப்பிடத்தக்க பெருவளம், "வேழம் முதலாம் மலைபடுபொருள்களே." "வேழம் உடைத்து மலைநாடு" எனக்கூறுவதும் அறிக. வேழங்கள் நிறைந்து விளங்கும் காடொன்று அதன்பால் உண்டு. அது வேழக்காடு அல்லது உம்பற்காடு என அழைக்கப் பெறும்.

செந்தமிழ்வேந்தர் மூவருள், சேரர் சிறந்தவராவர் என்ற கொள்கை, பழங்கால மக்களிடையேயும், அக்காலப் புலவர்களிடையேயும் நிலவியிருந்தது. சேரர், சோழர், பாண்டியர் என அவர்கள், வழக்கிற்கண், முதற்கண் வைத்து வழங்கப்பெறுதலேபோல், "போந்தை, வேம்பே, ஆர் என வரூஉம் மாபெரும் தானையர்"[2] என, அவர்கள் மாலை, முதற்கண் வைத்து செய்யுட்கண் வழங்கப்பெறுதல் அறிக. சேரவேந்தர், ஆதன், இரும்பொறை, கடுங்கோ, வேட்டுவன், குடவர், கோதை, சேரர், சேரலர் என்ற பெயர்களால் அழைக்கப் பெறுவர்.

சேர நாடாண்ட சேரவேந்தர், இரு கிளையினராகக் காணப்படுகின்றனர். ஒருவர் உதியன் சேரலாதன் வழி வந்தவர்; மற்றொருவர், இரும்பொறை என்ற பெயரால் அழைக்கப்படுவோர். இவர்களுள் முன்னவர், வஞ்சியைத் தலைநகராகக் கொண்ட உள்நாட்டுப் பகுதியினையும், பின்னவர், தொண்டியைத் தலைநகராகக் கொண்ட கடற்கரைப் பகுதியையும் ஆண்டவராவர்.

## உதியன் சேரலாதன்

சங்ககாலச் சேர வேந்தர்களுள், வரலாறு விளங்க வாழ்ந்த முதல் சேர வேந்தன், உதியன் சேரலாதன். இவன், பெருஞ்சோற்றுதியன் சேரலாதன், உதியன் சேரலாதன்; உதியஞ்சேரல் என்றெல்லாம் அழைக்கப் பெறுவன். வெளியன் வேண்மான் எனும் வேளிர்குலத் தலைவன் மகள் நல்லினி, இவன் மனைவி. இமயவரம்பன் நெடுஞ் சேரலாதனும், பல்யானைச் செல்கெழு குட்டுவனும் இவன் மக்கள்.

உதியன் சேரலாதன், ஆற்றிய அரிய செயல்கள் இரண்டு, ஒன்று தன் நாட்டு எல்லையை விரிவாக்கியது. இரண்டாவது பெருஞ் சோறு அளித்தது.

உதியன் சேரலாதன், தமிழகம் முழுமையும் தன் ஒரு குடைக்கீழ் வைத்து உலகாண்ட பேரரசன். கிழக்கு மேற்கு ஆகிய பெருங்கடல்களை எல்லையாகக் கொண்ட நாடுமுழுவதும் உதியன் அரசே நடைபெற்றது என்பதை அறிவிக்க வந்த புலவர், முரஞ்சியூர் முடிநாகராயர்: "அரசே! கீழ்க்கடலும் நினதே; மேலைக் கடலும் நினதே, ஆதலின் ஞாயிறு தோன்றுவதும் உன்

கடலிலேயே, அவன் மறைவதும் உன் கடலிலேயே'" எனக் கூறி உள்ளார்.[3]

உதியன் பெருஞ்சோறு அளித்த நிகழ்ச்சியைப் பாராட்டிய புலவர்கள், முரஞ்சியூர் முடிநாகராயரும், இளங்கோவடிகளும், மாமூலனாரும், கோட்டம் பலத்துத் துஞ்சிய சேரமானும் ஆவர். இவருள் முன்னையர் இருவரும், உதியன் சேரலாதன் பாண்டவர் ஐவரும், கௌரவர் நூற்றுவரும் மேற்கொண்ட பாரதப் போரில், அப்போர் முடியுங்காறும் இரு திறப்படையினர்க்கும் சோறளித்துப் புரந்தான் எனக் கூறுகின்றனர்,[4] பின்னவர் இருவரில் மாமூலனார், இறந்து துறக்கும் புக்க பெரும் புகழ் நிறைந்த தம் முன்னோரை வழிபடல் கருதிய உதியஞ் சேரலாதன், ஆண்டுதோறும் அவர் நினைவாகப் பெருஞ்சோறு படைத்தான் என்றும்,[5] கோட்டம் பலத்துத் துஞ்சிய சேரமான், கொடுத்தல் தன் பிறவிக் கடன் என்ற நல் உள்ளம் உடைமையால், உதியன் சேரலாதன், பல்லாண்குன்று என்ற மலையிடத்துக் குழுமூரில், அட்டிற்சாலை அமைத்து வருவார்க்கெல்லாம் உணவு படைத்தான் என்றும்[6] கூறியுள்ளனர்.

சோறளித்த சேரலாதன் செயலை ஏற்றுக் கொள்வாரும், மறுப்பாருமாக இரு திறப்படுவர் ஆராய்ச்சியாளர். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் தந்தையாகிய உதியஞ்சேரலாதன் கி. பி. முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவனாதல் வேண்டும். அவன், பாரதப்போர் வீரர்களுக்குச் சோறு அளித்தான் எனல் பொருந்தாது. ஆகவே, பெருஞ்சோறு அளித்த உதியன் செயல், பாரதக் காலத்தே வாழ்ந்து, அப்பாரத வீரர்க்குச் சோறளித்துப் புரந்த அவன் முன்னோன் செயலை, அவனுக்கு ஏற்றிக் கூறியதாதல் வேண்டும்

என்று கருதுவர் சிலர். பாரத நிகழ்ச்சியை நாடகமாக்கி, ஆண்டு தோறும் நடித்துக் கொண்டாடுவதும், அவ் விழாவின் இறுதி நாளன்று, விழாக்காண வருவார்க்குச் சோறளித்துப் பேணுவதும் இந்நாட்டு வழக்கமாம். உதியன் செயலும் அதையே குறிப்பதாம் என்பர் மற்றும் சிலர். உதியன் சேரலாதனுக்கும், பாரதப் போருக்கும் யாதொரு தொடர்பும் இல்லை. உதியன் சோறளித்தல் இறந்த தன் முன்னோரைக் குறித்து ஆண்டுதோறும், நிகழ்த்தும் நினைவு விழாவின்போது சோறளித்த தையே குறிக்கும் என்பர் வேறு சிலர். "பாண்டியரில்[8] பஞ்சவர், கௌரியர் என்போர் கிளைக்குடியினர். இந்தக் கிளைக்குடியினர்க்கிடையே போர் நடந்தபோது இவன் இருபடைக்கும் உணவு வழங்கியிருக்கலாம்" என்பர் மற்றும் சிலர். உதியன் சேரலாதன் வேறு. பெருஞ் சோற்று உதியலான் வேறு என்பர் சிலர்.

இனி, சோழன் கரிகால் பெருவளத்தானுடன் போரிட்டுப் பெற்ற புறப்புண் நாணி வடக்கிருந்து உயிர் விட்ட, சேரமான் பெருஞ்சேரலாதன் என்பானைப் பாராட்டி கழாத்தலையாரும்,[7]வெண்ணிக்குயத்தியாரும்[8] பாடியுள்ளனர். இதே நிகழ்ச்சியை மாமூலனாரும்[9]குறிப் பிட்டுள்ளார். உதியஞ்சேரல், தன் நாட்டை விரிவு படுத் தியதையும் அவன் பரிசில் தரும் பெருமையினையும்,[10] அவன் அளிக்கும் பெருஞ் சோற்று விழாவினையும்[11] எடுத்துக் கூறிப்பாராட்டிய மாமூலனாரே வெண்ணியில் தோற்ற சேரலாதனையும் குறிப்பிட்டுள்ளார்.[12] ஆகவே, கரிகாலனோடு போரிட்டுத் தோற்று வடக்கிருந்து உயிர் விட்ட சேரவேந்தன், உதியஞ் சேரலாதனே எனக் கொள் ளுதல் பொருந்துமா என்பதை அறிஞர் பெருமக்கள் ஆராய்ந்து துணிவார்களாக.

## இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்.

சேர வேந்தர்களுள் சிறந்தோனாகிய செங்குட்டுவனையும், சிறந்த பெரும் புலவராய், நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரத்தை ஆக்கித் தந்தருளிய இளங்கோவடிகளையும் பெற்றெடுத்த பெருமைசால் பேரரசன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன். சேரலாதன் எனவும், குடவர் கோமான் நெடுஞ்சேரலாதன் எனவும், குடக்கோ நெடுஞ்சேரலாதன் எனவும் அழைக்கப்பெறும் இவ்வேந்தன், பாரதப் போர் வீரர்க்கு, அப்போர் முடியுங்காலும் சோறளித்துப் புரந்தான் எனப் போற்றப்படும் உதியஞ் சேரலாதன் மகனாவன். இவன் தாய், வெளியன் வேண்மான் எனும் வேளிர் குலத் தலைவன் மகளாகிய நல்லினி என்பாள். இவனுக்கு மனைவியர் இருவர். ஒருத்தி சோழன் மணக்கிள்ளியின் மகளாகிய நற்சோணை, மற்றொருத்தி, வேளாவிக் கோமான் பதுமன் என்பான் மகள். முன்னவள் வழியாகச் செங்குட்டுவன், இளங்கோவடிகளாரும், பின்னவள் வழியாகக களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல், ஆடுகோட்பாட்டுச் சேரலாதனும் பிறந்தனர். இவன் தம்பியாம் சிறப்புடையோன், பல்யானைச் செல் கெழுகுட்டுவன்.

நெடுஞ்சேரலாதன், இமயமும், குமரியும், இருபால் எல்லைகளாகப் பெருநிலம் முழுதாண்டபேரரசனாவன்[13] படையுடன் வடநாடு சென்று, ஆரிய அரசர்களை வென்று, அவ்வெற்றிக்கு அறிகுறியாக, இமயமலை மீது, தன் அரசு இலாஞ்சனையாகிய வில்லைப் பொறித்து மீண்டான்.[14]

அவ்வடநாட்டுப் போரில், பணிய மறுத்த யவன அரசர்களை வென்று, அவர் தலையில் நெய்யைப் பெய்

தும், அவர் கைகளைப் பின் கட்டாகக் கட்டியும், இழிவு செய்ததோடு, அவரிடமிருந்து விலைமதிக்கவொண்ணா அணிகலன்களையும், வயிரங்களையும் வாரிக் கொணர்ந்து தன்னைப் பாடிய பாணர், கூத்தர்களுக்கு வழங்கினான்.[15]

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் பெற்ற மற்றொரு பெரிய வெற்றி, கடலிடையே உள்ள தீவு ஒன்றைத் தம் வாழிடமாகக் கொண்டிருந்த பகைவர் மீது கப்பற் படையின் துணை கொண்டு சென்று, அவரையும் வென்று அவர் காவல் மரமாம் கடம்பையும் வெட்டி வீழ்த்தி, அக்கடம்பால் முரசு செய்து முழக்கியதே ஆம்.[16]

நெடுஞ்சேரலாதன், அறம் கூறும் ஆன்றோர்களை என்றும் பிரியான். பகைவர் பணிந்து வந்து திறை தந்தால், அவர் பிழை பொறுத்து அவரை வாழ விடுவன், வருவார்க்கு வாரி வழங்கும் வள்ளலும் ஆவன்.[17] அவனைப் பாடிய புலவர்கள், பரணர், மாமூலனார், குமட்டூர்க் கண்ணனார் ஆகியோர்களில், ஈற்றில் கூறியவர்க்குத் தன் ஆட்சிக்கு உட்பட்ட உம்பற்காடு எனும் பகுதியில் உள்ள ஐந்நூறு ஊர்களையும், தென்னாட்டினின்றும் வரும் வருவாயில் ஒரு பாகத்தையும் கொடுத்தான், இமயவரம்பன் ஐம்பத்தெட்டு ஆண்டு வாழ்ந்திருந்தான்.

இனி, திருப்போர்ப்புறம் எனும் இடத்தே, சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளியொடு, போரிட்டு அவனோடு ஒருங்கே உயிரிழந்த சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன் என்பானொரு சேரவேந்தன் புறநானூற்றில் கூறப்பட்டுள்ளான். அவர் இருவரும் இறந்து கிடந்த காட்சியைக் கண்டு கண்ணீர் விட்டுக்

கலங்கியுள்ளனர் பரணரும்.[18] கழாத்தலையாரும்.[19] இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைக் குறிக்க வழங்கும் பெயர்களுள், "குடக்கோ நெடுஞ்சேரலாதன்"[20] என்பதும் ஒன்று; ஆதலாலும், சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியொடு பொருது வீழந்தான் பெயரும் "குடக்கோ நெடுஞ்சேரலாதன் என்றே கூறப்பட்டுள்ளது ஆதலாலும். குடக்கோ நெடுஞ்சேரலாதனும், வேற்பஃறடக்கை பெருவிறற்கிள்ளியும் இறந்து வீழ்ந்திருப்பது கண்டு இரங்கிப் பாடிய புலவர்களுள் ஒருவராகிய பரணர், இமயத்தே விற்பொறித்த நெடுஞ்சேரலாதனையும் பாடியுள்ளார்,[21] ஆதலாலும், வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியோடு போரிட்டு உயிர் துறந்தவன், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனே எனக் கோடல் பொருந்தும் கொல்?

## பல்யானைச் செல்கெழுகுட்டுவன்

பெருஞ்சோற்றுதியன் சேரலாதனுக்கும் வெளியன் வேண்மான் மகள் நல்லினிக்கும் மகனாய்ப் பிறந்தவன் இவன். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனை உடன் புறந்தவனாகக் கொண்டவன். பகைவர்களின் பற்றற்கரிய அரண்களை அழிக்கும் ஆற்றல் வாய்ந்த வேழப் படையைப் பெற்றிருந்தவன்.

வேழங்கள் மலிந்த உம்பற்காட்டை வென்று கைக்கொண்டவன்,[22] அகப்பா எனும் பற்றற்கரிய அரணைக் கைப்பற்றியவன்.[23] வேந்தர் இருவர் வேளிர்களை ஒரே களத்தில் வெற்றி கொண்டவன்.[24] ஆனிரைச் செல்வமும், பொன் கொழிக்கும் நிலவளமும் கொண்ட பூழியர்களை வென்றவன்.[25] குதிரைப்படை வல்ல

மழவர்களையும் வென்றவன்.[26] கொங்கு நாட்டை வென்றவன்;[27] தன் யானைகளை ஒரே காலத்தில் மேலைக்கடலுக்கும், கீழைக்கடலுக்கும் போக்கி, அவை கொணர்ந்த இருகடல் நீரில் ஆடியவன்,[28] அயிரைமலையில் கோயில் கொண்டிருக்கும் கொற்றவையை வழிபட்டவன், சிறந்த கொடையாளி, தன்னைப் பாடிய புலவர், பாலைக்கௌதமனார் வேண்ட பத்துப் பெரு வேள்விகள் செய்து, அவரையும், அவர் மனைவியையும் பிறவாப் பெருநெறியில் இருத்தியவன், [29] இவ்வாறு வாழ்வாங்கு வாழ்ந்து உயர்ந்த செங்குட்டுவன், இருபத்தைந்து ஆண்டு ஆட்சி புரிந்த பின்னர் நெடும்பாரதாயனார் வழிகாட்ட, நாடுவிட்டு, காடடைந்து கடுந்தவம் மேற்கொண்டு வீடுபேறு அடைந்தான்.[30]

## கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன்

செங்குட்டுவன் தந்தையைப் பெற்ற பாட்டன் பெருஞ்சோற்றுதியன் சேரலாதன், பாட்டி, வெளியன் வேண்மாள் நல்லினி; தந்தை, இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன், தாய், சோழன் மணக்கிள்ளி மகள் நற் சோணை; உடன் பிறந்தவர், இளங்கோவடிகளார், மனைவி இளங்கோ வேண்மாள்; மகன் குட்டுவஞ்சேரல், சிறிய தந்தை, பல்யானைச் செல்கெழுகுட்டுவன்; மாற்றாந்தாய் வேளாவிக்கோமான் பதுமன் மகள்; மாற்றாந்தாய் வழி வந்த உடன் பிறப்பாளர்கள், களங் காய்க் கண்ணி நார் முடிச்சேரலும், ஆடுகோட்பாட்டுச் சேரலாதனும் ஆவர்.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், பேரத் தாணிக்கண் இருந்தபோது, ஒருநாள் நிமித்திகன்

ஒருவன் வந்து "மன்னர் மன்ன! நினக்குப் பின் நின் அரியணையில் அமரும் ஆகூழ் உடையான் நின் இளைய மகனே" என்றனன். அதுகேட்டு மூத்தோனான செங்குட்டுவன் முகம் சுளிக்கக் கண்ட இளையன், "மூத்தோன் இருக்க இளையோன் அரசனாதல்" அற மன்று; எனக் கூறி துறந்து குணவாயிற் கோட்டம் புகுந்தான், செங்குட்டுவன் முறைப்படி அரசனானான்.

செங்குட்டுவன் பெற்ற வெற்றிகள், கொங்கரைக் கொடுகூரில் வெற்றி கொண்டது,[31] கடம்பர் என்ற கடலிடை வாழ்வாரை அழித்தது,[32] மோகூர்ப் பழையனை வென்று, தன் நண்பன் அறுகைக்கு நேர்ந்த இழிவைத் துடைத்தது,[33] கடற்கரை நகராம் வியலூரை வெற்றி கொண்டது,[34] நேரிவாயில் எனும் இடத்தில் ஒன்பது மன்னர்களை ஒருபொழுதில் வெற்றி கொண்டது.[35] இரும்பாவனப் போரில் பகைவரைப் புறங் கண்டது[36] எனப் பலப்பலவாயினும், அனைத்தினும் சிறப்பு வாய்ந்த வெற்றிகள் இரண்டு. ஒன்று, இறந்த தன் தாயின் படிமத்தை கங்கையில் நீராட்டச் சென்ற போது எதிர்த்த ஆரிய அரசர் பலரை வெற்றி கொண்டது,[37] இரண்டாவது, கண்ணகி சிலைக்காம் கல் கொணர்வான் வேண்டி, இமயம் சென்றபோது வந்து எதிர்த்த கனக் விஜயரை வென்று அவர் தலை மீதே கல்லேற்றிக் கொணர்ந்தது.[38]

கால வரையறை காணமாட்டாது கிடந்த தமிழக வரலாற்றிற்குக் "கடல் சூழ் இலங்கைக்கயவாகுவை யும்"[39] அழைத்து விழா வெடுத்ததன் மூலம், தன் காலம் கி. பி. 177—199 எனக் காண வைத்த சிறப் புடையவன் செங்குட்டுவன்.

கண்ணகிக்குக் கோயில் கட்டிய செங்குட்டுவன் சிவபெருமான் திருவடிகளைத் தன் தலைமேலும், திருமால் பிரசாதத்தைத் தோளிலும் தாங்கும் சமரச சமய நெறி கண்டவனாவன்.[40]

## களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல்

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்கு, அவன் இளைய மனைவி, வேளாவிக் கோமான் பதுமன் மகள் வயிற்றில் பிறந்தவன் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல். ஆடுகோட் பாட்டுச் சேரலாதன் இவன் தம்பி. இவன் முடிசூடுகின்ற காலத்து, முடியும், கண்ணியும் காணாமல் போகவே, களங்காய்களால் ஆன கண்ணியும்; நாரால் பின்னப்பட்ட முடியும், அணிந்து கொண்டான். ஆகவே அப்பெயர் பெற்றான்.

கடம்பின் பெருவாயில் வாகைப்பெருந்துறை ஆகிய இரு இடங்களில், நன்னனை வென்று, இழந்த பூழி நாட்டை மீட்டதும்,[41] அதியமான் நெடுமான் அஞ்சி வழி வந்த நெடுமிடல் என்பான் செருக்கை அடக்கியதும் இவன் வெற்றிகளாம்.[42]

சிறந்த கொடையாளி, இருபத்தைந்து ஆண்டுகள், அரசாண்டவன். பாடியபுலவர், காப்பியாற்றுக் காப்பியனார்.

## ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலின் தம்பி இவன். நறவு எனும் கடற்கரை நகரைத் தலைநகராக் கொண்டு, சேரநாட்டின் வடமேற்குப் பகுதியை ஆண்டவன். தமிழ

கத்து வடக்கு எல்லைக்கு அப்பால் உள்ள தண்டா ரணியம் என்ற காட்டில் வாழும் கொள்ளையர், சேரர் நாடு புகுந்து, ஆங்குள்ளார்க்குரிய ஆட்டு மந்தைகளைக் கவர்ந்து சென்றமை அறிந்து, அக்காடு புகுந்து, அக் கொள்ளையரை வென்று, ஆட்டு மந்தையை மீட்டுக் கொணர்ந்து அப்புகழால் பெயர் பெற்றவன் இவன்.[43]

## அந்துவஞ்சேரல் இரும்பொறை

சேரருள் ஒரு பிரிவினராய இரும்பொறை மரபில் வந்தவன். கருவூரிலிருந்து ஆட்சி புரிந்தவன். முடித் தலைக்கோப் பெரு நற்கிள்ளி இவனோடு பகைகொண்டு இவன் தலைநகராம் கருவூரை முற்றுகையிட்டிருந்தான்; ஒரு நாள், களிறு மீது அமர்ந்து தனியே சேரர் படை வரிசையுள் புகுந்துவிட்டான் கிள்ளி. அது அறிந்த புலவர், உறையூர் ஏணிச்சேரிமுட மோசியார், தனித்து வந்தானுக்கு கேடுவிளைத்தல் போர் அறமாகாதே என எண்ணி, அவனுக்கு ஊறு ஏதும் நிகழாவாறு, காக்கு மாறு இரும்பொறையை வேண்டிக் கொண்டதாகப் புறநானூற்றுப் பாடல் ஒன்று[44] கூறுகிறது. இவனைப் பற்றி அறியக் கூடியன இவ்வளவே.

## செல்வக் கடுங்கோ வாழியாதன்

வேளாவிக் கோமான் பதுமன் என்பான் மகளிர் இரு வருள் மூத்தாளை இமயவரம்பன் மணந்து கொள்ள, இளையாளை மணந்து கொண்டவன் செல்வக் கடுங்கோ. தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை இவன் மகன். செல்வக்கடுங்கோவைப் பாடிய புலவர்கள் கபிலரும், குன்றுகண் பாலியாதனாரும், வள்ளல் பாரி இறந்த

பின், அவன் போலும் கொடையாளி இவன் என அறிந்து இவன்பால் வந்தவர், அவனிடம் நூறு ஆயிரம் காணப் பொன்னும், நன்றா எனும் குன்றின் மீது ஏறி நின்று அங்கிருந்து காணக்கூடிய நாடுகளையும் நன்கொடையாக அவன் அளிக்கப் பெற்றார்.

அவன், ஆற்றல் எல்லாம் பொதுவகையாகப் பாடப் பட்டுள்ளனவே அல்லது, குறிப்பிட்ட வெற்றி எதுவும் கூறப்படவில்லை.

## தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை

செல்வக்கடுங்கோ வாழியாதன் இவன் தந்தை. வேளாவிக் கோமான் பதுமன் என்பானின் இளையமகள் இவன் தாய். இவன் போர்க்களம் பல கண்டவன் என்றாலும் அவனுக்குப் பெருமை சேர்த்தது, தகடூர்க் கண் அவன் பெற்ற வெற்றியே.

இக்காலத்தில், தர்மபுரி என வழங்கும் தகடூரை ஆண்டிருந்தனர் அதியர் என்ற இனத்தவர். தகடூர் சேரநாட்டின் ஒரு பகுதியே. இவன் காலத்தில் அஞ்சி என்பான் தகடூரை ஆண்டு கொண்டிருந்தான். தகடூர்க் கோட்டை எளிதில் அழிக்கலாகாத் திண்மை உடையது. அத்தகைய கோட்டையை அழித்தமையால், இவன் இப்பெயர் பெற்றான.[45] அவன் பெற்ற மற்றோர் வெற்றி, கழுவுள் என்னும் பெயருடைய ஆயர் குலத்தவனை வென்றது.[46]

அவன் வெற்றிக்குப் பெருமை சேர்த்தது. தகடூர் வெற்றி என்றால், அவன் கொடைக்குப் பெருமை சேர்த்தது, அவன் மோசிகீரனார்க்கு முரசு கட்டில் வழங்கியது இவனைப் பாடிப்பரிசில் பெற வந்த புலவர் மோசிகீரனார்

அரண்மனைக்குச் சென்ற போது இவன் இல்லாது போக வே, வழிநடை வருத்தமிகுதியால், முரசு கட்டில் மீது கிடந்து உறங்கிவிட்டார். முரசுகட்டில், அரசு கட்டில் போலும் சிறப்புடையது. ஆகவே, அதில் படுத்துறங்குவது பெருங்குற்றம். ஆயினும், அங்கு வந்து புலவர் படுத்துறங்குவது கண்ட தகடூர் எறிந்தான், உறங்குபவர் புலவர் என்பதால், அவரை எழுப்பித் தண்டனை அளிப்பது கைவிட்டு, அவர் உறக்கம் கலையாது மேலும் உறங்கும் வரை மயில் இறகுகளால் ஆன விசிறி கொண்டு விசிறி நின்றான்.[47] அவனுக்குப் பெருமை சேர்த்த செயல்களில் தலையாயது இது.

## இளஞ்சேரல் இரும்பொறை

இவன் தந்தை குட்டுவன் இரும்பொறை. தாய், வேண்மாள் அந்துவம் செள்ளை,[48] இவனைப் பாடிய புலவர், பெருங்குன்றூர்க்கிழார். இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன், கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன், தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை, களங்காய்க் கண்ணியான், செல்வக்கடுங்கோ வாழியாதன் ஆகியோர்க்குக் காலத்தால் பிற்பட்டவன். குடக்கோச் சேரல் என்றும் அழைக்கப் பெற்றவன். பதிற்றுப் பத்து ஒன்பதாம் பத்தின் பாட்டுடைத் தலைவன். பகைவர்கள் செயலற்றுப் போக, போர் முரசுகள் இடியென முழங்கப் படை எடுத்துச் சென்று பகைவரை அழிப்பவன் எனப் புகழப் பெற்றவன் (புறம் 210, 211). பெருங் குன்றூர்க் கிழாரின் பாநலம் கேட்கும் ஆர்வம் மிகுதியால், நாள் தோறும், பரிசில் தருவது போல் காட்டித் தாராமலே நெடிது நாள், தன் அவையகத்திலேயே வைத்திருந்து போற்றினான்.

இவனைப் பனிரெண்டு பாடல்களால், பெருங் குன்றூர்க்கிழார் பாராட்டியுள்ளார் என்றாலும், அவை யெல்லாம் அவன் கொற்றம் கொடைவளங்களைப் பொதுவாகப் பாடியுள்ளனவே ஒழிய, எதையும் குறிப் பிட்டுக் கூறவில்லை.

## கருவூர் ஏறிய ஒள்வாட் கோப்பெருஞ்சேரல் இரும்பொறை

இரும்பொறை மரபினர்க்குரிய, தொண்டி, மாந்தை, முதலாம் கடற்கரை நாட்டை ஆண்டதொடு, சேரருள் மற்றொரு கிளையினர்க்குரிய கொங்கு நாட்டுக்கருவூரை யும் கைப்பற்றி ஆண்டவன். யானைகள் நிறைந்த காட்டு நாட்டிற்கு உரியவன். "குடிமக்கள்பால் அன்பும் அருளும் உடையையாகிக் குழந்தையைப் பேணும் தாய் போல், நாடாள்வாயாக" என நரிவெரூஉத் தலையார் என்ற புலவரால் பாடப்பெற்றவன்.[50]

## குட்டுவன் கோதை

குட்டநாட்டை ஆண்டவன், 'கோதை' எனும் பெயர் உடையவன், "அவன் அவைக்குள் புலவர்கள் புகுதல் எளிது; அவன் பகைவர்க்குப் புலிவாழும் காட்டுள், இடையர் உட்புக அஞ்சுவதுபோல், அஞ்சத் தக்கது அவன் அவை" என எறிச்சிலூர்மாடலன் மதுரைக்குமரனாரால் பாடப்பெற்றவன்[51]

## கோக் கோதைமார்பன்

தொண்டியைத் தலைநகராகக் கொண்டு நாடாண்டவன் கூடலைக் கைப்பற்ற வந்த கிள்ளி வளவன், பாண்டியன் படைத்தலைவனாம் பழையன் பால் தோற்றது கேட்டு மகிழ்ந்தவன்[52] "அவன் ஆண்டநாடு, கடற்கரை நாடே ஆயினும். மலைவளமும். மருத வளமும் பெற்றிருந்தமையால், புலவர்கள் அவனைக் குறிஞ்சி நிலத்து நாடன் என அழைப்பதா? மருத நிலத்து ஊரன் என அழைப்பதா? என அறியாது மயங்குவர்" எனப் புகழ்ந்துள்ளார் புலவர் பொய்கையார் [53].

## சோழிய ஏனாதி திருக்குட்டுவன்

இவனைப் பாடிய புலவா, கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார் [54] வெண்குடை ஊரில். இருந்து அரசாண்டவன்; சிறந்த கொடையாளி. குலப் பகைவராம், சோழர் படையில் பணியாற்றிப்படைத் தலைவர்களுக்கு அளிக்கும் "ஏனாதி" என்ற பட்டத்தைப் பெறுமளவு பெரிய வீரனாக விளங்கியவன்

## மாந்தரம் பொறையன் கடுங்கோ

இவன் "மாந்திரன்[5] என்றும் "மாந்தரம் பொறையன் கடுங்கோ"[56]என்றும்அழைக்கப்பெறுவன். இவனைப் பாடிய புலவர்கள் பரணரும். பெருங்குன்றூர்க் கிழாரும் ஆவர் நாளும் கோளும் மாறாதிருக்க நல்ல மழை பெய்யுமளவு நல்லாட்சி நடத்தியவன்; போர் பல வென்று போர்க்களிறுகள்

பலவற்றைக் கொண்டவன், பாணர், புலவர், பொருநர்க்களுக்கெல்லாம் வாரிவழங்கும் வள்ளல்.

## மாரி வெண்கோ

பாண்டிய நாட்டில் கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதியும், சோழ நாட்டில், இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் ஆண்டிருந்த காலத்தில், சேர நாட்டில் ஆட்சி புரிந்திருந்தவன். மூவேந்தர்கள் எக்காலத்தும், தங்களுக்குள்ளாகப் பகைகொண்டு போரிட்டு அழிவர், அழிப்பர், என்பதற்கு மாறாக இம் மூவரும் ஒற்றுமையுடன் ஒன்றுகூடி வாழ்ந்திருந்தனர். இச்சிறப்பைப் பாராட்டியுள்ளார் ஔவையார்.[57]

## யானைக்கண் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை

கோச்சேரமான் யானைக்கண்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை;சேரமான் மாந்தரஞ்சேரல் இரும்பொறை, சேரமான் யானைக்கண் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை,என்றெல்லாம் அழைக்கப்பெறுவன். சோறாக்க மூட்டிய தீ , ஞாயிற்றின் தீ அல்லது பிற தீ அறியாது அவன் நாடு. வான வில்லை அல்லது, பகை வில்லை அறியார் அவன் நாட்டவர்; உழுபடை அல்லது பகைப் படை அறியாது அவன் நாடு'' என்றெல்லாம் குறுங்கோழியாரால் பாடப் பெற்ற நல்லாட்சியாளன்.[58]

ஆனால் பேராற்றலோ, பெரும்படையோ உடையானல்லன், ஆதனால் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனோடு போரிட்டு ஒருமுறையும்,[59] இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியோடு போரிட்டுஒருமுறையும்[60] தோல்வி கண்டான்.

தோல்விக்குக் காரணம் நல்ல படைத்துணை இல்லை என்பதை உணர்ந்து, கபிலர் இருந்திருந்தால் தேர்வணமலையன் துணை தனக்குக் கிடைத்திருக்கும், அந்தோ! அவர் இல்லையே என எண்ணி எண்ணி, வருந்தினான்.[61]

ஒரு நாள் விண்மீன் விழக்கண்ட புலவர் கடலூர்க் கிழார், அந்த நிமித்தத்தால் யாருக்கு என்ன கேடு நேருமோ என அஞ்சியிருந்தபோது. அதுகண்ட ஏழாம் நாள் இரும்பொறை இறந்துவிட்டான். அதுகேட்டு, வருந்தினார் புலவர்.[62]

## வஞ்சன்

குடகு நாட்டின் ஒரு பகுதியாகிய, இப்போது வயநாடு என அழைக்கப்பெறும் பாயல் நாட்டை ஆண்டவன்; பகைவர்க்குப் புக இயலாத காவலும், புலவர், இரவலர், போல்வார்க்குத் திறந்து விடும் வாயிலும் உடைய அரணுக்கு உரியவன். இவனைப் பாடிய புலவர் திருத்தாமனார்![63]

## புலவர்கள். பாவல காவலர்

புலவர்கள் பாடல்களால் அறியப்பட்ட சேர அரசர்கள் வரலாற்றை இதுவரை கண்டோம். இனி, தம் பாடல்களால், தம் வரலாறுகளைக் உணர்த்திய சேரர்களைக் காண்போம். அவர்கள் ஒன்பதின்மர்.

## இளங்குட்டுவன்

காதலனுடன் சென்றுவிட்ட மகளை நினைந்து செவிலித்தாய் வருந்துவதாக அமைந்த ஒரு பாட்டில், எப்போதும் இனிய சொற்களைக் கூறும் தோழிய சிறிது பொழுது பந்தாடினும், கன்றிப்போகும் மென்மையான காலுடையளாய் இருந்தும், வெயில் காயும் காட்டில் மூங்கில்கள் தீப்பிடித்துக் கொள் வதால், மேலும் வெப்பம் மிகுந்த வழியில் கணவனோடு செல்லும் தலைவி, அவள் நிலையறிந்து வருந்தும் அன்புத் தாய் ஆகியோர்களைப் படம்பிடித்துக் காட்டி உள்ளார்.[64]

## எந்தை

தலைவன் பொருள்வயிற் பிரியக் கருதியுள்ளான், என்பதை அவன் செயற் குறிப்பால் அறிந்து கொண்டு வருந்தும் தலைவியை, அழகிய முகத்தளாய உன்னை விட்டுப் பிரியும் உள்ளம் யாருக்கு வரும்? எனக் கேட்பதன் மூலம் பிரியான் தலைவன் எனத் தோழி ஆறுதல் கூறும் அழகிய பாட்டொன்றைப் பாடியுள்ளார் புலவர் எந்தை[64]

## கணைக்கால் இரும்பொறை

தன்னைப் பணிய மறுத்த மூவன் என்பானை வென்று அவன் பற்களைப் பிடுங்கிக் கொணர்ந்து பொறுத்திய வாயிற் கதவுகளைக் கொண்ட தொண்டி நகரைத் தலை நகராகக் கொண்டு ஆண்டவன், தம் வீரர் அஞ்ச மதம் பிடித்து அலைந்த யானையை அடக்கியவன் எனப் பொய்கையரால் பாராட்டப் பெற்றவன்[65]

சோழன் செங்கணானோடு திருப்போர்ப்புறம் எனும் இடத்தில் போரிட்டுத் தோற்றுப் போக, அவனால் சிறை பிடிக்கப்பட்டு குடவாயில் கோட்டத்துச் சிறையில் அடைக்கப்பட்டிருந்த போது, நீர் வேட்கைமிக்கு நீர் கேட்டபோது சிறைக்காவலர் காலம் தாழ்த்துக்கொடுக்க "போரில் விழுப்புண் பெற்று இறப்பது வீரர்க்குஅழகு, அது பெறாதே வீரன் ஒருவன், இறந்துவிடுவனாயினும் அது பெற வாய்ப்பிலாக்குழவி இறந்து விடுமாயினும், அவ்வுடல்களை வாளால் வெட்டி விழுப்புண் உண்டாக்கிப் புதைக்கும் மறக்குடியில் வந்த நான், இழுப்பார் பின், செல்லும் நாய் வாழ்க்கை போலும் வாழ்க்கையில் வாழ்வனோ" என்ற பொருளமைந்த பாடலைப்[67] பாடி வைத்துவிட்டு உண்ணாதே உயிர் விட்ட உயர்ந்தோன் இவன்.

## கருவூர்ச் சேரமான் சாத்தன்:

காதலிபால் கொண்ட அன்பால், படமெடுத்தாடும் பாம்பையும் அழிக்கவல்ல இடி இடிக்கும் நடுயாமத்தில் வந்து செல்லும் வழக்கம் மேற்கொண்டுள்ளான் காதலன். அவ்வழிக்கொடுமை கேட்டு அஞ்சிய காதலி, "வருக" எனக் கூறவும் அஞ்சுகிறாள். வாராமையால் வரும் துயரை நினைந்து "வாரற்க'! எனக் கூறவும் அஞ்சுகிறாள். இது தீர வேண்டுமாயின், இருவரும் மணஞ் செய்து கொள்ள வேண்டும் என உணர்கிறாள் தோழி. அது உணர்ந்த அவள், ஒரு நாள் காதலன் வந்து, காதலிக்காக மனைப்புறத்தே காத்திருக்கும் போது, அவன் கேட்க தாங்கள் அஞ்சும் நிலையைக் கூறித், திருமணம் செய்து கொள்ளும் எண்ணம் அவன் உள்ளத்தில் எழச் செய்து விட்டாள் என்ற பொருள் அடங்கிய பாடல் ஒன்றைக் குறுந்தொகையுள் சேர்த்துள்ளார்.[68] (269

## நம்பி குட்டுவனார்

சேர நாட்டிற்குரிய குட்ட நாட்டில் பிறந்து அக்கால ஆடவரிற் சிறந்து விளங்கினமையால் "நம்பி குட்டுவனார்" என அழைக்கப் பெற்றுள்ளார். நற்றிணையில் மூன்று பாடல்களும்,[69] குறுந்தொகையில் இரண்டு பாடல்களும்[70] பாடியுள்ளார். தலைவன் பிரிவால் தலைவியின் மேனியில் படர்ந்துவிட்ட பசலைநோய், அவன் நாட்டு மலைக்காற்று வீசிய அளவிலேயே இல்லாகி விடும்[71] என்பனபோலும் நயம்செறிந்த பாடல்கள் அவை.

## கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை

பேரரசர்கள், இறுதியில் உயிர்விட்ட இடங்களை அவர்கள் பெயர்களோடு இணைத்து, "இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன்" முதல், "யானைமேல் துஞ்சிய இராச கேசரி இராசாதி இராசன்" வரை வழங்குவதுபோல், இப்போது "அம்பலப்புழை" என வழங்கப் பெறும் கோட்டம்பலத்தில் உயிர்விட்டமையால், இவன் இப்பெயர் பெற்றான்.

இவன் பாடிய பாடல்கள் அகத்தில் ஒன்று,[72] புறத்தில் ஒன்று[73] உள்ளன. முன்னதில் மலை அருவி எழுப்பும் இன்னிசையில் உறங்கும் குழவியைக் காத்து நிற்கும், களிறு, பிடிகளின் அன்பையும், பெருஞ்சோற்றுதியன் சேரலாதன், பெருஞ்சோறு வழங்கும் குலப்பெருமையையும் பாராட்டியுள்ளார். பின்னதில், பிரியேன், பிரியின் உயிர் வாழேன்" என அளித்த உறுதிமொழிக்கு மாறாக, மனைவி இறந்த பின்னரும் உயிர் வாழ்ந்திருக்கும் தன் நிலைக்கு வருந்தியிருப்பதன் மூலம், காதல் வாழ்க்கையின் பண்பை விளக்கியுள்ளார்.

## பாலை பாடிய பெருங்கடுங்கோ

ஒன்றைப் பாடி, அதனால் புகழ்பெற்றுக் "காக்கைப் பாடினியார்" எனப் பெயர் பெறுதல்போல, இவர் பாடிய பாடல்கள் அறுபத்தேழில், புறப்பொருள் தழுவிய பாடல் ஒன்று தவிர்த்து[74] ஏனைய அறுப்பத்தாறும் நற்றிணையில் பத்தும்,[75] குறுந்தொகையுள், பத்தும்,[76] அகநானூற்றில் பனிரெண்டும்,[77] கலித்தொகையில் முப்பதும்[78] அகத்திணைப் பொருள் தழுவியனவே.

இவர் புலவர் மட்டுமன்று, புலவர்களாலும், புகழ்ப் பெற்றவர். புலவர் பேய்மகனார், பகைவெல்லும். பேராண்மையினையும், பாணர்களுக்குப் பொன்மாலையினையும் பொற்றாமரை மலரையும் அளிக்கும் கொடைப்பெருமையையும், பாராட்டி உள்ளார்.[79]

போரில், ஆற்றல்காட்டிப் பகை வென்றுவிட்ட நிலையில், உயிர்விட்ட வீரனைக் "கடன் முடித்த காளை", எனப்பாராட்டியுள்ளார், பாலை பாடியவர்.[80]

அகத்துறை தழுவிய பாடல்களில் "பொன்மலிந்த கொண்கான நாட்டவன் நன்னன்" எனவரலாறு உணர்த்தியது சிறிதாக,[81] மகள் பிறந்தது தாய்வீட்டில்தான் என்றாலும் அவள் சென்று புகழ் ஈட்ட வேண்டியது, மணந்து புகுந்த வீடு தான்,[82] என்பது போலும் அரிய பெரிய உண்மைகளை, அள்ளி அள்ளி வழங்கி உள்ளார், விரிப்பின் பெருகும்!

## மருதம்பாடிய இளங்கடுங்கோ

சேரர் குலத்தவர். இவர் பாடிய பாடல்கள் நற்றிணையில் ஒன்று[83] அகநானூற்றில் இரண்டு[84] ஆக மூன்று பாடல்களே எனினும், அவற்றை மருதத்திணைப்

பொருளை விளங்கப் பாடியுள்ளமையால் இப்பெயர் பெற்றார். ஆண் மகன், பகைவராலும் போற்றப்படும் சிறந்தவனே எனினும், ["செறுநரும் விழையும் செம்ம லோன்",] பரத்தையர் தொடர்பு கொள்ளுதல் போலும் பழிதரு செயல் செய்வனாகிவிடின், தலைமகளே அல் லாமல் அவள் தோழியர்களாலும் "நாணிலி" எனப் பழிக்கப்பட்டுவிடுவான் என்பதை அறிவித்துள்ளார்.[85]

அஃதை எனும் பெயருடைய சோழன் ஒருவன், பருவூரில் நடந்த போர்க்களத்தில் சேர, பாண்டியப் பெருவேந்தர்களை வென்று, அவர்தம் களிற்றுப் படை களைக் கவர்ந்து கொண்ட வரலாறு உணரவும் துணை புரிந்துள்ளார்.[86]

## முடங்கிக் கிடந்த நெடுஞ்சேரலாதன்

சேரர் குடிவந்தவராயினும், உடல்நலக் குறை வாலோ, அல்லது வேறுபிற காரணத்தாலோ செயல் இழந்துகிடந்த நிலையிலும், பாடல்பாட மறந்துவிட வில்லை. அவர் பாடிய பாட்டு ஒன்றேஆயினும்[86] (அகம் :30) அதில் மீனவர்தம் தொழில்வளம், அவர்தம் கொடை வளம், அதேபோல் உழவர் தொழில் வளம், அவர்தம் கொடை வளங்களையும், தன் தோழியின் காதலன் வரத்தவறியபோது, அவனைக்கண்டு, "வந்துசென்றால் உன் பெருமை கெட்டுவிடுமோ?" எனக் கடிந்து கேட்கும் சிறப்பையும் விளக்கியுள்ளார்.

## சான்றெண் விளக்கம்

1. தொல். பொருள்—செய்யுள்—79
2. தொல். பொருள்—புறத்திணை—8
3. புறம்—2
4. ''அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ

.............................................

ஈரைம் பதின்மரும் பொருது களத்து ஒழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்''
முரஞ்சியூர் முடிநாகராயர்—புறம். 2

''ஓர் ஐவர், ஈரைம் பதின்மருடன்றெழுந்த
போரிற் பெருஞ்சோறு போற்றாது தானளித்த
சேரன்''

—சிலம்பு 4 : 29. ஊசல் வரி

5. அகம். 233
6. அகம். 168
7. புறம். 65
8. புறம். 66
9. ''கரிகால் வளவனொடு வெண்ணிப்பறந்தலைப்
பொருதுபுண் நாணிய சேரலாதன்
அழிகள மருங்கின் வாள்வடக் கிருந்தென''

—அகம். 55

10. அகம். 65
11. அகம். 233
12. அகம். 55

13. "………உதியஞ் சேரற்கு
வெளியன் வேண்மான் நல்லினி ஈன்ற மகன்
……………………………………
இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்"
பதிற்று—இரண்டாம் பத்து—பதிகம்.

"………நெடுஞ் சேர லாதற்குச்
சோழன் மணக்கிள்ளி ஈன்ற மகன்
……………………………
கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன்"
பதிற்று—பதிகம்—5

"………சேரலாதற்கு
வேளாவிக் கோமான்
பதுமன் தேவி ஈன்ற மகன்
…………………………………
களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்"
பதிற்று—பதிகம்—4

"குடக்கோ நெடுஞ் சேரலாதற்கு வேளன்
ஆவிக்கோமான் தேவி ஈன்ற மகன்
……………………… ………
ஆடுகோட் பாட்டுச் சேரலாதன்"
பதிற்று—பதிகம்—6

"இமய வரம்பன் தம்பி…
…………………………
பல்யானைச் செல்கெழு குட்டுவன்"
பதிற்று—பதிகம்—3

சிலம்பு; வாழ்த்து உரைப்பாட்டு மடை.

14. "அமைவரல் அருவி இமையம் விற்பொறித்து"
பதிற்று—பதிகம்—2.

"இமயத்து
முன்னோர் மருள வணங்கு விற்பொறித்து"
அகம். 127

சிலம்பு; வாழ்த்து : உரைப்பாட்டு

15. பதிற்று—பதிகம்—2
அகம். 127

16. ''............சேரலாதன்
மால் கடல் ஓட்டிக் கடம்பறுத்து இயற்றிய
பண்ணமை முரசு'' அகம். 347

''வலம்படு முரசிற் சேரலாதன்
முந்நீரோட்டிக் கடம் பறுத்து'' அகம். 127

''கடம்பு முதல் தடிந்த கடுஞ்சின வேந்து''
பதிற்று. 12

''கடம்பறுத்து இயற்றிய வலம்படு வியன் பணை''
பதிற்று. 17
—கடம்பின்

கடியுடை முழுமுதல் துமிய ஏஎய்
வென்றெறி முழங்குபணை செய்த வெல்போர்''
பதிற்று. 11

17. பதிற்று. 17
18. புறம். 62
19. புறம். 63
20. பதிற்று—பதிகம். 6
21. அகம். 396
22. அகம் 357
23. ''அண்ணலம் பெருங்கோட்டு அகப்பா எறிந்த
பொன்புனை உழிஞை வெல்போர்க் குட்டுவ''
பதிற்று. 22

''அகப்பா எறிந்த அருந்திறல்''
சிலம்பு. 28 ; 144

24. ''பண்ணெழு வேந்தரும், வேளிரும் ஒன்று மொழிந்து
கடலவும், காட்டவும் அரண்வலியார் நடுங்க''
பதிற்று. 30

25. பதிற்று. 21
26. மேலது.
27. "ஆகெழு கொங்கர் நாடகப் படுத்த
வெல் கெழு தானை வெருவரு தோன்றல்"
பதிற்று. 22

28. சிலம்பு. 28:145—46
29. பதிற்று. 22
புறம். 266
சிலம்பு. 28 : 138-9.

30. "இமைய வரம்பன் தம்பி, அமைவர
உம்பற் காட்டைத் தன்கோல் நிறீஇ
அகப்பா எறிந்து பகல்தீ வேட்டு.
மதியுறழ் மரபின் முதியரைத் தழீஇக்
கண்ணகன் வைப்பின் மண் வகுத்து ஈத்துக்
கருங்களிற்று யானைப் புணர்நிரை நீட்டி
இருகடல் நீரும் ஒரு பகல் ஆடி
அயிரை பரைஇ, ஆற்றல் சால் முன்போடு
ஒடுங்கா நல்லிசை, உயர்ந்த கேள்வி
நெடும் பாரதாயனார் முந்துறக் காடு போந்த
பல்யானைச் செல் கெழு குட்டுவன்"
பதிற்று—பதிகம். 3

31. சிலம்பு. 25:152-5
32. பதிற்று. 41; 45; 46: 48
அகம். 212

33. "வெல் போர் அறுகை
சேண னாயினும் கேள் என மொழிந்து
.................................
.................................
மோகூர் மன்னன் முரசம் கொண்டு
நெடுமொழி பணித்து, அவன் வேம்பு முதல் தடிந்து
முரசு செய முரச்சிக் களிறு பல பூட்டி
ஒழுகை உய்த்தோய்" பதிற்று. 44

"பழையன் காக்கும் கருஞ்சினை வேம்பின்
முழாரை முழுமுதல் துமியப் பண்ணி"
பதிற்று—பதிகம். 5

"பழையன் காக்கும் குழைபயில் நெடுங்கோட்டு
வேம்பு முதல் தடிந்த......................
போந்தைக்கண்ணிப்பொறைய"
சிலம்பு : 27:124-6

34. "சிறு குரல் நெய்தல் வியலூர் எறிந்த பின்"
சிலம்பு : 28:115

"சிறு குரல் நெய்தல் வியலூர் நூறி"
பதிற்று—பதிகம். 5

35. "ஆர் புனை தெரியல் ஒன்பது மன்னரை
நேரிவாயில் நிலைச் செரு வென்று"
சிலம்பு : 28:116-7

"மைத்துன வளவன் கிள்ளியொடு பொருந்தா
ஒத்த பண்பினர் ஒன்பது மன்னர்
.......................................
ஒன்பது குடையும் ஒரு பகல் ஒழித்து'
சிலம்பு : 27-118-22

"ஆராச் செருவிற் சோழர் குடிக்கு உரியோர்
ஒன்பதின்மர் வீழ வாயிற் புறத் திறுத்து"
பதிற்று—பதிகம். 5

36. சிலம்பு. 28:118-9

37. "கங்கைப் பேரியாற்றுக் கடும்புனல் நீத்தம்
எங்கோ மகளை ஆட்டிய அந்நாள்,
ஆரிய மன்னர் ஈரைஞ் ஞூற்றுவர்க்கு
ஒரு நீயாகிய செரு வெங்கோலம்
கண் விழித்துக் கண்டது கடுங்கண் கூற்றம்"
சிலம்பு : 25:160-4

38. சிலம்பு; குன்றக் குரவை: வரந்தரு காதை
39. சிலம்பு வரந்தரு காதை 159-163
40. சிலம்பு. 26; 62-7
41. ''இரும்பொன் வாகைப் பெருந்துறைச் செருவில்
பொலம்பூண் நன்னன் பொருது களத்து ஒழிய''
அகம். 199

''பொன்னங் கண்ணிப் பொலந்தேர் நன்னன்
சுடர்வீ வாகைக் கடிமுதல் தடிந்த
தார்மிகு மைந்தின் நார்முடிச் சேரல்''
பதிற்று. 40
42. ''நெடுமிடல் சாயக் கொடுமிடல் துமியப்
பெருமலை யானையொடு புலங்கெட இறுத்து''
பதிற்று. 32
43. ''குடக்கோ நெடுஞ் சேரலாதற்கு வேளன்
ஆவிக் கோமான் தேவி ஈன்ற மகன்;
தண்டாரணியத்துக் கோட்பட்ட வருடையைத்
தொண்டியுட் டந்து கொடுப்பித்துப், பார்ப்பார்க்குக்
கபிலையொடு குடநாட்டு ஓர்ஊர் ஈத்து,
வான வரம்பன் எனப் பேரினிது சுருக்கி,
மன்னரை ஓட்டிக்,
குழவி கொள்வாரிற் குடி புறந் தந்து,
நாடல்சான்ற நயனுடை நெஞ்சின்
ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்''
பதிற்று—பதிகம். 6
44. புறம். 13
45. ''பல்வேல் தானை அதிகமானோடு
இருபெரு வேந்தரையும் உடனிலை வென்று
...........................
தகடூர் எறிந்து நொச்சி தந்து எய்திய
அழுந்திறல் ஒள்ளிசைப் பெருஞ் சேரல்
இரும்பொறை''
பதிற்று—பதிகம். 8

"வெல்போர் ஆடவர், மறம் புரிந்து காக்கும்
வில்பயில் இறும்பின் தகடூர் நூறி"

பதிற்று. 78

46. "பொருமுரண் எய்திய கழுவுள் புறம் பெற்று"

பதிற்று. 88

"ஆன்பயம் வாழ்நர் கழுவுள் தலை மடங்க"

பதிற்று. 71

47. புறம். 50
48, பதிற்று—பதிகம். 9
49. பதிற்று. 82,83,85,86,88,90
புறம். 210, 211
50. புறம். 6
51. புறம். 54
52. அகம். 346
53. புறம். 49
54. புறம். 394
55. "விறல் மாந்தரன்" பதிற்று. 90
56. "மாந்தரம் பொறையன்" அகம். 142
57. புறம். 367
58. புறம். 20
59. புறம். 53
60. புறம். 125
61. புறம். 53
62. புறம். 229
63. புறம். 398
64. அகம். 153
65. குறுந். 22
66. நற். 18
67. புறம். 74
68. குறுந். 268
69. நற். 145; 236; 345
70. குறுந். 100; 243
71. நற். 345

72. அகம். 148
73. புறம். 245
74. புறம். 242
75. நற். 9; 48; 118; 202; 224; 251; 337; 348; 384; 391
76. குறுந். 37; 116; 124; 135; 137; 209; 231; 262; 283; 398
77. அகம். 5; 99; 111; 155; 185; 223; 261; 267; 291; 313; 397; 379.
78. கலி. 1 முதல் 35 வரை
79. "பாடல் சான்ற விறல் வேந்தன்" புறம். 11
80. புறம் 242
81. நற். 391
82. கலி. 9
83. நற். 50
84. அகம். 96; 176
85. நற். 50
86. அகம். 96
87. அகம். 30

# 3. சோழர்

மூவேந்தருள் நடுவண் வைத்துச் சிறப்பிக்கப் பெறு பவர் சோழர். கிள்ளி, கிள்ளிவளவன், செம்பியன், சென்னி, வளவன், எனவும் அழைக்கப்பெறுவர். சோழ அரசின் தோற்றமும் தொன்மையும் அறிய இயலாதன வாதலைப் போலவே, அவர் பெயரின் தோற்றக் காரணங் களும் அறியப்படாதன. சங்கம் அமைத்துத் தமிழ் வளர்த்த பெருமை பாண்டியர்க்கு உரியது என்றாலும், அப்பெருமை சோழர்க்கும் உரித்து. சோழ நாடு, செந் தமிழ் நாட்டினைச் சேர்ந்த பன்னிரு நாடுகளில், புனல் நாடு, பன்றி நாடு, அருவா நாடு என்ற நாடுகளை உள்ள டக்கிய இன்றைய, தஞ்சை, திருச்சி, புதுக்கோட்டை வட, தென்னார்க்காட்டு மாவட்டங்களை உள்ளடக்கிய நாடாம். ஆர்க்காடு, உறையூர், கழார், குடந்தை, குராப்பள்ளி, சாய்க்காடு, தலைச் செங்காடு, நெய்தலங் கானல், புகார், போர், பிடவூர், வல்லம், வெண்ணி என்ற இவையெல்லாம் சோழ நாட்டுப் பேரூர்களே ஆயினும், தலைநகராம் சிறப்புற்றிருந்தவை தொடக்கத்தில் உறை யூரும், பின்னர்ப் புகாருமே ஆகும்.

சோழ நாடு, சங்க இலக்கியங்களில் பாராட்டப் பெற் றிருப்பதோடு, பிறநாட்டு வரலாற்றுப் பேரறிஞர் களாலும் பாராட்டப் பெற்றுளது. கி. பி. 81—96ல், எழுதப்பெற்ற, "செங்கடற் செலவு" எனும் பொருளு டைய "பெரிபுளூஸ் மாரிஸ் எரித்ரியா" என்ற நூலின் ஆசிரியர், புகாரைக் "கடற்கரை நாடு" என்றும், உறை

யூரை, ''அர்கரு'' என்றும் குறிப்பிட்டுள்ளார். அவர்க்கு அரை நூற்றாண்டு கழித்து வாழ்ந்த ''தாலமி'' என்பார், புகாரை ''கபெரீஸ்'' என்றும், உறையூரை ''ஒர்துரா ரெகியா சோரநடி'' என்றும், நாகையை ''நிகாமா'' என்றும் குறிப்பிட்டுள்ளார். ''மிலிந்தா அரசனுடைய கேள்விகள்'' என்ற, கி. பி. முதல் நூற்றாண்டில் எழுதப் பெற்ற, புத்த நூல், ''கோளப்பட்டினம்'' என்ற ஒன்றைக் குறிப்பிடுகிறது.

வான் பொய்ப்பினும் தான் பொய்யாக் காவிரி பாய்வதால், ஒருவேலி நிலம் ஆயிரம் கலம் நெல்விளையும் எனவும்,[1] ''ஒரு யானை படுக்கும் அளவான சிறிய இடம் ஆயிரம் யானைகளைப் புரக்கும் நெலலை விளைவிக்கும்[2] எனவும் பாராட்டப்பெற்று, இன்றும் தென்னாட்டு நெற் களஞ்சியமாக சோழநாடு விளங்குவதால், அது ''காவிரி நாடு'' எனவும், ''காவிரி சூழ்நாடு'' எனவும், ''காவிரி புரக்கும் நாடு'' எனவும் அழைக்கப்பெறும்.

'காவிரி கடலோடு கலக்குமிடத்தில் அமைந்த புகார், கடல் வாணிபத்தால் சிறந்து விளங்கிற்று. காற்றின் இயக்கத்தால்; கடல்வழி வந்த கலங்கள் கொணரும் குதிரை போன்றவற்றை இறக்குவதும்; பொதியமலையில் வளர்ந்த அகில்; ஆரம்போலும் மரங் களையும் முத்துக்களையும் அக்கலங்களில் ஏற்றுவதும் இரவுபகல் ஓயாது நிகழ்ந்து கொண்டிருக்கும்.

அரசாட்சியின் தலைநகராம் உறையூரில் மகதச் சிற்பரும்; மராட்டக் கொல்லரும் யவனத் தச்சரும் வந்து வனப்புற வனைந்த அரசன் பெருங்கோயில் முதலாயின விளங்கும். நால்வகைப் படைவீரர், உழவர், மருத்துவர், காலக்கணிதர், மறையோர், பல்வேறு வணிகர், முத்துக் கோப்போர் போலும் பல்வகைத் தொழிலாளர்,

நாழிகைக்கணக்கர் கணிகையர், கூத்தர்[8] போலும், பல்வேறு வகையினர்க்கு எனத் தனித்தனி அமைந்த தெருக்கள். இருந்தன. சோழ நாடு, நகரங்களின், பெருமைகள் இவை.

அகத்தியர் வேண்ட, காவிரி ஆற்றைத் தோற்றுவித்தவன் எனவும்; அரசர் குலத்தை எல்லாம் அழித்து வந்த, பரசுராமனுக்கும் தப்பி உயிர் வாழ்ந்தவன் எனவும் கூறப்படும் "காந்தமன்," பரசுராமன் கண்ணில் படாமல் மறைந்து கொண்ட காந்தமன் வேண்ட, சோழ நாட்டைச் சில காலம் ஆண்டவன் எனவும், "மருதி" என்பவள்பால், தவறாக நடந்து கொண்ட தன் இளைய மகனைக் கொன்று நீதி வழங்கியவன் எனவும், தன் தம்பியின் இறப்பிற்குக் காரணமாக இருந்த மருதியைப் பழிதீர்க்க முனைந்த தன் மூத்த மகனையும் கொன்று நீதி வழங்கியவன் எனவும் கூறப்படும் 'சுகந்தன்', வல்லூறு என்ற பறவையால் துரத்தப்பட்டுத் தன்பால் அடைக்கலம் புகுந்த புறாவுக்காக, துலை புகுந்து உயிர் விட்ட பெருமைக்கு உரியவன் எனப்படும். "சிபி" அமரர்க்கும், அவுணர்க்கும் நடைபெற்ற போரில்; அமரர்க்குத் துணையாகப் போரிட்டு வென்று, அதற்குக் கைமாறாகக் காவல் பூதத்தைக் கொண்டுவந்து, புகார் நகரத்து நாற்சதுக்கத்தில் நிறுத்தியவன் எனப்படும் "முசுகுந்தன்", தேரோடும் வீதியில் தேரோட்டிச் செல்லும்போது, தானே வந்து வீழ்ந்து தேர்ச்சக்கரத்தில் சிக்குண்டு இறந்து போன தன் கன்றிற்கு நீதிகோரி வந்து முறைகேட்ட பசுவிற்காகத் தன் மகனைத்தேர் ஏற்றி, நீதி வழங்கிய "மனு", வானத்தில் தொங்கிக் கொண்டு வானவர்க்குத் தொல்லை கொடுத்திருந்த கோட்டைகள் மூன்றினை

அழித்தவன் என்ற காரணம் காட்டியும், அஞ்சி என்பான் வானம் என்ற தன் தலைநகரில் கட்டியிருந்த தொங்கும் கதவுகளைக் கொண்ட கோட்டை, "அகப்பா" என்ற கோட்டை, கழுமலக்கோட்டை ஆகிய மூன்று கோட்டைகளை அழித்தவன் என்ற காரணம் காட்டியும், "தூங்கெயில் எறிந்த தொடித்தோள் செம்பியன்" என அழைக்கப்படும் சோழன், ஆகிய இவ்வறுவரும் வரலாற்றுக்கு முந்திய சோழ அரசர்களாவர்.

சங்க இலக்கியங்கள் துணையால், வரலாறு அறியப்பட்ட சோழ அரசர்கள் பலராவர். அவர்கள் அனைவரையும், இன்னான் மகன் இன்னான் என்றோ, இன்னானுக்குப் பின்னர் அரியணை ஏறியவன், இன்னான் என்றோ அறுதியிட்டுக் காணல் அரிது ஆதலின், அவர் தம் பெயர்களின் அகர வரிசைப்படி, அவர்களின் வரலாற்றினை வரைவாம்.

## இராசசூயம்வேட்ட பெருநற்கிள்ளி

இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, சங்க காலச் சோழ வேந்தர்களுள் காலத்தால் பிற்பட்டவன். அரசு பலவற்றை அழித்துப்பெருமை கொண்டவரே இராசசூய வேள்வி இயற்றுதல் கூடும் என்ப. அத்தகு வேள்வி செய்த பேரரசனாவன் இப்பெருநற்கிள்ளி.

இவனைப்பாடிய புலவர்கள்; உலோச்சனார், ஔவையார், பாண்டரங்கண்ணனார். வடமவண்ணக்கன் பெருஞ்சாத்தனார் ஆகிய நால்வராவர். உலோச்சனார் அவன் நாற்படைப் பெருமையைப் பொதுவாக பாராட்டியுள்ளார்[3] வேந்தர் மூவரும் ஒருவரை ஒருவர்

அழிப்பதிலேயே கருத்துடையவர் என்பதற்கு மாறாக இவன் தன் காலத்தே அரசாண்டிருந்த, மாரிவெண்கோ என்ற சேர அரசனோடும், கானப் பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதி என்ற பாண்டியமன்னரோடும்நட்பு கொண்டு, ஒருங்கு வீற்றிருந்த காட்சி நலம் கண்டு, உங்கள், இக்காட்சி, அந்தணர் வளர்க்கும் முத்தீக் காட்சி போல் கண்ணுக்கும் கருத்துக்கும் மகிழ்ச்சி அளிக்கிறது எனப் பாராட்டியுள்ளார் ஔவையார்[4] அவன் பகை நாட்டு மீது போர் தொடுத்துப் போகுங்கால் அந்நாட்டில், அவன் படை அந்நாட்டிற்கு விளைவிக்கும் பேரழிவினை விளக்குவதன் மூலம் அவன் படைப் பெருமையைப் பாராட்டியுள்ளார் புலவர் பாண்டரங் கண்ணனார்[5] போரில் பெறும் வெற்றியெல்லாம், அவன் ஆற்றலால், அவன் நாற்படை ஆற்றலால் வந்தனவே எனினும், அவற்றிற்குக் காரணம் தனக்குப் படைத் துணையாக வந்த தேர்வண் மலையனே எனக் கூறிப் பிறர் ஆண்மையைப் பாராட்டத் தெரிந்த பெருமைக்கு உரியவன் இராசசூயம் வேட்டவன் எனப் பாராட்டியுள்ளார் புலவர் வடம வண்ணக்கண் பெருஞ் சாத்தனார்[6] தன் புகழ்பாடும், புலவர், பாணர், பொருநர், கூத்தர் முதலியோர்க்குப் பொன்னும், மணியும், முத்தும் வகைவகையான உடைகளும் தேன் என இனிக்கும் உணவையும் கொடுக்கும், அவன் கொடைத் தன்மையைப் பாராட்டிள்ளார் புலவர் உலோச் சனார்.[7]

# இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி

"சோழன் நலங்கிள்ளியை உறையூர் முதுகண்ணன் சாத்தனார் பாடியது" எனக் கொளுகூறும் பாட்டிலும்,[8] "சோழன் நலங்கிள்ளியை ஆலத்தூர் கிழார் பாடியது" எனக் கொளுகூறும் பாட்டிலும்[9], மூலத்தில் "சேட்சென்னி நலங்கிள்ளி" என்ற பெயர் இடம் பெற்றுள்ளது. ஆனால், "இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னியைக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் பாடியது" எனக் கொளுகூறும் பாட்டில்,[10] பாட்டுடைத்தலைவன் பெயர் சேட்சென்னி நலங்கிள்ளி என வராது, "இயல்தேர்ச்சென்னி" என்றே வந்துள்ளது. சோழன் நலங்கிள்ளியைக் கோவூர் கிழார் பாடியனவாக வரும் பாடல்கள் நான்கில் [புறம். 31, 32. 33, 382] 382ஆம் பாட்டில், பாட்டுடைத் தலைவன் பெயர், "நலங்கிள்ளி;, என்றே வந்துள்ளது. "சோழன் நலங்கிள்ளியை உறையூர் முதுகண்ணன் சாத்தனார் பாடியது [புறம் :27, 28, 29, 30] என்றும், அவனைக் கோவூர் கிழார் பாடியது [புறம்.31 32, 33, 382] என்றும், இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னியைக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் பாடியது]புறம:61] என்றும். புறம். 73, 75 பாடல்களைக் குறிப்பிடும் போது நலங்கிள்ளி பாடியது என்றும் கூறியிருப்பதை நோக்க, இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி வேறு, நலங்கிள்ளி, வேறு என்பது உறுதியாகிறது.

தமிழரசர்கள், தாம் பெற்ற வெற்றிகளைத் தம் பெயர்களுக்கு முன்னால் இணைந்துக் கொண்டு "ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்" என்பது போல் வழங்கப் பெறுதல் போல அரசர்கள் உயிர்விட்ட இடங்களை அவர்தம் பெயர்களுக்கு முன் இணைத்து இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறன், காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி, குராப் பள்ளித்துஞ்சிய கிள்ளிவளவன், குளமுற்றத் துத் துஞ்சிய கிள்ளிவளவன், கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி, சிக்கற்பள்ளித் துஞ்சிய செல்வக் கடுங்கோ வாழியாதன், சித்திர மாடத்துத் துஞ்சிய நன்மாறன், வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி என வழங்குவது போல் இவன் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி என அழைக்கப்பெற்றான்.

நிலையானவை விளங்கக்கூறி, "வருந்தி வருவார்க்கெல்லாம் வாரி வழங்கிப் புலவர்பாடும் புகழ் உடையோனாகுக" எனப் பாராட்டியுள்ளார் உறையூர் முதுக்கண்ணன் சாத்தனார்[11] அவன் நாட்டு வளங்களை விளங்கக் கூறி அவனைப் பகைத்தவர் வாழ்ந்ததும் இல்லை; அவன் அடிபணிந்தவர் வருந்தியதும் இல்லை என அவன் ஆற்றல் பெருமையைப் பாராட்டியுள்ளார் கோனாட்டு எறிச்சிலூர் மாடலம் மதுரைக் குமரனார்[12]. அவன் படைவரிசையுள் முதலில்செல்வார் பனைநுங்கு தின்ன, இடையில் செல்வார் பனம்பழம் தின்ன, ஈற்றில் செல்வார் பனங்கிழங்குதின்ன, நீண்டது அவன்படை' எனப்படைப்பெருமையைப் பாராட்டியுள்ளார் ஆலத்தூர் கிழார்.[13]

## உருவப்ப∴றேர் இளஞ்சேட்சென்னி

சங்க கால சோழ அரசர்களுள் காலத்தால் முதற் கண் வைத்துச் சிறப்பிக்கப் பெறுவோன் உருவப்ப∴றேர் இளஞ்சேட்சென்னி, கரிகாற்பெருவளத் தானின் தந்தை. கரிகாலன், "உருவப்ப∴றேர் இளையோன்சிறுவன்" என்பது பொருநராற்றுப்படை[14] மனைவி, அழுந்தூர் வேளிர் குடியில் வந்தவர். இளஞ்சேட்சென்னி, அழகிய பல தேர்களைக் கொண்டவன் என்பர் பரணர்[16] அவனோடு பகை கொண்ட நாட்டவர், தாயில்லாக் குழந்தைபோல் ஓயாது அழுவர் என்றும் பரணர் கூறுவர்.

புலவர் ஊன்பொதி பசுங்குடையரால் பாராட்டப் பெற்றவராகப் பாமுளூர் எறிந்த நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னி என்பவனும்,[17] செருப்பாழி எறிந்த இளஞ்சேட்சென்னி என்பவனும்[18] ஆக இருவர் இருக் கின்றனர். நெய்தலங்கானல் இளங்சேட்சென்னி வென்ற பாமுளூரும், இளஞ்சேட்சென்னி வென்ற பாழியும் சேர நாட்டைச் சேர்ந்தனவாம் ஆதலானும் இருவர்க்கும் இளஞ்சேட்சென்னி என்றபெயர் ஒற்றுமை இருப்பதாலும், இருவரையும் பாராட்டிய புலவர் ஒருவ ராகவே இருப்பதாலும். பாமுளூர் எறிந்தானும், பாழி எறிந்தானும் வேறு வேறு அல்லர் ஒருவரே.

வடுகரை ஓட்டிவிட்டுப் பாழியை அழித்த இளம் பெருஞ்சென்னி என்பவன் ஒருவன் அகநானூற்றில் கூறப்பட்டுள்ளான்[19] செருப்பாழி எறிந்தவனும் வடுகரை வென்றான் எனப் புறநானூற்றில் கூறப்பட்டுள்ளான்.[20] "பாழியை அழித்தலும் வடுகரை வெற்றிகோடலும் இருவர்க்கும் ஏற்றிக் கூறப்பட்டுள்ளமையாலும்; இளஞ்சேட் சென்னி, இளம்பெருஞ்சென்னி என்ற பெயர்

ஒற்றுமையாலும், அகத்தில் கூறப்பெற்ற இளம் பெரும் சென்னியும், பாழி எறிந்த இளஞ்சேட் சென்னியும் வேறு வேறு அல்லர், ஒருவரே,

சேரமான், பாமுளூர் எறிந்த இளஞ்சேட் சென்னியைப் பாராட்டும்போது, "இயல்தேர் அண்ணல்[21] என, அவன் தேர் உடைமை பாராட்டப்பெற்றுள்ளமையாலும், இளஞ்சேட் சென்னி என்ற பெயர் ஒற்றுமையாலும், உருவஃறேர் இளஞ்சேட் சென்னியின் மகனாகிய கரிகாலனின் பகைவர்களாகப் பாழியில் பெரும் பொருள் சேர்த்து வைத்த வேளிர்களும்[22] அவர்கள் தலைவனாம் இருங்கோவேளும்.,[23] கூறப்பட்டுள்ளமையாலும், அஃவேளிர்கள், கரிகாலன் மீது, அவன் இளமைக்காலத்திலேயே போர் தொடுத்தது, அவன் தந்தை தங்கள் பாழியை அழித்தமைக்குப் பழிவாங்கும் எண்ணத்தால் இருக்கலாம் ஆதலாலும்; பாழிக் குரியோன் எனப்பட்ட நன்னன், களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரலொடு வாகைப் பறந்தலையில் போரிட்டு இறந்தான். பாழி, மீண்டும் நாற்முடிச்சேரலுக்கு உரியதாகிவிட்டது[24] இச்செய்திகளால் பாழியொடு தொடர்புடையதாகத் தோன்றும் வாகைப் பறந்தலையில், கரிகாலன், ஒன்பது மன்னர்களை வென்றான்[25] என கூறப்படுவதால், கரிகாலனும், அப்பாழியோடு யாதேனும் தொடர்புடையவனாதல் வேண்டும் எனக் கருத இடமுண்டு, ஆதலாலும்; அவன் தந்தையாம் உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னி, பாமுளூர் எறிந்த இளஞ்சேட்சென்னி, செருப்பாழி எறிந்த இளஞ்சேட் சென்னி, இளம்பெரும் சென்னி என்ற நால்வரும் வேறு வேறு அல்லர், ஒருவரே.

## கரிகாற் பெருவளத்தான்

கரிகாற் பெருவளத்தான் பெயர். சங்க இலக்கியங்களில், "கரிகாலன்" என "அன்" விகுதி பெறாமல் கரிகால் 'என்றே வழங்கப் பெற்றுள்ளது[26] அவன் தன் நாட்டை வளப்படுத்திய சிறப்பால்' அவன் பெயரோடு "வளவ" "வளவன்" என்பது இணைய "கரிகால்வளவன்[27]"பெருவளக்கரிகால்,[28] கரிகால்என்பது இன்றி "வளவன்" என மட்டுமே வந்துள்ளது.[29] வயல் வளத்தோடு, வாணிப வளத்தால், செல்வத்திருவையும் சேர்த்த சிறப்பறிந்து "திருமாவளவன்" என்றும் அழைக்கப் பெற்றுள்ளான்[30]

கரிகாற் பெருவளத்தான், அவன் இளமைக் காலத்தில், அவனைச் சிறையிட்டதோடு அமையாது, அவன் பகைவர், சிறையைச் சூழத் தீயையும் வைத்தனர்' கரிகாலன், சிறையினின்றும் வெளியேறிய போது, அத்தீயால் அவன் கால் சிறிதே கரிந்து போக, அவன் பெற்றோர் இட்டபெயர் மறைந்து போக, "கரிகாலன்" என்ற காரணப் பெயரே நிலைத்து விட்டது.[31]

உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னியும், அழுந்தூர் வேளிர் தலைவன் மகளும், முறையே, இவன் தந்தையும், தாயும் ஆவர்[32] கரிகாலன் மனைவியரில் ஒருவர், நாங்கூர் வேளிர்குலச் செல்வி ஆவள்;[33] நாங்கூர் வேளிர்குலச் செல்வி மட்டுமல்லாமல், வேறு சில மனைவியரும் இருந்தனர்[34] அவர்கள் இன்னார் எனத் தெரிய வாய்ப்பில்லை. அதே போல், அவன் மக்கள் பலர் என்பது பட்டினப்பாலையாய்[35] தெரிகிறது என்றாலும்' அவர்கள் இன்னார் என்பதை அறியும் வாய்ப்பும் இல்லை. கரிகாலன் மகள் ஆதிமந்தி

என்பவள்; அவள் கணவன், ஆட்டனத்தி என்ற சேரர்குல இளவல்[36]

கரிகாலன், அவன் தாயின் கருப்பையில் இருக்கும் போதே அரச உரிமையைப் பெற்றுவிட்டான் எனப் பாராட்டப் பெற்றுள்ளான். "தாய் வயிற்றிலிருந்து தாயம் எய்தி" என்ற பொருநராற்றுப்படைத் தொடரைக் காண்க[37] இத்தொடர் கொண்டு அவன் பிறந்தமைக்கு வேறு கற்பனைக் கதையினைக் கட்டி விடுவாரும் உளர். அது நம்புதற்கு இயலாதது.

உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னி இறந்து விட்டானாகவே, அரசைக் கைப்பற்றும் காலம் கருதி யிருந்த அவன் தாயத்தார், நாட்டில் குழப்பத்தையும் உண்டாக்கிவிட்டுக் கரிகாலனையும் சிறையில் வைத்து விட்டனர். சிறையில் சில ஆண்டு இருந்து வளர்ந்து வன்மை பெற்றதும், தன்னை அகப்படுத்திய குழியைத் தன் கோடுகளால் குத்திக் குத்திக் குழியைத் தூர்த்து விட்டு வெளியேறித் தன் இனத்தோடு சேர்ந்து கொள்ளும் இளைய களிறேபோல், தன் வாள் வலியால், பகைவென்று சிறையினின்றும் வெளியேறி விட்டான் கரிகாலன்[38] கரிகாலனின் இம்முயற்சிக்கு அவன் அம்மானாகக் கருதப்படும் இரும்பிடர்த் தலையார் என்ற புலவர் துணைபுரிந்தார் எனப் பழமொழி வெண்பா ஒன்றைச் சான்று காட்டிக் கூறுவாரும் உளர்.

கரிகாலன் அரசுரிமை பெற்ற உண்மை நிலை இதுவே ஆகவும், அரசிழந்திருந்த சோழநாட்டார் அரச யானை ஒன்றைக் கட்டவிழ்த்து விட்டு, ஆட்சிக் குரியானைத் தேர்ந்து கொண்டு வருமாறு பணிக்க அது,,

கருவூரில் இருந்த கரிகாலன் கழுத்தில் மாலை சூட்டிக் கொண்டு வந்தது எனக் கற்பனைக் கதை ஒன்றைக் கூறுவர். அது நம்புதற்கு உரியது அன்று; காரணங்கள் பல உள; விரைப்பின் பெருகும் என அஞ்சி ஈண்டு எடுத்து வைக்கப்படவில்லை.

தனக்குரிய அரியணையில் முறைப்படி அமர்ந்து விட்ட கரிகாலன் தன் தாயத்தார்க்குத் துணை நின்ற பகைவர் பலரையும் வெற்றிகொள்ள வேண்டியிருந்தது. வெண்ணி வாயில் என்ற இடத்தில் நடைபெற்ற அவன் கன்னிப் போரில் சிங்கக்குட்டி ஒன்று தன் முதல் வேட்டையிலேயே, பல களிறுகளைக் கொன்றதே போல், தன் நனி இளமைப்பருவத்திலேயே, தன்னை வந்து எதிர்த்த சேர, பாண்டியர்களையும், பதினோரு வேளிர்களையும் வென்றான். வேந்தர் இருவரும் இறந்தனர். அவருள் சேரன் மட்டும் தான் பெற்ற புறப்புண்ணுக்கு நாணிவடக்கிருந்து உயிர் விட்டான்.[39]

வெண்ணிப் போரில் தோற்ற வேளிர் பதினொருவரில் உயிர் பிழைத்திருந்த ஒன்பதின்மர்களை மீண்டும் வாகைப் போரில் எதிர்த்து வென்று, அவர் வெண்கொற்றக் குடைகளைக் கவர்ந்து கொண்டான் கரிகாலன்.[40]

வெண்ணி, வாகைப் போர் வெற்றிகளால் மட்டும், பகைவர் தனி இளமைக் காலத்தே தன்னைச் சிறையிட்டதால் கொண்ட சினம் தணியாதாகவே, கரிகாலன், தமிழ் நாடெங்கும் சென்று, ஒளியர், அருவாளர், வடவர் குடவர், தென்னவர், பொதுவர் இருங்கோவேளிர் என்ற பலரையும் வென்று வீறுகொண்டான்.[41]

தமிழ்நாடு முழுவதும் தன் ஆணைக்கீழ் அடங்கிய பின்னரும் வெற்றித் திருமகள் மீது கொண்ட வேட்கை குறையாதாகவே, வடநாடு சென்று, இடையில் உள்ள அரசர்களையெல்லாம் வென்று விட்ட பின்னர், இமயத்திற்கு அப்பால் உள்ள நாடுகளையும் வெற்றி கொள்ள முன்னேறிய போது,பனி மிகு இமயம், அம் முயற்சிக்குத் தடையாக நிற்கவே, அதன் உச்சியில் தன் புலிக்கொடியை நாட்டிவிட்டு மீளத் தொடங்கினான். அவ்வாறு மீள்வானுக்கு, வ ச் சி ர த ா ட் ட ா ன் கொற்றப்பந்தரையும் மகத நாட்டான் பட்டிமண்டபத்தையும், அவந்தி அரசன் தோரண வாயிலையும் கொடுத்து நண்பர்களாயினர்.[42]

கரிகாலனின் இவ்விமயப் படையெடுப்பு உண்மையில் நடைபெற்ற ஒன்று என்பதை **Imperial Gazetteer of India;—Sikkim Vol; 10: Page; 321; voi:22, Page:365, Hand Gazetteer of India: Cholas Pass. Encyclopeadia Brittanica: Sikkim, Vol 5, Page: 667; Vol 20, Page: 640** ஆகிய நிலைத்த ஆவணங்களைச் சான்று காட்டி உறுதி செய்துள்ளார் திருவாளர் மு.இராகவையங்கார் அவர்கள்[43]

கரிகாலன்; கட்டுக்கடங்கடங்காது பெருக்கெடுத்தோடிய காவிரிக்குக் கரையும்,அணையும் கட்டி, காவிரி நீர் கொண்டு சோழ நாட்டைச் சோற்று வளம்மிக்க நாடாக்கினான். மகாவம்சம், கரிகாலன் இலங்கை மீது படையெடுத்துச் சென்று; ஆங்குப் போரில்"தோற்ற பல ஆயிரம் வீரர்களைக் கைப்பற்றிக் கொணர்ந்து, அவர்களைக் கொண்டு காவிரிக்குக் கரை அமைத்தான் என்று கூறுகிறது.[44]

நாட்டு நெல் வளத்திற்கு வழிகண்ட கரிகாலன், செல்வ வளத்திற்கும் வழி காண வேண்டிக் காவிரி கடலோடு கலக்குமிடத்தில் உள்ள புகாரைச் சிறந்த கடல் துறையாகவும் உயர்த்திக் கடல் வாணிபம் பெருகச் செய்து நாட்டுச் செல்வ வளத்தையும் பெருக்கினான்.

நாடு எவ்வளவுதான் வயல் வளத்தாலும், வாணிக வளத்தாலும் சிறந்து விட்டாலும், நாட்டில் வழக்குகள் எழாது இருந்து விடுவதில்லை, மாறாக அப்போது தான் வழக்குகள் மிகும். அத்தகு வழக்குகளை விசாரித்து நீதி வழங்க, தலைநகர் உறையூரில் அறங்கூரவை அமைத்து, அதன் பொறுப்பை, ஆன்றவிந்தடங்கிய ஆன்றோர் பால் ஒப்படைத்ததோடு, அமையாது, தானும் அமர்ந்து, இத்துணை இளையோன், நரை முதிர் பெரியோர்களாலும் தீர்க்க முடியாத வழக்குகளையும் தீர்த்து வைக்கின்றானே, என்னே இவன் இளமையின் முதுமை என நாட்டவர் வியக்க நீதியும் வழங்கி வந்தான்.

நாட்டில் பகை இல்லை, பிணி இல்லை. ஆகவே புனலாடல் போலும் விழாக்களில் இன்பங்காணவும் அவன் தவறவில்லை. காவிரியில், கழார்த்துறையில், ஆண்டுதோறும் புனல்விழாக் கண்டு மகிழ்வன் அத்தகைய விழா ஒன்றில், தன் மகள் ஆதிமந்தியாரின் கணவன் ஆட்டனத்தி ஆடத் தொடங்கியபோது, காவிரிக்குப் புதியவனாகிய ஆட்டனத்தி காவிரியின் போக்கு அறியாது ஆடத் தொடங்கவே ஆறு அவனை அடித்துக் கொண்டு போய்விட்டது; அது அறிந்த கரிகாலன் அவனை மீட்கத்தானும் முயற்சிக்க, கணவன்

பால் கொண்ட காதல் மிகுதியால், ஆதிமந்தியும் உடன் சென்று அவனை மீட்டாள்.[45]

கரிகாலனைப் பாடிய புலவர்கள்; உருத்திரங் கண்ணனார், கடியலூர் உருத்திரங்கண்ணனார், கருங்குளவாதனார், பரணர், மாமூலனார், முடத்தாமக் கண்ணியார், வெண்ணிக் குயத்தியார் ஆகிய எழுவராவர். அவன் வாயில், "நகையுநர்க்கு அடையா நன் பெரும்வாயில்" எனப் புகழப்படும். தன்னைப் பட்டினப்பாலை மூலம் பாராட்டிய கடியலூர் உருத்திரங்கண்ணனார்க்குப் பதினாறு நூறாயிரம் பொன் பரிசு அளித்த பெருங்கொடையாளன்.[46]

பெருஞ்சேரலாதனைத் தோற்கடித்த கரிகாலன் வேறு; சிலப்பதிகாரம் கூறும், இமயம் வரை சென்ற திருமாவளவன் என அழைக்கப்படும் கரிகாலன் வேறு எனக் கூறுவாரும் உளர். அது பொருந்ாது, இருவரும் ஒருவரே என்பது, தென் இந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக்கழகம் வெளியிட்ட "திருமாவளவன்"[47] "சோழர்"[48] என்ற நூல்களில் விரிவாக விளக்கி யுள்ளேன், ஆண்டு கண்டு கொள்க.

## குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன்

இவன் வரலாறு அறியத் துணைபுரியும் புறநானூற்றுப்பாடல்கள் நான்கு. அந் நான்கின் கீழும் கொடுக்கப்பட்டிருக்கும் கொளுக்கள் அனைத்தும், குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன் என்றே குறிப்பிட்டுள்ளன. அவனைப் பாடிய புலவர்கள் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் (புறம்.58)

உறையூர் மருத்துவன் தாமோதரனார், (புறம்.60) கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் (197), கோவூர்க் கிழார் (373) ஆகிய நால்வர் ஆவர்.

அந்நால்வருள் காரிக்கண்ணனார், தமிழ் நாடாண்ட மூவேந்தர்கள், தமமுள் ஓயர்து போரிட்டுவந்ததற்கு மாறாக, குராப்பள்ளித் துஞ்சியான், அப்போது பாண்டி நாடாண்டிருந்த வெள்ளி அம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியோடு, நட்புகொண்டு, ஒருங்கிருந்த காட்சியைக் கண்டு இந்நட்புறவு இன்றே போல் இருக்கு மாயின், உங்களை வெல்வார் உலகில் ஒருவரும் இலர் என அறிவுரை கூறியுள்ளார். அவனைக் "காவிரி கிழவன்" எனவும், "அறம் துஞ்சும் உறந்தைப் பொருநன்" எனவும அழைத்துள்ளார்,[49]

தாமோதரனார், உப்புப்பொதி ஏற்றிய வண்டி வழியில் பெருங்குழியில் வீழ்ந்துவிட்டபோதும் தம் உரம் கொண்டு ஈர்த்துச் செல்லும் வலிய காளையே போல், அரச வண்டியை இடையூறு போக்கி நடத்திச் செல்ல வல்லவன் வளவன் என வாயாரப் பாராட்டிய தோடு, அவனை "வாய் வாள் வளவன்" எனப் பெய ரிட்டும் அழைத்துள்ளார்.[50]

மதுரைக் குமரனார், "அவன் பரிசில் அளிப்பது சிறிதே காலம் கடந்து விட்டதாக, அதுதானும் பொறாது பேராற்றலும், பெருட்செல்வம் உடையவரே எனினும் உள்ளம் இல்லாதாரை யாம் உள்ளேம்; வளம் குறைந்த சிற்றூர் அரசனே, ஆயினும் அவன் பண்புடை யனாயின், அவனையே உள்ளுவோம்" என அறிவுரை கூறியுள்ளார்.[51]

கோவூர் கிழார்; பாண்டியனோடு நட்பு கொண்டிருந்த குமாரப் பள்ளியான். கருவூர் ஆண்டிருந்த சேரனோடு மட்டும் ஏனோ பகை கொண்டு படை எடுத்துச் சென்று, அக்கருவூரை அழித்த காட்சியைப் பாராட்டுவார்போல், போரினால் மக்கள் படும் அவலத்தை அவன் மனங்கொளச் செய்துள்ளார்.[52]

இவன் வரலாறாக அறியத்தக்கன இவ்வளவே,

## குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்

இவனை, ஆடுதுறை மாசாத்தனார் (புறம் : 227), ஆலத்தூர்கிழார் (34, 35, 69,) ஆவூர் மூலங்கிழார் (38,40) இடைக்காடனார் (42) எருக்காட்டூர்த் தாயங் கண்ணனார் (397), ஐயூர் முடவனார் (228) கோவூர் கிழார் (41, 46, 70, 386) நல்லிறையனார். (393) மாறோக்கத்து நப்பசலையார் (37, 39, 226) வெள்ளைக் குடி நாகனார் (35) ஆகிய புலவர்கள் பாடியுள்ளார்கள்.

இப்பாடல்களில், இவன் பெயர், "வளவன்" என அடையெதுவும் பெறாமலும், "கிள்ளிவளவன்" "வாய்வாள்வளவன்" "பொலம்பூண்வளவன்" என அடைபெற்றும் அழைக்கப் பெற்றுளது, கொளு அனைத்திலும் அவன் பெயர், "குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்" என வழங்கப் பெற்றுளது. இது ஒன்றே, அவன் "குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளிவளவனின்" வேறுபட்டவன் என்பதை உணர்த்து கிறது.

அவன் உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட சோழர் குடிவந்தவன்.[53] தன்னிடம் அடைக்கலம் புகுந்த புறா ஒன்றைக் காத்தற்பொருட்டு துலா, புகுந்த சிபியின் வழி வந்தவன் இவன் அதனால் "செம்பியன்" என அழைக்கப் பெறுவன.[54]

தான், சேரர் வழி வந்தான் ஒருவனுக்குரிய, கருவூர்க்கோட்டையை முற்றுகையிட்டு அக்கோட்டையைச் சூழ இருந்த காவற்காட்டினை அழிக்கவும், மரம் வெட்டப்படும் ஒலி கேட்டும், அகத்திருப்போன் வெளிப்பட்டு எதிர்க்கும் ஆற்றல் இழந்து அடங்கி இருக்கும் நிலையிலும், முற்றுகையை மேலும் தொடர்வது முறையாகாது என ஆலத்தூர் கிழாரா லும்[55] மாறோக்கத்து நப்பசலையாராலும்[56] அறிவுறுத்தப்பட்டவன்.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், அழிய, அவனுக்குரிய வஞ்சித்தலைநகரை வாட்டியவன் இவன். [57] சேரர்க்குத் துணை சென்ற மலையமானை வென்று, அவன் மக்களைச் சிறை கொண்டு வந்து தன் பட்டத்து யானையின் காற்கீழ் இட்டுக் கொல்லப் புகுந்த வழி, கோவூர்கிழார் அறிவுரை ஏற்ற, அப்பழி மிகு செயலைச் செய்யாது காக்கப் பெற்றவன்[58] இம்மூன்று நிகழ்ச்சிகள் தவிர்த்து, அவன் கொற்றம் புலவர்களால், பொதுவாகப் பலபடப் பாராட்டப் பெற்றுள்ளது. அது போலவே, அவன் கொடை வளமும் பாராட்டப்பட்டுளது.

இவன் காலத்தில், பகைவென்று கொண்டு வரும் பொருள்களே அல்லாமல், தன்நாட்டு நிலங்களுக்கு வரிவிதித்துப் பெறும் பொருளும், அரச வருவாயாகும்;

நிலவரி விதிப்பவனேயாயினும், இயற்கைச் சூழ்நிலை போலும் காரணங்களால், நிலத்துக்குரியவர் வரி செலுத்த இயலாதபோது, வரி தண்டுவதைக் கைவிடும் நல்லரசனுமாவான்.[59]

குளமுற்றத்தான், கொற்றம், கொடைவளம், மிக்கவன் ஆதலோடு, தன் ஒத்த, ஏன் தன்னினும் மிக்க, கொடையாளியைப் பாராட்டிப்பாடும் பேருள்ளம் வாய்ந்த பெரும்புலவனும் ஆவன். சிறுகுடி கிழான் பண்ணன் எனும் கொடையாளியை அவன் என் வாழ்நாளையும் தன்வாழ்நாளாகக் கொண்டு நெடுது வாழ்க'' என வாழ்த்தியுள்ளான்.[60]

## கோப்பெருஞ்சோழன்

உறையூரைத் தலைநகராகக் கொண்டு அரசாண்ட சோழ அரசர்களுள் கோப்பெருஞ்சோழனும் ஒருவன். அவனைப் பாடிய புலவர்கள், பிசிராந்தையார், புல்லாற்றூர் எயிற்றியனார், பொத்தியார், கருவூர் பெருஞ்சதுக்கத்துப் பூதநாகனார், கண்ணகனார் ஆகியோராவர், பிசிராந்தையார் அவனைப் ''பெருங் கோக் கிள்ளி[61] ''கோழியோன்'' ''கோப்பெருங் சோழன்''[62] என்றும் பொத்தியார், ''தேர்வண் கிள்ளி''[63] என்றும் அழைத்துள்ளனர்.

புல்லாற்றூர் எயிற்றினார், சோழன், யாது காரணத்தாலோ, அவன் மக்கள் மீதே போர் தொடுத்து எழக்கண்டு, அவனை அணுகி ''அவர்கள் உன் மக்கள், பின்னர் இவ்வாட்சிக்கு உரியவர், வென்று அவர்களை அழித்து விட்ட பின்னர், உனக்குப் பின் இந்த

அரசாட்சியை யார்பால் ஒப்படைப்பாய்'' என்பன போலும் அறிவுரைகளைக் கூறி, அப்போர் நிகழாமல் இருக்கவும், மக்கள் மேலேயே போர் தொடுத்தான் என்ற பழி, இவனை அண்டாதிருக்கவும் வழி செய்தார்.[64]

மக்கள் மேல் போர் தொடுத்து எழுந்ததைப் புலவர் புல்லாற்றூரார் அறிவுரை கேட்டு கைவிட்டான் என்றாலும், தன் செயலுக்கும், அத்தகைய மக்களைப் பெற்று விட்டமைக்கும் நாணி உயிர்விடத் துணிந்து விட்டான். துணிந்த அவன் அக்கால வழக்கப்படி வடக்கு நோக்கி அமர்ந்து உண்ணாநோன்பு மேற் கொண்டு விட்டான். அப்போது என் நண்பர் பிசிராந்தையார் வருவார். அவர்க்கும் ஓர் இடம் ஒதுக்கி வைக்குமாறு உடன் இருந்தாரை வேண்டிக் கொண்டான். அவன் பிரிவு பொறாது தாமும் வடக்கிருந்து உயிர் துறக்க முன்வந்த பொத்தியார் என்ற புலவரைத் தங்களுக்கு மகன் பிறக்க இருக் கின்றான். பிறந்த பிறகு வருக என வேண்டி விடை கொடுத்து அனுப்பி உயிர் துறந்தான்[65] பாடிய புலவர் அனைவரும் அவன் கொடைவளத்தைப் பலபடப் புகழ்ந்து பாடியுள்ளார்.

கோப்பெருஞ் சோழன், புலவர்களைப் புரக்கும் புரவலன் ஆதலோடு, அவனும் ஒரு புலவன் ஆவன். அவன் பாடிய பாடல்களாகக் குறுந்தொகையில்[66] இரண்டும், புறநானூற்றில்[67] மூன்றும் ஆக ஐந்து பாடல்கள் உள்ளன. அவையெல்லாம், நல்ல அறம் வழங்கும் சிறப்புடையன.

# செங்கணான்

சேரமான் கணைக்கால் இரும்பொறை பாடிய "குழவி இறப்பினும்" எனத் தொடங்கும் புறநானூற்றுப் பாட்டின்68 அடியில் கொடுத்திருக்கும் கொளு, பின்வருமாறு வருகிறது. "சேரமான் கணைக்கால் இரும்பொறை, சோழன் செங்கணானோடு, திருப்போர்ப் புறத்துப்பொருது. பற்றுக்கோட்பட்டுக் குடவாயிற் கோட்டத்துச் சிறையில் கிடந்து, தண்ணீர் தா என்று பெறாது, பெயர்த்துப் பெற்றுக் கைக் கொண்டிருந்து உண்ணான் சொல்லித் துஞ்சிய பாட்டு." இதிலிருந்து திருப்போர்ப்புறத்தில் நடை பெற்ற போரில், சேரமான் கணைக்கால் இரும் பொறையை வென்று, சிறைப்பிடித்து வந்து, சோழ நாட்டுக் குடவாயில் கோட்டத்துச் (இன்றைய கும்பகோணம்) சிறையில் அடைத்த செங்கணான் என்பவன் வரலாறு தெரிகிறது.

கழுமலம் என்ற இடத்தில் நடைபெற்ற போரில் செங்கண்மால், செங்கண்சினமால், செம்பியன் என்றெல்லாம் அழைக்கப் பெறும் சோழ அரசன் ஒருவன் "வஞ்சிக்கோ" "கொங்கர் படை கொண்டான்" என அழைக்கப்பெறும் சேரன் ஒருவனை வென்று, சிறை கொண்டு குடவாயில் கோட்டத்துச் சிறையில் அடைத்தான் எனவும், பொய்கையார் என்ற புலவர், களவழி நாற்பது பாடிச் சோழனைப் புகழ்ந்து பரிசாக, சேரனைச் சிறை மீட்டார், எனவும், களவழி நாற்பது கலிங்கத்துப்பரணி, விக்கிரம சோழன் உலா, குலோத்துங்கச் சோழன் உலா, இராசராச சோழன் உலா ஆகிய நூல்கள் உணர்த்துகின்றன.69

பெரும்பூண் சென்னி என்ற சோழ வேந்தன் கணையன் என்ற சேரவேந்தனுக்குரிய கழுமலக் கோட்டையை முற்றுகையிட்டபோது, அவன் படைத் தலைவன் பழையன் என்பவன், அக்கோட்டைக் காத்து நின்ற நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்துறை போன்ற படைத்தலைவர்களைக் கொன்று தானும் இறந்து விட, சோழனே களம் புகுந்து கழுமலக் கோட்டையையும் கைப்பற்றிக் கொண்டு கணையனையும் சிறை கொண்டான் எனக் கூறுகிறார், குடவாயில் கீரத்தனார் என்ற புலவர்.70

திருவானைக்காவல் நாவல் மரத்தடியில் இருக்கும் சிவனை வழிபடும் சிலந்தி; அச்சிவன் மீது இலை முதலாயின எதுவும் விழாமைக்காக வலைபின்னி வழிபட்டு வந்தது. அச்சிலந்தி போலவே, அவ்விறைவனை வழிபடும் யானை, சிவன் மீது வலை இருப்பது பொறாது அழித்தது. இது தொடர்ந்தது. அதனால் சினம் கொண்ட சிலந்தி, யானையின் துதிக்கையுள் புகுந்து துயர் விளைக்கலாயிற்று. துயர் பொறாது, யானை துதிக்கையை ஓங்கி அடிக்க சிலந்தியும் இறந்தது; யானையும் இறந்தது. இறந்த சிலந்தி செங்கணனாகப் பிறந்து சிவனுக்கு எழுபது கோயில்களைக் கட்டிற்று என்ற கதையைச் சேக்கிழார் கூறியுள்ளார். அச்செங்கணான், சம்பந்தர், சுந்தரர், திருமங்கைஆழ்வார் பெருமக்களால் பாராட்டப் பெற்றான்.

ஆக, புறநானூற்று (74) கொளுகூறும் செங்கணான்; களவழி நாற்பது போல்வன கூறும் செங்கணான்; குடவாயிற் கீரத்தனார் கூறும் (புறம்:44) செங்கணான், சேக்கிழார் கூறும் செங்கணான் எனச் செங்கணான் என்ற பெயர் உடையார் நால்வர் இருக்-

கின்றனர். இனங்காண வேண்டுவது வரலாற்று ஆசிரியர் கடன்.

## தித்தன்

சோழர் குலம் விளக்கும் கிள்ளி, சென்னி, வளத்தான், வளவன் என்பன போலும் சிறப்பு அடை பெறாமல், தித்தன் என வறிதே அழைக்கப் பெற்றுளான் இவன். இவன் சோழன் என்பது, இவன் தலைநகர் உறந்தை ஆம் எனப் பரணர்71 (அகம் : 6,122,226 புறம் : 352) பல இடத்திலும் கூறியிருப்பதால் உறுதி ஆகிறது.

இவனுக்குப் போரவைக் கோப்பெருநற்கிள்ளி என்ற மகன் ஒருவன் இருந்தான் என்றும், அவன், முக்காவல் நாட்டு ஆமூர் மல்லனை வென்றான் என்றும், மகன் பெற்ற வெற்றியையும் காண மறுக்குமளவு, தித்தன் மகன் மீது சினம் கொண்டிருந்தான் என்றும், சாத்தந்தையார் பாடிய புறநானூற்றுப் பாடல்72 ஒன்றின் கொளுவால் தெரிகிறது.

கட்டி என்ற வடநாட்டு மற்போர் வீரன் பாணன் என்ற தன் நண்பன் துணையோடு, தித்தன் வெளியனை, மற்போரில் வெல்லக் கருதி வந்தும், தித்தன் வெளியன் நாளோலக்கத்தில், புலவர்கள் பாராட்டில் அவன் வெற்றிச் சிறப்பினை விளங்க உரைக்கக் கேட்ட அளவே, போரிடும் கருத்தையே கைவிட்டு ஓடி விட்டதைப் பரணர் பாராட்டியுள்ளார்.73

சாத்தந்தையார் பாராட்டிய தித்தனும், பரணர் பாராட்டிய தித்தன் வெளியனும் உறையூர்க்கு உரியவ

ராகவே கூறப்பட்டுள்ளமையாலும், சாத்தந்தையாரின் தித்தன் மகன், மற்போர் வீரன் ஆதல் போலவே, பரணரின் தித்தன் வெளியனும், மற்பேரர் வீரனாம் ஆதலாலும், இருவருமே ஒருவர் எனக் கோடல் பொருந்தும் எனக் கொள்ளலாமல்லவோ?

## நலங்கிள்ளி

புகார் நகரைத் தலைநகராகக் கொண்டு அரசாண்டவன் இவன். சிறந்த ஆற்றல் வாய்ந்தவன். "பகைவர் பணிந்து வந்து கேட்டால், என் அரசையும் தருவேன்; அவர்கள் என்னையே அல்லாது, என் அமைச்சர்களையும் மதியார் ஆயின், அவர்களை யானையின் காலின் கீழ் அகப்பட்ட மூங்கில் முளை யைப் போல் இல்லாமல் ஆக்கி விடுவேன்"74 என்று வஞ்சினம் கூறும் வல்லாளன்.

"வழி வழி வந்த அரசை முறையாக ஆள மாட்டாது, குடிகள் பால் வரி தண்டியே ஆள நினைப்பன், ஆயின், அவ்வரசு அவனுக்குப் பெரிய பாரமாம். போர் பல வென்று பகைநாட்டுப் பொருள் கொண்டு அரசை நடத்தும் பேராற்றல் வாய்ந்தவனுக்கு, அவ்வரசாட்சி, உலர்ந்து ஒடிந்து வீழ்ந்து போன சுள்ளி போல் எளிதாம்"75 என உரைத்து தான் நல்லாட்சி யாளன் என்பதை நாட்டிற்கு அறிவித்தவன்.

குலப் பகைவர்களாகிய, பாண்டிய, சேரர்களின் கொற்றக்குடைகள், தன் பின் தொடர்ந்து வர, தன் குடையே முன் செல்ல வேண்டும் என விரும்பும் தறுகணாளன். அதற்கேற்ற நாற்படையாளன்.76

மட்கலங்கள் செய்யும் குயவன், விரும்பிய வாறெல்லாம், அவன் திகிரியின் கீழ்வைக்கப்படும் மண் மாறி விடுதல் போல், தமிழ்நாடு அவன் ஆட்டியபடியெல்லாம் ஆடி வந்தது. அதனால், அவனைப் பாடிய புலவர்கள், விரும்பினால், பாண்டியர் தம் மதுரை மாநகரையும், சேரர்க்குரிய வஞ்சி மாநகரையும் பரிசிலாகத் தரத்தக்க வல்லாளன்.[77]

அவன் காலத்தில், தமிழகத்தில் வேறு பல அரசுகள் இருந்தன என்றாலும், அவர்களின் வெற்றி முரசுகள் எல்லாம், அடித்து முழக்கம் எழுப்பினால், அது கேட்டு நலங்கிள்ளி போர் மேற்கொண்டு வந்து அழித்துவிடுவனோ என்ற அச்சத்தால், வாயடிங்கியே கிடந்தன.[78]

அவன் நாற்படை, இவ்வாறு ஆற்றலால் பெரிது. எத்தனை போர்களுக்குச் செல்ல வேண்டி நேரினும், அத்தனை போர்களுக்கும் அனுப்பவல்ல பெரும்படை அவன் நாற்படை. பனந்தோப்பினிடையே அணி வகுத்துச் சென்றால், அவன் தூசிப் படைக்குப் பனைநுங்கு கிடைக்கும், இடைப்படைனக்குப் பனம் பழந்தான் கிடைக்கும், கடைசிப்படைக்குப் பனங் கிழங்குதான் கிடைக்கும். அவ்வாறு ஓர் இடத்தைக் கடக்க, அத்துணை காலத்தை எடுத்துக்கொள்ளுமளவு பெரிது அவன் படை.[79]

நலங்கிள்ளி புகாரில் இருந்து அரசாண்டிருந்த போது; உறையூரை ஆண்டிருந்தவன் இறந்து போனான். அரசிழந்திருந்த உறையூரைத் தனதாக்கிக் கொள்ள விரும்பினான்; ஆவூர்க்கோட்டைக்குரியோனாகிய நெடுங்கிள்ளி. அது அறிந்த நலங்கிள்ளி அந்நெடுங்கிள்ளியை அவன் ஆவூர்க்கோட்டைக்கே

சென்று அழித்துவிட எண்ணி விட்டான். ஆவூர்க் கோட்டையை வளைத்துக் கொண்டான். நெடுங்கிள்ளி வெளி வந்து போரிட நினையாது வாயிற் கதவுகளை அடைத்து விட்டு உள்ளேயே அடங்கிக் கிடந்தான். அகத்தே உள்ள மக்களுக்கு, உணவு முதலாயின கிடைக்காமல் போக, வருந்தினர். அது அறிந்த கோவூர்கிழார் என்ற புலவர், கோட்டை அகத்தே சென்று "ஆற்றல் இருந்தால் வெளியே சென்று பகைப் படையை வென்று ஓட்டு; மக்களைப் பசி, பிணி, அண்டாதவாறு காக்க வேண்டும் என்ற அறவுள்ளம் உடையாயின், வாயிலைத் திறந்துவிடல் வேண்டும், இரண்டில் எதையும் செய்யாது அடைத்துக் கிடத்தல் அறமோ, மறமோ ஆகாது" என அறிவுரை கூறினார்.[80]

கோவூர்கிழார் கூறிய அறிவுரை கேட்டு ஆவூர்க் கோட்டையை நலங்கிள்ளிபால் ஒப்படைத்து விட்ட நெடுங்கிள்ளி, உறையூர்க்கோட்டைக்குச் சென்று அடைத்துக் கொண்டான். நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி உறையூர்க்கோட்டையை உடைமையாக்கிக் கொண்டதையும் பொறுக்கமாட்டாது, அக்கோட்டையையும், வளைத்துக் கொண்டான். அது அறிந்த கோவூர் கிழார் இம்முறை நலங்கிள்ளியை அணுகி, "உள்ளிருப் போன், உன் குலப் பகைவர்களாகிய சேரர், பாண்டியர் குடியில் வந்தவன் அல்லன்; கோட்டையை வளைத்துக் கொண்டிருக்கும், நீயும், சேரர் பாண்டியர் குடியில் வந்தவன் அல்ல; இருவருமே ஒரு குடியில் வந்தவர்கள். ஒரு குடியில் வந்தவர்கள், தமக்குள்ளாகவே பகைத்துப் போர் தொடுத்து நிற்பது பகை மன்னர் எள்ளி நகை யாடவே இடம் செய்து விடும்; ஆகவே முற்றுகையைக்

கைவிடுக'' என அறிவுரை கூறவும்.[81] நலங்கிள்ளி கேளாது உறையூர்க்கோட்டையைக் கைப்பற்றிக் கொண்டான்.

நலங்கிள்ளி, தொடக்கத்தில் கூறியவாறு தானே புலவன் ஆனதோடு (புறம் : 73,75) புலவர்கள் போற்றும் புரவலனும் ஆவன். கோவூர்கிழாரே அல்லாமல், உறையூர் முதுகண்ணன் சாத்தனாரும், அவன் கொற்றம், கொடை நலங்களைப் பாராட்டிய தோடு, அவனுக்கு நல்ல பல அறிவுரைகளையும் வழங்கினார்.[82]

## நெடுங்கிள்ளி

ஆவூர்க்கோட்டைக்கு உரியவன், இந்நெடுங்கிள்ளி, நலங்கிள்ளி, அவ்வாவூர்க்கோட்டையை வளைத்துக் கொண்ட போது, கோவூர்கிழார் அறிவுரை கேட்டு, ஆவூர்க்கோட்டையை, நலங்கிள்ளிபால் ஒப்படைத்து விட்டு, உறையூர்க்கோட்டைக்கு ஓடிவிட்டவன்.[83] (புறம் : 44)

உறையூர்க்கோட்டையில் இருந்த போது, நலங்கிள்ளியைப் பாடிப் பரிசில் பெற்றுக் கொண்ட இளம் தத்தன் என்ற புலவன், நலங்கிள்ளிக்கும் நெடுங் கிள்ளிக்கும் இடையில் இருக்கும் பகை தெரியாத காரணத்தால், நெடுங்கிள்ளிபால் பரிசில் பெற உறையூர் சென்றான். வந்த புலவன் நலங்கிள்ளியிடமிருந்து வருகின்றான் என்பது அறியவே, அவனை, நலங்கிள்ளி, உறையூர்க் கோட்டையின் படை வலிவு அறிந்து வர அனுப்பிய ஒற்றனாகக் கொண்டு; நெடுங்கிள்ளி, அவனைச் சிறையில் அடைத்துக்

கொல்லக் காலம் பார்த்திருந்தான். அது அறிந்து புலவர், கோவூர்கிழார், விரைந்து உறையூர் அடைந்து, இளந்தத்தன், பாடிப் பரிசில் பெறும் புலவனே அல்லது, படை வலிவு அறிய வந்த ஒற்றன் அல்லன் என்பதை விளங்க உரைக்கவே, இளந்தத்தனைப் போக விட்டவன்.[84]

இளந்தத்தனை விடுவித்தானே ஒழிய உறையூர்க் கோட்டையைக் கைவிட்டான் அல்லன், நெடுங்கிள்ளி. அதனால் நலங்கிள்ளி, உறையூர்க் கோட்டையை வளைத்துக் கொண்டான். அது அறிந்த கோவூர் கிழார், தம் அறிவுரை கேட்டு ஆவூர்க்கோட்டையை யும் கைவிடுக எனக் கேட்பது முறையாகாது என்ப தால், நலங்கிள்ளியை அணுகி, முற்றுகையை விடுமாறு கேட்டுக் கொள்ள, உறையூர் முற்றுகை தகர்ந்தது.[85]

ஆனால், 47ஆம் எண் புறநானூற்றுக் கொளுவும், மணிமேகலை **124—127** வரிகளும் 'காரியாற்றுத் துஞ்சிய' என்ற அடைகொடுத்து முறையே நெடுங்கிள்ளி, மாவண்கிள்ளி என்பான் ஒருவனைக் கூறுகின்றன. மேலும், மணிமேகலை, அப்போரில் பங்கு கொண்ட சோழன் பகைவர்களாகப் பாண்டியனை யும், சேரனையும் குறிப்பிடுகிறது. அதனால், இரு கோட்டைகளைக் கோட்டை விட்ட நெடுங்கிள்ளியும், காரியாற்றுத்துஞ்சிய நெடுங்கிள்ளியும், ஒருவர்தாமா? வேறு வேறா என்பதை முடிவு செய்வதில் சிறிது விழிப்பு வேண்டும்.

## நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி

இவன், சேரமான் பாமுளூர் எறிந்த, நெய்தலங் கானல் இளஞ்சேட்சென்னி என அழைக்கப் பெறுவன். இவன் கொற்றம், கொடை நலச் சிறப்புகளைப் புலவர், ஊன் பொதி பசுங்குடையார் பாராட்டியுள்ளார்.86 இவன்; கரிகால் பெருவளத்தானின் தந்தையாகிய, உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னியே என்பது; உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னி என்ற தலைப்பின் கீழ் விளக்கப்பட்டுள்ளது.

## போரவைக்கோப் பெருநற்கிள்ளி

உறந்தையைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட சோழ அரசன் தித்தன் என்பானின் மகன். யாது காரணத்தாலோ தந்தையோடு பகை கொண்டு, உறந்தையை விடுத்து, முக்காவல் நாட்டைச் சேர்ந்த ஆமூர் சென்று வாழ்ந்திருந்தான். ஆமூர் மல்லர்கள் நிறைந்த ஊர். போரவைக்கோவும், மற்போர் வல்லவன். அதனால், ஆமூர் மல்லனுக்கும், இவனுக்கும் பகை வளர, ஒருநாள் போரிடத் தொடங்கிவிட்டனர். போரில் போரவைக்கோவே வெற்றி பெற்றான். அவன் ஆற்றிய மற்போர் திறங்கண்டு மகிழ்ந்த புலவர் சாத்தந்தையார், "மகன் பெற்ற வெற்றியைத் தித்தன் காணக் கொடுத்து வைத்திலனே" என வருந்தினார்.87 அவன் போர்த் திறம் கண்டு, அவன்பால் காதல் கொண்டு பாராட்டினார் பெருங்கோழி நாயகன் மகள் நக்கண்ணையார் என்ற புலவர் பெருமாட்டி.

## மாவளத்தான்

நலங்கிள்ளியின் தம்பி. புலவர் தாமல் பல் கண்ணனாருடன் வட்டாடியிருந்த போது,வட்டொன்று காணாமல் போக, அதைப் புலவர்தாம் மறைத்து விட்டார் என எண்ணிச் சினங்கொண்டு, வட்டினா லேயே புலவரைத் தாக்க, புலவர் புண் பெற்றார். சிறிது நாழிகைக்கெல்லாம், மறைந்துபோன வட்டு காணக் கிடைக்கவே, தவறு செய்தவர் புலவர் அல்லர். தானே என்பதுணர்ந்து, வருந்தி புலவர்பால் மன்னிப்புக் கேட்டுக் கொண்டான்.[88]

புலவரை மதிக்கும் இவன் தானும் ஒரு புலவர் ஆவன், இவன் பாடல் ஒன்று குறுந்தொகையில் இடம் பெற்றுளது.[89]

## முடித்தலைக் கோப்பெரு நற்கிள்ளி

வளம்மிக்க நாடுடையான், நல்ல வீரன், நாற்படை உடையான், அதனால் செருக்குற்று, அத்துவஞ் சேரலுக்கு உரிய கருவூரை முற்றுகையிட்டான். ஒரு நாள், அவன் ஏறி இருந்த யானை, மதம் கொண்டு சோழர் படையணியைக் கடந்து, சேரர் படை அணியுள் புகுந்துவிட்டது. கருவூர் வேண்மாடத்தில் அந்துவஞ் சேரலோடு அமர்ந்திருந்த புலவர் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்; ''மதங்கொண்ட யானை மீது பகைப் படையுள் தனித்து நுழைந்துவிட்ட சோழன்,

தீங்கேதுமின்றித் திரும்ப வழிசெய்க" என, அந்துவஞ் சேரல் இருப்பொறையை வேண்டிக் கொண்டார். இவன் வரலாறாக அறியத் தக்கது இவ்வளவே.[90]

## வேல் பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளி

இவனைப் பாடிய புலவர்கள், பரணரும், (புறம் 63) கழாத்தலையாரும் ஆவர் (புறம் : 62, 368) இருவரும் இவன், அவன்காலத்தில் சேரநாடாண்டிருந்த குடக்கோ நெடுஞ்சேரலாதன் எனவும்; குடவர் கோமான் நெடுஞ் சேரலாதன் எனவும் அழைக்கப்பெறும், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனோடு; சோழநாட்டுத் திருப்போர்ப் புறம் எனும் இடத்தில் போரிட்டு அவனையும் கொன்று தானும் உயிர் இழந்து போனான். புலவர் இருவரும், மன்னர் இருவர் இறந்து வீழ்ந்த கொடுங்காட்சி கண்டு கலங்கியுள்ளனர். ஆனால், பெயர் குறித்தார் அல்லர். முறையே "வேந்தர்", "மறப்போர் வேந்தர்" என்று மட்டுமே குறிப்பிட்டுள்ளனர். பிற விளக்கம் கொளு வால் மட்டுமே அறியப்படும்.

## காவல பாவலர்

நாடாண்ட காவலர்கள் இவர்களுக்குள்ளாக பாவன்மையும் கொண்டவர் நால்வர் உள்ளனர். குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், சிறுகுடி கிழான்பண்ணனின் கொடை வளத்தைப் பாராட்டி யுள்ளான்[91] கோப்பெருஞ்சோழன், தலைமகள் ஒருத்தி

பால் உள்ளத்தைப் பறிகொடுத்த தலைமகன் கவலை யால் உடல்நலம் கெடக்கண்டு, காரணம் யாது எனக் கேட்ட தன் நண்பனுக்கு விடைகூறியதாக அமைந்த பாடல் ஒன்றையும்[92], தலைமகள், அன்பையும், அருளை யும், மறந்து பொருள் தேடிச் செல்லத் துணிந்து விட்ட காதலன் செயல் கண்டு வருந்தும் பாடல் ஒன்றையும்[93] குறுந்தொகையில் பாடியுள்ளான். தன் நண்பர் பிசிராந்தையார் பெருமை பாராட்டி மூன்று[94] (214, 215, 216) பாடல்களைப் புறநானூற்றில் பாடி யுள்ளான். நலங்கிள்ளி, தன் பெருமை, படைப் பெருமைகளைப் பாராட்டி வஞ்சினம் கூறும் இரு பாடல்களை (73, 75) புறநானூற்றில் பாடியுள்ளார்.[95] மாவளத்தான், தலைவன் பிரிவறிந்து வருந்தும் தலைவிக்கு ஆறுதல் கூறும் தோழியின் கூற்றமைந்த பாடலைப் பாடியுள்ளார்.[96]

## நல்லுருத்திரன்

நல்லுருத்திரன் பாடியதாகத் தொகுக்கப் பெற்று இருக்கும் புறநானூற்றுப் பாட்டின்[97] கொளுவும், கலித் தொகைப் பாடல்களைப் பாடிய ஆசிரியர்களின் பெயரை அறிவிக்கும், கலித்தொகையில் உள்ள வெண்பாவிலும், இவன் பெயர்க்கு முன்னால் சோழன் என்ற சொல்லை இணைத்திருப்பதால், இவன் சோழர் குலத்து வந்தவன் என்பதை மட்டும் அறிய முடிகிறது; இவன் வரலாறாகப் பிற எதுவும் தெரியவில்லை. பொருள் இல்லா நிலையி லும் இழிந்தன செய்தாவது பொருள் ஈட்ட முயற்சிக் காதே என்கிறது அவன் புறப்பாட்டு.[98] ஆயர் வாழ்க்கையை அழகுறப் படம் பிடித்துக் காட்டுகின்றன, அவனுடைய முல்லைக் கலிப்பாக்கள்.

# சான்றெண் விளக்கம்

1. ''சாலி நெல்லின் சிறைகொள் வேலி
   ஆயிரம் விளையுட் டாகக்
   காவிரி புரக்கும் நாடு''

—பொருநர். 246-48.

2. புறம் : 40
3. புறம் . 377

4. ''முத்தீப் புரையக் காண்டக இருந்த
   கொற்ற வெண்குடைக் கொடித்தேர் வேந்திர்
   யானறி அளவையோ இதுவே''

—புறம். 367

5. புறம். 16
6. புறம். 125
7. புறம். 377
8. புறம். 27
9. புறம். 225
10. புறம். 61
11. புறம். 27
12. புறம். 61
13. புறம். 225
14. பொருநர். 130
15. தொல். அகத்திணை. சூத்திரம்-30-உரை
16. புறம் -4
17. புறம். 10; 203
18. புறம். 370; 378
19. அகம். 375
20. புறம். 378
21. புறம். 203

22. அகம். 246
23. பட்டின. 282
24. அகம். 199
25. அகம். 125
26. "பெரும் பெயர்க் கரிகால்"—அகம் -246
"பெரு வளக் கரிகால்"—அகம் -125
27. புறம். 66; பொருநர்-148
28. அகம். 246
29. புறம். 7
30. பட்டின. 288-90

—சிலம்பு 5: 90

31. "கரிகாலன் கால் நெருப் புற்று"
—பொருநர் : ஈற்று வெண்பா
"சுடப்பட்டு உயிர் உய்ந்த சோழன் மகன்"
—பழமொழி. 105

32. "உருவப் பஃறேர் இளை யோன் சிறுவன்"
—பொருநர். 130

"மன்னர் பாங்கிற் பின்ன ராகுப "என்ற தொல் காப்பியத்திற்கு (பொருள்-அகத்திணை. சூத்திரம்-30) —"உருவப் பஃறேர் இளஞ்சேட் சென்னி, அழுந்தூர். வேளிடை மகட் கோடலும், அவன் மகன் கரிகாற் பெருவளத் தான் நாங்கூர் வேளிடை மகட் கோடலும் என எழுதும் நச்சினார்க்கினியர் உரை.
அகம். 246

33. தொல் பொருள் அக: சூ: 30

34. "துகளிர் மகளி ரொடு வேத வேள்வித் தொழில் முடித்தான்"
"மகளிரும் இழை களைந்தனர்" —புறம் 234

35. "பொன் தொடிப் புதல்வர் ஓடி ஆடவும்"
—பட்டினப் பாலை—295

36. சிலம்பு. 21; 11-15

37. பொருநர்—132

38. பட்டின. 220-27

39. "பெரும் பெயர்க் கரிகால்
ஆர்கலி நறவின் வெண்ணி வாயில்
சீர் கெழு மன்னர் மறலிய ஞாட்பின்
இமிழ் இசை முரசம் பொருகளத்து ஒழியப்
பதினொரு வேளி ரொடு வேந்தர் சாய
மொய்வலி அறுத்த ஞான்றைத்
தொய்யா அழுந்தூர் ஆர்ப்பினும் பெரிதே"
—அகம்-246

"இரு பெரு வேந்தரும் ஒருகளத் தவிய
வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்றாள்
கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்"
—பொருநர். 145-48

"கரிகால் வளவ னொடு வெண்ணிப் பறந்தலைப் பொருது, புண் நாணிய சேரலாதன், அழிகள மருங்கின் வாள் வடக் கிருந் தென்"
—அகம் 55

"புறப் புண் நாணி மறத் தகை மன்னன்
வாள் வடக்கு இருந்தனன்"
—புறம்—65

"கரிகால் வளவ!
சென்றமர்க் கடந்தநின் ஆற்றல் தோன்ற
வென்றோய் நின்னினும் நல்லன் அன்றே
கலி கொள் யாணர் வெண்ணிப் பறந்தலை
மிகப் புகழ் உலகம் எய்திப்
புறப்புண் நாணி வடக்கிருந் தோனே"
—புறம்-66

40. "பெருவளக் கரிகால் முன்னிலைச் செல்லார்
ஓடா வாகைப் பறந்தலை ஆடுபெற
ஒன்பது குடையும் நன்பகல் ஒழித்த
பீடில் மன்னர் போல, ஓடுவை"

—அகம்-125

41. "பல் ஒளியர் பணி பொடுங்கத்
தொல் அருவாளர் தொழில் கேட்ப
வடவர் வாடக், குடவர் கூம்பத்,
தென்னவன் திறல் கெடச், சீறி மன்னர்
மன்னெயில் கதுவும் மதனுடை நோன்தாள்
மாத் தானை; மறமொய்ம் பின்,
செங் கண்ணாற் செயிர்த்து நோக்கிப்
புன் பொதுவர் வழி பொன்ற
இருங்கோவேள் மருங்கு சாய"

—பட்டின-274-82

42. "செருவெங் காதலிற் றிருமாவளவன்

---

இமையவர் உறையும் சிமையப் பிடர்த் தலைக்
கொடுவரி ஒற்றிக் கொள்கையிற் பெயர் வோற்கு
மாநீர் வேலி வச்சிர நன்னாட்டுக்
கோனிறை கொடுத்த கொற்றப் பந்தரும்
மகத நன்னாட்டு வாள்வாய் வேந்தன்
பகை புறத்துக் கொடுத்த பட்டி மண்டபமும்
அவந்தி வேந்தன் உவந்தனன் கொடுத்த
நிவந்தோங்கு மரபிற் றோரண வாயிலும்"

—சிலம்பு-5:90-104

43. கலை மகள். 1932 பகுதி 1, பக்கம் 62,63

44. "பொன்னிக் கரை கண்ட பூபதி"-

—விக்கிரம சோழன் உலா—26

"தலையேறு
மண் கொண்ட பொன்னிக் கரைகட்ட வாராதான்
கண் கொண்ட சென்னிக் கரிகாலன்"
—குலோத்துங்க சோழன் உலா—34-6

"தொழுது மன்னரே கரைசெய் பொன்னியில்
தொடர வந்திடா முகரியைப் படத்து
எழுது கென்று கண்டு, இது மிகைக் கண் என்று
இங்கழிக்கவே அங்கழிந்ததும்"
—கலிங்கத்துப் பரணி—184

"முழுகுல நதிக் கரசர் முடிகொடு வகுத்த கரை
முகில் தொட அமைத்த தறிவோம்
..............................
இகல் முகரி முக் கணிலு மொருகண் இழியக் கிழியில்
எழுது கண் அழித்த தறிவோம்"
—குலோத்துங்கன் பிள்ளைத் தமிழ்—52

நவ சோழ சரிதம் என்ற தெலுங்கு வீரசைவ நூல்
—மகாவம்சம்...........................

45. சிலம்பு:21; 11,15
குறுந். 31

46. "தழுவு செந்தமிழ்ப் பரிசில் வாணர் பொன்
பத்தோடாறு நூறு ஆயிரம் பெறப்
பண்டு பட்டினப் பாலை கொண்டதும்"
—க.பரணி

47. பக்கம். 38-47

48. பக்கம். 49-53

49. புறம். 58

50. புறம் 60

51. புறம் 197

52. புறம் 373
53. புறம், 36,39,69
54. 37,89
55. புறம் 36
56. புறம் 37
57. ''இமயம் சூட்டிய ஏமவிற் பொறி
மாண் வினை நெடுந்தேர் வானவன் தொலைய
வாடா வஞ்சி வாட்டும் நின்
பீடு கெழு நோன்தாள்''

—புறம். 39

58. புறம் 46
59. புறம் 37
60. புறம் 173
61. புறம் 67
62. புறம் 213
63. புறம் 220
64. புறம். 213
65. புறம்: 67;191,213,216,217,219,220-23
66. குறுந். 20,129
67. புறம்: 213,215,216
68. புறம்: 74
69. ''களவழிக் கவிதை" பொய்கை உரைசெய்ய, உதியன்
கால் வழித் தளையை வெட்டி அரசிட்ட பரிசும்''

—க.பரணி

''மேதக்க பொய்கை கவி கொண்டு, வில்லவனைப்
பாதத் தளைவிட்ட பார்த்தி பனும்''

—வி. உலா

''பொறை யனைப் பொய்கை கவிக்குக்
கொடுத்துக் களவழிப் பாக் கொண்டோனும்''

—கு. உலா

''பொய்கை களவழி நாற்பதுக்கு
வில்ல வன் கால் தளையை விட்டக் கோன்''
—இராச. உலா

70. ''நன்னன் ஏற்றை நறும்பூண் அத்தி
துன்னரும் கடுந் திறல் கங்கன் கட்டி
பொன்னணி வல் வில் புன்றுறை என்றாங்கு
அன்றவர் குழீஇய அளப்பரும் கட்டூர்ப்
பருந்து படப் பண்ணிப் பழையன் பட்டெனக்
கண்டு அது நோனான் ஆகித் திண் தேர்க்
கணையன் அகப் படக் கழுமலம் தந்த
பிணையலம் கண்ணிப் பெரும் பூண் சென்னி''
—புறம். 44

71. ''நொச்சி வேலித் தித்தன் உறந்தை''
அகம். 122

''மாவண் தித்தன் வெண்ணெல் வேலி
உறந்தை''
—புறம். 352

''மாவண் தித்தன் பிண்ட நெல்லின் உறந்தை''
—அகம். 6

72. புறம். 80

73. ''வலிமிகு முன் பின் பாண னொடு, மலிதார்த்
தித்தன் வெளியன் உறந்தை நாளவைப்
பாடின் தெண் கிணைப் பாடு கேட்டஞ்சிப்
போரடு தானைக் கட்டி
பொரா அ தோடிய ஆர்ப்பு''
—அகம். 226

74. புறம். 73
75. புறம். 75
76. புறம். 31
77. புறம். 35
78. புறம். 225

79. ''தலை யோர் நுங்கின் தீஞ் சோறு மிசைய்
இடையோர் பழத்தின் பைங்கனி மாந்தக்
கடையோர், விடுவாய்ப் பிசிரொடு சுடுகிழங்கு நுகர
நிலமலர் வையத்து வல முறை விளைஇ
வேந்து பீடழித்த ஏந்து வேல் தானை''

—புறம். 225

80. புறம். 44
81. புறம். 45
82. புறம். 27,28,29
83. புறம். 44
84. ப்றம். 47
85. புறம். 45.
86. புறம். 10;205
87. புறம். 80,81,82
88. புறம். 43
89. குறுந். 348
90. புறம். 13
91. புறம். 173
62. குறுந். 129
93. குறுந். 20
94. புறம். 214; 215; 216
95. புறம். 73,75
96. குறுந். 348
97. புறம். 190
98. மேலது

# 4. பாண்டியர்

பாண்டிநாடு "தென்புலம்" என்றும், பாண்டிய மன்னர் "தென்புலம் காவலர் பெருமான்" என்றும் அழைக்கப் பெறுவர். தென்புலம், பழநி மலைக்குத் தெற்கே உள்ள நிலப்பகுதியாகும். பொன்னும், முத்தும் பதிக்கப் பெற்ற வாயிற்கதவுகளைக் கொண்ட கபாட புரம் பாண்டியர் தலைநகராக, வால்மீகி இராமாயணத் திலும்; குமரியாட வந்த அர்ச்சுனன், பாண்டியன் மகளை மணந்தான் என வடமொழி பாரதத்திலும், இலங்கை முதலாம் அரசன்விஜயன், பாண்டியன் மகளை மணந்தான் என மகாவம்சம் கூறுவதாலும், கி. மு. 20ல் உரோம நாடாண்ட அகஸ்டஸ் மன்னன் பால், பாண்டியன் அரசியல் தூதுவனை அனுப்பினான் என, அந்நாட்டு வரலாறு கூறுவதாலும், உரோமப் பொன் நாணயங்கள், பாண்டி நாட்டில் பெருகக்கிடைப்பதாலும் பாண்டியர் பழமை, பெருமைகளை உணரலாம். பாண்டி நாட்டுக் கொற்கைத் துறைமுத்து; பண்டைய, உலக அரசுகளெல்லாம், விரும்பி வாங்கிய வணிகப் பொருளாம்.

பாண்டிநாடு பெருமை வாய்ந்தது என்ற அப் பெருமையோடு, முதற்சங்கம் இருந்த தென்மதுரை யையும், இடைச்சங்கம் இருந்த கபாடபுரத்தையும், கடல் கோளுக்கு இரையாகக் கொடுத்த பேரிழப் பினையும் பெற்றது. பாண்டியர் தலைநகர் கூடல் எனவும் அழைக்கப்பெறும் மதுரை மாநகராம்.

பாண்டிநாடு, நில எல்லைக்கு அப்பாலும் இருந்தமையால், அதைக் காட்ட, வேலெறிய, அதனால் சினம் கொண்ட கடல், நிலப்பகுதியில் ஒரு பகுதியைத் தன்பால் கொண்டுவிட, நேர்ந்துவிட்ட அக்குறையை நிறைவு செய்துகொள்வான் வேண்டி வடபகுதியில் நிலங்கொண்டு நாட்டு எல்லையை விரிவுபடுத்திய வடிம்பலம்ப நின்ற பாண்டியன், தேவர்கோன் இந்திரனால் அழைக்கப் பெற்று அவன் கழுத்து முத்தாரத்தைப் பரிசாகப் பெற்ற பாண்டியன், இந்திரன் முடியை உடைத்தெறிய, அதனால் சினங்கொண்ட இந்திரன் பாண்டிநாட்டில் பெய்யாதீர் என மழை மேகங்களுக்கு ஆணையிட, அதனால் தன் நாட்டில் மழை இல்லாது போக, அம்மழை மேகங்களை வென்று கொண்டு வந்து மழை பெய்வித்துக் கொண்ட பாண்டியன், நாடாள்வான் காவல் உனைக்காக்கும் என உரைத்துவிட்டு, கீரந்தை என்பான், பொருள் தேடிப்போய்விட அதற்கேற்ப, இரவில், காவல் மேற்கொண்டு, நகர்வலம் வந்துகொண்டிருந்தபோது, பொருள் தேடிப்போனவன் திரும்பி வந்து, மனைவியோடு உரையாடிக் கொண்டிருக்க, கீரந்தை வந்தது அறியாமையால், அயலான் வந்துளனோ என்ற ஐயத்தால, கதவைத்தட்ட, கீரந்தை "யார் அது" எனக்கேட்டுக் குரல் எழுப்ப, அது கேட்டு, கீரந்தை மனைவிபால் ஐயங்கொள்வனோ என்ற அச்சத்தால் நகரில் உள்ள அனைத்து வீட்டுக் கதவுகளையும் தட்டிக்கொண்டே, அரண்மனைக்குச் சென்றுவிடப், பொழுது விடிந்ததும், மக்கள் வந்து முறையிட, தட்டியது என் கைதான், அக்குற்றத்திற்காகத் தன் கையைத் தானே வெட்டிக் கொள்ள, வெட்டப்பட்ட, கை, பொற்கையாக வடிவெடுக்கப் பெற்றுக் கொண்டவன். சிவபிரானுக்குத் தன் மகள்

தடாதகைப் பிராட்டியாரை மணம் செய்து கொடுத்த மலையத்துவசன், என்று பாண்டியர், ஐவர் வரலாறு அடிப்படைச் சான்றுகள் இல்லாமலே கூறப் பட்டுள்ளது.[1]

## ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்

தமிழகத்தை வென்று கைக்கொள்ள எண்ணி வந்த வடநாட்டு ஆரியப்படையை வென்றவன். பொற்கொல்லன் சொல் கேட்டு, கோவலனைக் கள்வன் எனக் குற்றம் சாட்டிக் கொன்றுவிடக் கண்ணகியால் கோவலன் குற்றம் அற்றவன் என் அறிந்ததுமே அரியணை மீதே உயிர் விட்டவன்; கணவன் துறக்கக் கண்டதுமே, உயிர்விட்ட நல்லாளை மனைவியாகப் பெற்ற மாண்புடையான் இவன்.[2] கல்வியின் நலத்தை நாட்டவர்க்கு எடுத்துரைத்த, நல்ல புலவனுமாவன்.[3]

## இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன்

இவனைப் பாடிய புலவர்கள் ஆவூர் மூலங்கிழார்,[4] காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனார்,[5] நக்கீரர்[6], மருதன் இளநாகனார்[7], வடமவண்ணக்கன் பேரி சாத்தனார்[8] ஆகிய ஐவர் ஆயினும், அவன் வரலாறு உரைத்தார் யாரும் இலர். அவர் பாடல்கள் எல்லாம், அவன் கொற்றம், கொடைவளம்; கொடுப் பதைக் காலத்தே கொடுக்காதகுறை போன்றவற்றைப் பொதுவாகவே பாடியுள்ளன.

## ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன்

ஒல்லையூர், சோழ நாட்டு ஒலியமங்கலம், அல்லது கோனாட்டு ஒலியமங்கலம் எனக் கருதப்படுகிறது. புறநானூற்று அடிக்குறிப்பில் பூதப் பாண்டியன் ஒல்லையூரை வென்ற நிகழ்ச்சி எதுவும் கூறப்பட வில்லை. இவன் பாடிய பாட்டில், மாவன், ஆந்தை, அந்துவஞ்சாத்தன், ஆதன் அழிசி, இயக்கன் ஆகியோர் இவன் நண்பர்கள் என்பதும், மேற்கொண்ட போரில் வெற்றிக் கொள்ளத் தவறின் நண்பர்களாகிய இவர்களை இழக்கக்கடவேன்;என் மனைவியைப் பிரியக் கடவேன்'' எனச் சூளுரைத்ததகாக மட்டுமே அறியக் அறியக்கிடக்கிறது.[9] அவன் மனைவியின் பாடலாம் புறம் 246, மதுரைப் பேராலவாயர் பாடலாம் புறம்-247 ஆகிய பாடல்கள் மூலம், இவன் எவ்வாறோ மாண்டு போக, அவனை விட்டு உயிர் வாழ விரும்பா அவன் மனைவி பெருங்கோப்பெண்டு தீப்பாய்ந்து உயிர் விட்டாள் என்பதும் அறியக்கிடக்கிறது.

## கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி

இவனைப் பாடிய புலவர் இரும்பிடர்த்தலையார் ஒருவரே, பாடிய பாட்டும் ஒன்றே.[10] அதில், அவன் ஆற்றல், அவன் நாற்படைப்பெருமை, அவன் கொடை நலம் ஆகியன பொதுவாகவே பாராட்டப்பெற்றுள்ளன.

## கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதி

காளையார் கோயில் என வழங்கும் கானப்பேர் என்ற இடத்தில் வேங்கை மார்பன்-ஒரு வீரன், காவற் காடுகளும், சிற்றரண்கள் பலவும் சுற்றியிருக்க, அழிக் கலாகா அரண் ஒன்றை அமைத்திருந்தான். தன்நாட்டின்

நடுவே, அத்தகைய அரண் இருப்பது, நாட்டின் பாது காப்புக்கு நல்லதாகாது என உணர்ந்து, அதை, மீண்டும் புதுப்பிக்க இயலாவாறு அழித்துவிட்ட காரணத்தால், இவன் கானப்பேர் எயில் கடந்த உக்கிரப்பெருவழுதி எனப் பெயர் பெற்றான். இவ்வரிய செயலைப் பாராட்டியவர் புலவர் ஐயூர் மூலங்கிழார்.[11]

மூவேந்தர்கள், ஒருவரோடொருவர் பகைகொண்டு அழிந்து ஒழியும், இயல்புக்கு மாறாக, இவன், தன் காலத்தில் சேரநாடாண்டிருந்த மாரிவெண்கோவுடனும், சோழ நாடாண்டிருந்த இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளியோடும் நட்பு பூண்டு வாழ்ந்திருந்தான். இப் பெருமையை ஔவையார் பாராட்டியுள்ளார்.[12]

புலவர்கள் போற்றும் புரவலனாகிய இவன் தானும் ஒரு புலவனாவன். கணவன், பிரிந்திருந்தபோது, அவன்பால் தவறுகளையே காண்பாள் ஒருத்தி, அவன் வந்ததும், அத்தவறுகளையெல்லாம் மறந்துவிடும் நல்ல பண்பு அமைந்த தமிழ் மகள் ஒருத்தியின் மன நலம் விளங்கும் அழகிய பாடலைப் பாடியுள்ளார்.[13]

## கீரஞ்சாத்தன்

இவனைப் பாடிய புலவர் ஆவூர் மூலங்கிழார்.[14] பாடல் மூலத்தில் இவன் பெயர், "பெரும்பெயர்ச் சாத் தன்" என்று மட்டுமே வந்துளது. கொளு "பாண்டியன் கீரஞ்சாத்தன்" என்கிறது. அதனால் இவனைப் பாண்டியர் குலத்தவன் என அறிகிறோம். சிறந்த நாற்படையாளன், சிறந்த வீரன், சிறந்த கொடையாளி.

## கூடகாரத்துத் துஞ்சிய மாறன்வழுதி :

இவனைப் பாடிய புலவர்கள், ஐயூர் முடவனாரும் (புறம் : 51) மருதன் இளநாகனாரும்(52) ஆவர். இவர்கள், இவனை முறையே "வழுதி" என்றும்,[15] "இயல்தேர் வழுதி"[16] என்றும் அழைத்துள்ளனர். இவன் கூடகாரத்தில் துஞ்சினான் என்பது கொளுவால் தான் தெரிகிறது. அக்கூடகாரம் எங்கே இருக்கிறது. அங்குத் துஞ்சக் காரணம் யாது என்பன விளங்க வில்லை. இவன், தமிழ்நாடு மூவேந்தர்க்கும் பொது என்பதைப் பொறுத்துக்கொள்ளாதவன், பணிந்த அரசர் வாழ்வர். பணியாத நாடு, பாழுற்றுப் போகும் எனப் பொதுப்படையாகவே, இவன் பாராட்டப் பெற்றுள்ளான்.

## சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறன் :

இவனைப் பாடிய புலவர், மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச்சாத்தனார்(புறம் :59) அவர்இவனைத்"தகை மாண்வழுதி" என்று மட்டுமே அழைத்துள்ளார்.[17] சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறன் என்பது கொளு வால் மட்டுமே அறியப்படுகிறது. பகைவர்க்கு ஞாயிற்றின் வெப்பம் போல் கொடியவன், புலவர், இரவலர்களுக்கு, திங்களின் தண்ணொளிபோல் இனியன் என அவன் கொற்றம் கொடைகள் பொது வகையாகவே பாராட்டப் பெற்றுள்ளன.

# தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்

சங்ககால பாண்டிய மன்னருள் சிறந்து விளங்கியவன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் ஆவன், இவனைப் பாடிய புலவர்கள், ஆலம்பேரிசாத்தனார்[18], இடைக்குன்றூர் கிழார்[19] எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார்[20], கல்லாடனார்.[21], குடபுலவியனார்[22] குறுங்கோழியூர் கிழார்[23], நக்கீரர்[24], பரணர்[25], பொதும்பில் கிழார் மகனார்[26], மதுரைப் பேராலவாயர் [27], மாங்குடி கிழார்[28], ஆகிய பதினொரு புலவர்களாவர்;

இவனைப் பாடிய புலவர் எவரும் இவனை நெடுஞ் செழியன் என அழைத்தாரில்லை. "பசும் பூண் பாண்டியன்" [29], "செழியன்"[30] என்ற இரு பெயர் களினாலேயே அழைத்துள்ளனர். இவர்கள் பாடிய 25 குறும்பாடல்கள், 2 நெடும்பாடல்களிலிருந்து அறிய லாகும். இவன் வரலாறு பின் வருவன.

"செழியன் அரியணை ஏறுங்கால் நனிமிக இளையன். துணையற்று நின்ற தனியன். இதைக் கண்ணுற்ற சேரனும்) யானைக் கண் சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை), சோழனும், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோ வேண்மாள். பொருநன் ஆகிய யோரும் ஒன்று கூடி "செழியன் இளைஞன்; தனியன்; நாமோ முதிர்ந்தவர்; எழுவர்; வென்று பெறலாம்; பொருளோ அதிகம், எனக் கருதிப் போர் தொடுத்து வந்தனர்[31]

இளைஞனே எனினும், ஈடிலாத் திறனுடையனாய செழியன் பகைவர் செயல் அறிந்தான் வஞ்சினம் உரைத்து தேர் ஏறிப் போர்க்களம் புகுந்தான். கூடற்

பறந்தலை களத்தே பகைவர்களை முறியடித்தான்[32] யானைக்கண் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை சிறைபட்டான். புறங்காட்டி ஓடிய பகைவர்தம் போர் முரசுகள் செழியன் கைப்பட்டன.[33]

சேரன் சிறைப் பட்டானாகவே, பகைவர் படை சோணாடு நோக்கி ஓடலாயிற்று. சோணாட்டுப் புக்க செழியன், தஞ்சை மாவட்டத்து ஆலங்கானம் எனு மிடத்தே அவ்வரசர், படை அனைத்தையும் அழித்து, அவர்தம் முரசு, குடை பொருள் முதலாம் வளம் அனைத்தையும் கொண்டு மீண்டான். அவ் வெற்றிச் சிறப்பினை அவன் பெயரோடு இணைத்துத்'' தலை யாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்'' என புகழ் பெற்றறான்.[34]

சிறை பிடிக்கப் பெற்ற சேரன், சிறை பிழைத்துச் சென்று விட்டான் என்பதை அறிந்து. பெரும்படை யுடன் சேரநாடு சென்றான். முசிறிநகரை முற்றி வளைத்து, யானைப்படையை அழித்து, அவ்வெற்றி விளங்க பொற்பாவை யொன்றையும் கவர்ந்து மீண்டான்[35].

தமிழரசர் அனைவருக்கும் தொல்லை விளைக்கும் வல்வில் வாழ்வினரான கொங்கரை அழிக்கத் தன் படைத் தலைவருள் ஒருவனாய அதிகனை அனுப் பினான். வாகைப் பறந்தலை யிடத்தே கொங்கரை எதிர்த்த அதிகன் கொல்லப்பட்டான். செழியன் களம் சென்று கொங்கரை வென்று அவர்க்குரிய நாட்டைக் கைப்பற்றினான்.[36]

நீடூர்க் கண் இருந்து மிழலைக் கூற்றம் எனும் நாடாண்ட எவ்வி என்பானை வென்றான். அவ் வெற்றிக்குத் துணை நின்ற தன் வீரர்க்கு அரமணை வாயிலைஅடுத்த உரத்தூரில் பெருஞ்சோறளித்தான்.[37]

6

எவ்விக்குத் துணையாக வந்த வேளிர்க்கு உரிய முத்தூற்றக் கூற்றம் எனும் நாட்டைக் கைக் கொண்டான்[38] தென்னாட்டு வாழ்வினராய பரதர் என்பாரையும் வெற்றி கொண்ட செழியன் அவர்க்குரிய நெல்லூர் எனும் பேரூரையும் கைப்பற்றினான்.[39]

தன் வெற்றிக்கெல்லாம் துணையாய் நின்ற நாற் படைபால் பேரன்புடையவனாய் விளங்கினான். வெற்றி பெற்ற பின்னரும், தலைநகர் திரும்ப விரும்பாது, பாசறையில், போரில் புண் பெற்றுவிட்ட மறவர் களையும், யானை குதிரைகளையும் புண் போக்கிக் காப்பதில் கருத்துடையவனாய்த் திகழ்ந்தான்[40]

"உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தாராவர்; ஆகவே, உழவர் நலம் பேணுக" எனப் புலவர் கூறும் பொன்னுரைகளை ஏற்று அரசாண்டான்[41] புலவர் போற்றும் புரவலனாகிய இவன் தானும் ஒரு புலவன் ஆவன்.

போரில் வெற்றி பெறேனாயின், எம் குடிகள் என்னைக் கொடுங்கோலன் எனப் பழிக்கட்டும், அவைக் களப் புலவர் மாங்குடி மருதன் உள்ளிட்ட புலவர்கள் என்னைப் பாடாராகுக; வறுமையால் வந்து இரப்பார்க்கு ஏதும் ஈயமாட்டா, வறுமை என்னை வந்தடையுமாக" என வஞ்சினம் கூறியதன் மூலம்[42] இவன் நல்லியல்புகள் பலவற்றை அறியலாம்.

## பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி

இவனைப் பாடிய புலவர்கள், காரிகிழார்[43] (புறம்,6) நெட்டிமையார்[44] ஆகிய இருவர், மட்டுமே, இவர் பாடல்களால் அறியத் தக்க இவன் வரலாறு; இவன் பெயர் "குடுமி" என்பதும்,[45] பகையரசர் கோட்டைகள்

பலவற்றை வெற்றி கொண்டவன் 46 முனிவர், முக்கண் செல்வனாம் சிவன் இவர்கள் முன் மட்டுமே இவன் தலை வணங்கும்; நான்மறை முனிவர்கள் வாழ்த்தும்போது மட்டுமே இவன் கை கூம்பும்; பகைநாட்டில் மூட்டிய தீயின் வெப்பத்தால் மட்டுமே இவன் மார்பு மாலை வாடும்; தன் மனைவியர் ஊடலைக் கண்ட அளவே இவன் சினம் இல்லாமல் போகும்[47] பகைநாட்டு மீது போர் தொடுத்து எழுவதன் முன் அந்நாட்டுப் படைவீரர் அல்லார்க்கும், அந்நாட்டுப் பசுபோலும் உயிர்களுக்கும் கேடு நேராமை கருதி, "நான் போர் தொடுத்து வரு கின்றேன், ஆகவே நீங்கள் எல்லாம் பாதுகாப்பான இடம் நாடிச் சென்று விடுங்கள்" என பறை அறைந்து அறிவித்துவிட்ட பின்னரே போர் தொடுப்பன்[48] பகை நாட்டில் வென்றுகொண்ட பொருட்களை எல்லாம், இரவலர்க்கே வழங்கிவிடுவேன்,[49] வேள்விபல இயற்றி யவன்[50], என்ற இவை மட்டுமே. பகைவர் யார்? போரிட்ட போர்க்களங்கள் யாவை என்ற விளக்கம் எதுவும் இல்லை.

கி.பி. 765 முதல் 790 வரை அரசாண்டிருந்த நெடுஞ் சடையன், பராந்தக பாண்டியன், பிறப்பித்த வேள்விக்குடி செப்பேடுகள், பாகனூர் கூற்றத்தைச் சேர்ந்த நால்வேத நெறியறிந்தவர்பால், வேதம் கற்ற, கொற்கை நற்கொற்றன்; ஒரு வேள்வி எடுக்க, அவ் வேள்விக்கு வந்த இவன், அவ்வேள்வி நிகழ்ந்த ஊருக்கு வேள்விக்குடி எனப் பெயர்சூட்டி. நற்கொற்றனுக்குத் தானமாகக் கொடுத்தான் என்கிறது[51]

## மதிவாணன்

இவனைப் பாடிய சங்கப் புலவர் எவரும் இலர், சிலப்பதிகாரம்; உரைச்சிறப்புப்பாயிரம், அடியார்க்கு நல்லார் உரைமூலம், இவன், கடைச்சங்கம் நிறுவிக் கவியரங்கம் ஏறிய பாண்டிய மன்னர்களுள் ஒருவன், தன் பெயரால், "மதிவாணனி," என்ற நாடகத் தமிழ் நூல் இயற்றியவன் என்பது தெரிய வருகிறது.

## மாலை மாறன்

மாறன் என்ற பெயரால், இவனைப் பாண்டியர் குலத்தவன் என்பதை மட்டும் அறிகிறோம். இவனைப் புலவர் எவரும் பாடவில்லை. ஆனால் இவனே ஒரு புலவன்: தலைவன் பிரிவால் நேரும் கொடுமையிலும் அது அறிந்து, ஊரார் அவனைத் தூற்றும் சொல் கேட்பதால், நேரும் கொடுமையே பெரிதாம் என்ற தலைவி கூற்றமைந்த பாடல் ஒன்றை இவன் பாடியுள்ளான்[52]

## மாறன் வழுதி

மாறன் வழுதி என்ற இவன் பெயர் கொண்டு இவனைப் பாண்டியர் மரபில் வந்தவன் என அறிய முடிகிறது. இவனையும் புலவர் எவரும் பாடவில்லை, மாறாக இவனே ஒரு புலவன். இவன் பாடிய பாக்கள் இரண்டு நற்றிணையில் இணைக்கப் பட்டுள்ளன. ஒன்று முல்லைத்திணை பாடல்,[53] பிறிதொன்று குறிஞ்சித்திணை பாடல்.[54]

## முடத்திருமாறன்

தமிழ்ச்சங்கம் மூன்றனுள், இடைச்சங்கத்தின் இறுதியைக் கண்டு, கடைச்சங்கத்தைத் தோற்று வித்தவன் இவன், குமரிநாடு, கடல்கோளால் அழிவுறு வதற்கு முன்னர், குமரி, தாம்பிரபரணி, ஆறுகளுக்கு இடையில் இருந்த குமரிநாட்டை ஆண்டவன். தலை நகர் கபாடபுரத்தில் இடைச்சங்கத்தை நிறுவிக் காத்த மன்னர்களில் ஒருவன். இவன் காலத்தில் நிகழ்ந்த பிறிதொரு கடல் கோளால், குமரி நாடும் அழிவுற்றுப் போக, இன்றைய மதுரையைத் தலைநகராகக் கொண்ட பாண்டி நாடு கண்டவன். அங்கு மூன்றாம் சங்கத்தைக் கண்ட முதல்வன் இவன். இவ்வரலாற் றினைக் களவியல் உரை உணர்த்துகிறது. கடைச் சங்கம் கண்டு புலவர்களைப் பேணித் தமிழ் வாழத் துணை புரிந்ததோடு தானும் ஒரு புலவனாய்ப் பாடல் புனைந்தவன்; இவன் பாடிய பாடல்கள் இரண்டு நற்றிணைக்கண் இடம் பெற்றுள்ளன.55

## வெள்ளி அம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி :

இவனைப் பாடிய புலவர், காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் ஒருவரே[56] (புறம்: 58),

ஆலின் பெருமரம் வீழ்ந்தபோது, அதன் விழுதுகள் தாங்குவதுபோல்; பாண்டியர் குலத்துக்கு நேர்ந்த கேட்டைப் போக்கியவன். பாண்டியர்க்கே உரிய முத்து, பொதிய மலைச் சந்தனம், வெற்றி, கொற்ற முரசுகளால் பெருமை கொண்டவன், இவை அனைத் திலும் மேலாக, ஏனைய மூவேந்தர்போல் அல்லாமல்,

தன் காலத்தே, சோழ நாட்டு அரியணையில் இருந்த, குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனுடன் நட்பு கொண்டிருந்தான். இவன் வரலாறாக அறியத்தக்கன இவ்வளவே.

## வெற்றிவேற் செழியன்

ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் மகன். கொற்கையைத் தலைநகராகக் கொண்டு, தென்பாண்டி நாட்டைத் தந்தைக்குப் பதிலாக ஆண்டிருந்தவன். கோவலனை ஆராயாதே கொன்றுவிட்டது உணர்ந்து, தந்தை உயிர் விட்டதும், மதுரைக்கு வந்து மணிமுடி சூட்டிக்கொண்டவன்.[57]

பாண்டியநாடு மழைவளம் குறையவே, அது கண்ணகி நல்லாளுக்கு இழைத்த கொடுமையால் என உணர்ந்து, பொற்கொல்லர் ஆயிரவரைக் கொன்று விழா எடுக்க, மழைவளம் பெற்றது எனக் கூறுகிறது சிலப்பதிகார உரை பெறு கட்டுரை.

## காவல பாவலர்

பாண்டியர் குலத்து வந்த புலவர்கள், பன்னிருவர் ஆவர். அவர்களுள், ஆரியப்படை கடந்த நெடுஞ் செழியன்[58] ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன்[59] கானப் பேர் எயில் கடந்த உக்கிரப்பெருவழுதி[60] தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்[61] முடத்திரு மாறன்,[62] ஆகிய ஐம்பெரும் புலவர் வரலாறு, அவர்கள் வரலாறு உரைத்தபோதே உரைக்கப்பட்டது.

ஏனைய எழுவர் வரலாறு பின் வருவன.

## 1. அண்டர் மகன் குறுவழுதியார்

பாண்டியர் தொல்குடியாம், ஆயர் குடியாம் அண்டர் குடிவந்தவர். மலைப்பாறைகளில், வேங்கை மலர்கள் உதிர்ந்து கிடப்பதை இரவில் காணும் யானைகள், புலியெனக் கொண்டு அஞ்சி ஓடும் காட்சியையும்,[63] தோழி தலைவனுக்கு, "நின் தேரை மணல் மேட்டில் நிறுத்திவிட்டு, இரவு வந்து செல்க" என இரவுக்குறி நேர்தலைதயும்,[64] தான் விரும்பும் ஒரு பெண்ணை அவள் தந்தை தர மறுக்க, வலிந்து கொண்டு செல்ல முயல்வதாம் 'மகட்பாற் காஞ்சி' என்ற துறை அமைந்த பாடலையும் 65 பாடியுள்ளார்.

## 2. அறிவுடைநம்பி :

அறிவுடைநம்பியின் அரசியல் பணியாளர் குடிகளிடம் பெறவேண்டிய வரிகளைப் பெறவேண்டுமளவு பெறாது, அளவின்றிப் பெறத்தொடங்கியபோது, பிசிராந்தையார் கூறிய அறிவுரை கேட்டுத் தன் பணியாளர்களைக் கட்டுப்படுத்தியவன். 66 மக்கள் செல்வத்தின் பெருமையைப் பார் அறியப் பாராட்டிப் பாடியவன்.[67] திருமணம் செய்து கொள்ளாது வந்து செல்லும் தலைவனை வரைந்து கொள்ளுமாறு அறிவுரை கூறும் தோழி கூற்று அமைந்த பாடலையும்[68] பாடியுள்ளார்.

## 3. ஏனாதி நெடுங்கண்ணனார் :

பாண்டியர் குடியில் பிறந்தோ, பாண்டியர் படைத் தலைமை பூண்டோ, ஏனாதி பட்டம் பெற்றவர். அரணைச் சூழ உள்ள மதில்கள் எல்லாம் அழிந்துபோக, ஒரே ஒரு மதில் மட்டுமே அழிவுறாதிருக்கும் கோட்டைக் குரிய காவலன் கவலையை ஒரு பாட்டில் படம்பிடித்துக் காட்டியுள்ளார்.[69] பார்ப்பனர், முருக்க நாரால் ஆன நூலும், தண்டும், கமண்டலமும், உடையவர், உண்ணா நோன்பு மேற்கொள்பவர்; எழுதாக் கிளவியாம் நால் வேதம் கற்றவர் எனப் பார்ப்பனர் ஒழுக்கத்தை அறிந்து உணர்த்தியுள்ளார்.[70]

## 4. கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி :

இவர் பாடிய பாடல்கள், நற்றிணையில் இரண்டு[71] புறத்தில் ஒன்று[72], பரிபாடலில் ஒன்று,[73] ஆக நான்கு. கடல் வாணிபம் செய்தவர் தமிழர்; கடற்போர் கண்டவர் தமிழரசர். அத்தகைய கடற்மேற் செலவின்போது இவர் உயிரிழக்க நேர்ந்தமையால் போலும் இவர் இப்பெயர் பெற்றார். காதலனைத் தேடிப்போன நெஞ்சம் ஆங்கு அவனைக் காணாமையால் மீண்டு வந்த வழி. நான் கவலையால், உருவே மாறுபடுமளவு மெலிந்து விட்டமையால், என்னை வேறு ஒருத்தியாகக் கருதி எங்கோ போய்விட்டதோ எனத் தலைவி கூறியதாக இவர் பாடியிருக்கும் பாடல் நயம், மகிழத்தக்கது.[74] அமிழ்தமே பெறினும், தாமே உண்ணார். யார்மாட்டும்; சினம் கொள்ளார்; ஒருபொழுதும் சோம்பி இரார். அஞ்சத்தக்க பழிபாவங்களுக்கு அஞ்சுவர், வேண்டு

வார்க்குத் தம் உயிரையும் கொடுப்பர், பெருநிதியே எனினும், கையேந்திப் பெறார்; அத்தகையார் சிலர் இருப்பதால்தான், உலகம் இருக்கிறது என்ற பொருளமைந்த புறநானூற்றுப்பாடல் போற்றுதற்கு உரியது.75 பரிபாடலில் திருக்மாலின் திருகோலத்தை நன்கு காட்டி வழிபட்டுள்ளார்.76

## 5. குறுவழுதியார் :

அண்டர் மகன் குறுவழுதியார் வேறு; இவர் வேறு; "தலைவியை புறம்போகவிடாது, இற்செறித்துவிட்டாள் தாய்; ஆகவே, தலைவியைக் காணக், கடற்கரைக் கானச் சோலைக்கு வாரற்க; கடிதில் மணம் முடித்துக் கொள்'' எனத் தலைவனை நோக்கி தோழி கூறியதாக அமைந்த பாடல் ஒன்றே, 77 இவர் பாடியது.

## 6. நல்வழுதி

நல்வழுதி பாடிய பாட்டு, பரிபாடல் ஒன்றே;78 என்றாலும், பிற ஆடவர்பால் மனம் செலுத்தாமையாம் கற்பு பெண்டிற்கு மட்டுமே வரையறுக்கப்பட்டது ஒன்றன்று; பிற பெண்டிர்பால், மனம் செலுத்தாமையாம் கற்பு ஆடவர்க்கும் உண்டு. அது ஒருவன் செய்து விட்டால் ''பிழையினை'' என, அவனைக் கண்டிக்கும் உரிமையும் அவன் மனைவிக்கு உண்டு. அவளைத் தொழுது பிழை பொறுக்க வேண்டியவனுமாவன் கணவன், என்ற உயர்ந்த நெறியைக் காட்டியுள்ளார்.79

## 7. பாண்டியன் பன்னாடு தந்த மாறன் வழுதி

இவன் பாடிய பாடல்கள் மூன்று.[80] (நற் : 97; 301; குறுந்270) 'பன்னாடு தந்த' என்ற சிறப்பு இவனுக்கு வந்த காரணம் தெரியவில்லை. கடல் கோளால், பாண்டிநாட்டின் பெரும் பகுதி ஆழ்ந்து போக இழந்த நாட்டிற்கு ஈடாக வடக்கே பல நாடுகளைக் கொண்ட பாண்டியன் வரலாறு, கலித்தொகையிலும் [81] சிலப்பதி காரத்திலும் [82] கூறப்பட்டுளது. இவன் அவனாதல் கூடுமோ என்பது ஆராயத்தக்கது. கணவன், பொருள் தேடல்போலும் வினை மேற் காண்டு வேற்றூர் சென்றுவிடத் தனித்திருக்கும் தலைவிக்கு, மாலையில் மலர் விற்கும், மகளிரும் வெறுக்கத் தக்கவராவர்[83] என்பதுபோலும் கருத்தமையப் பாடியிருக்கும் இவர் பாடல்கள் நல்ல நயம் உடையன.

# சான்றெண் விளக்கம்

1. சிலம்பு. 11:17-29; 23:42-53
   திருவிளையாடல் புராணம்

2. ''வடவாரியர் படை கடந்து
   தென் தமிழ் நாடு ஒருங்கு காணப்
   புரைதீர் கற்பின் தேவி தன்னுடன்
   அரசு கட்டிலில் துஞ்சிய பாண்டியன்
   நெடுஞ்செழியன்''

   சிலம்பு. 23: 14-18

3. ''உற்றுழி உதவியும், உறுபொருள் கொடுத்தும்
   பிற்றை நிலை முனியாது கற்றல் நன்றே;
   பிறப்போ ரன்ன உடன்வயிற் றுள்ளும்
   சிறப்பின் பாலால் தாயும் மனம் திரியும்;
   ஒரு குடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
   மூத்தோன் வருக என்னாது, அவருள்
   அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும்,
   வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
   கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
   மேற்பால் ஒருவனும் அவன்கட் படுமே''

   புறம். 183

4. புறம். 196
5. புறம். 57
6. புறம். 56
7. புறம். 55
8. புறம். 198

9. ''பொய்யா யாணர் மையல் கோமான்
மாவனும், மன்னெயில் ஆந்தையும், உரைசால்
அந்துவஞ் சாத்தனும், ஆத னழிசியும்,
வெஞ்சின இயக்கனும் உளப்படப்பிறரும்
கண்போல் நண்பின் கேளிரொடு கலந்த
இன் களி மகிழ் நகை இழுக்கி யான்''

புறம். 71

10. புறம். 3

11. ''கதிர் நுழை கல்லா மரம்பயில் கடிமிளை
அருங்குறும்பு உடுத்த கானப் பேரெயில்
கருங்கைக் கொல்லன் செந்தீ மாட்டிய
இரும்பு உண் நீரினும் மீட்டற்கு அரிது என
வேங்கை மார்பன் இரங்க, வைகலும்
ஆடு கொளக் குழைந்த தும்பைப் புலவர்
பாடு துறை முற்றிய கொற்ற வேந்தே''

புறம். 21

12. புறம். 367
13. அகம். 16
14. புறம். 178
15. புறம். 51
16. புறம். 52
17. புறம். 59
18. அகம். 175
19. புறம். 76-79
20. அகம். 149
21. புறம். 23, 25, 371, அகம். 209
22. புறம். 18,19
23. புறம். 17
24. அகம். 36,57,253; நெடுநல் வாடை

25. அகம். 116,162,266; குறுந். 393

26. நற். 387

27. அகம். 296

28. புறம். 24,26,372; மதுரைக் காஞ்சி

29. ''வில் கெழு தானைப் பசும் பூட் பாண்டியன்''
பரணர்—அகம். 162
''வெண் குடைப் பசும்பூட் பாண்டியன்''
ஈழத்துப் பூதன் தேவனார்—அகம். 231
பசும்பூட் பாண்டியன்'' நக்கீரர்—அகம். 253
''திருவிற் பசும்பூட் பாண்டியன்''
மதுரைக் கணக்காயனார்—அகம். 338

30. ''அடுபோர்ச் செழியன்'' அகம். 149
''மறப்போர்ச் செழியன்'' அகம். 116
''கொடித் தேர்ச் செழியன்'' அகம். 36

31. புறம். 78;79;

32. ''மையணி யானை மறப்போர்ச் செழியன்
பொய்யா விழவின் கூடற் பறந்தலை
உடனியைந் தெழுந்த இருபெரு வேந்தர்
கடல் மருள் பெரும் படை கலங்கத் தாக்கி,
இரங்கிசை முரசம் ஒழியப் பரந்தவர்
ஒரு புறம் கண்ட ஞான்ற
ஆடு கொள் வியன் களத்து ஆர்ப்பினும் பெரிதே''
அகம். 116

33. புறம். 26

34. ''ஆலங்கானத்து அஞ்சு வர இறுத்த
வெல் கெழு தானைச் செழியன் பாசறை
உறை கழி வாளின் மின்னி''
நற். 387

காலியல் நெடுந்தேர்க் கைவண் செழியன்
ஆலங் கானத்து அமர்கடந் துயர்த்த
வேலினும் பல்லூழ் மின்னி'' அகம். 175

''கொய் சுவற் புரவிக் கொடித் தேர்ச் செழியன்
ஆலங் கானத்து அகன்தலை சிவப்பச்
சேரல், செம்பியன், சினங் கெழு திதியன்,
போர்வல் யானைப் பொலம் பூண் எழினி
நார் அரி நயவின் எருமை யூரன்,
.......................................
இருங்கோ வேண்மான், இயல் தேர்ப் பொருநன்
என்று
எழுவர் நல்வலம் அடங்க, ஒரு பகல்
முரசொடு வெண்குடை அகப்படுத்து உரைசெலக்
கொன்று களம் வேட்ட ஞான்றை
வென்றி கொள் வீரர் ஆர்ப்பினும் பெரிதே''
—அகம்—36

''ஆலங் கானத்து அஞ்சுவர இறுத்து
அரசுபட அமர் உழக்கி
முரசு கொண்டு களம் வேட்ட
அடுதிறல்உயர் புகழ் வேந்தே''
—மதுரைக் காஞ்சி-127—30

''எழுவுறழ் திணிதோள் இயல்தேர்ச் செழியன்
நேரா எழுவர் அடிப்படக் கடந்த
ஆலங்கானத்து ஆர்ப்பினும் பெரிதே''
—அகம்-208

''ஆலங்கானத்து அமர்கடந்தட்ட
கால முன்பநிற் கண்டெனன் வருவல்''
—புறம்-23

''ஒருவனை ஒருவன் அடுதலும், தொலைதலும்
புதுவதன்று; இவ்வுலகத் தியற்கை;
இன்றின் ஊங்கோ கேளலம்;
.................................
நாடுகெழு திருவின் பசும்பூண் செழியன்
பீடும் செம்மலும் அறியார் கூடிப்
பொருதும் என்று தன் தலை வந்த
புனைகழல் எழுவர் நல்வலம் அடங்க
ஒரு தானாகிப் பொருது களத்து அடலே''

—புறம்-76

''இமிழ்கடல் வளைஇய ஈண்டகன் கிடக்கைத்
தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து
மன்னுயிர்ப் பன்மையும், கூற்றத்து ஒருமையும்
நின்னொடு தூக்கிய வெவ்வேற் செழிய''

புறம்-19

''கொய் சுவல் புரவிக் கொடித் தேர்ச் செழியன்
முது நீர் முன்துறை முசிறி முற்றிக்
களிறு பட எருக்கிய நல்லென் ஞாட்பின்...''

—அகம்-57

''சேரலர்
சுள்ளியம் பேரியாற்று வெண்ணுரை கலங்க
.................................
வளங்கெழு முசிறி ஆர்ப்பெழ வளைஇ
அருஞ்சமம் கடந்து படிமம் வவ்விய
நெடுநல் யானை அடுபோர்ச் செழியன்''

அகம்-149

''பல்குட்டுவர் வெல்கோவே''

—மதுரைக்காஞ்சி-105

36. "கழல் தொடி அதிகன்
கோளற வறியாப் பயங்கெழு பலவின்
வேங்கை சேர்ந்த வெற்பகம் பொலிய
வில்கெழு தானைப் பசும்பூட் பாண்டியன்
களிறு அணி வெல் கொடி"

—அகம்-162

"கூகைக் கோழி வாகைப் பறந்தலைப்
பசும்பூட் பாண்டியன் வினைவல் அதிகன்
களிறொடு பட்ட ஞான்றை
ஒளிறு வாட் கொங்கர் ஆர்ப்பினும் பெரிதே"

—குறுந் -393

"கொங்கர் ஓட்டி
நாடு பல தந்த பசும்பூட் பாண்டியன்"

—அகம்-252

37. அகம் : 296
38. புறம்—24
39. மதுரைக் காஞ்சி 139-44; 83-88
40. நெடுநல் வாடை 168-188
மதுரைக் காஞ்சி 724-752
41. புறம் 18
42. "கொடியன் எம் இறை" எனக் கண்ணீர் பரப்பிக்
குடி பழி தூற்றும் கோலேனாகுக!
..........................
மாங்குடி மருதன் தலைவனாக
உலகமொடு நிலை இய பலர் புகழ் சிறப்பின்
புலவர் பாடாது வரைக! என் நிலவரை;
புரம்போர் புன் கண் கூர
இரப்போர்க்கு ஈயா இன்மையான் உறவே"

புறம்-72

43. புறம்-6
44. புறம்;9; 15; 12
45. "எங்கோ வாழிய குடுமி"—புறம்-6
"பல் சாலை முது குடுமி"—மதுரைக்காஞ்சி-760
46. புறம்-50
47. புறம்-6
48. புறம்-6
49. புறம் 12;6
50. "வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி"

—புறம்-15

"பல்சாலை முதுகுடுமியின் நல்வேள்வித் துறைபோகிய"

மதுரைக் காஞ்சி 759-60

51. "பல்யாக முதுகுடுமிப் பெருவழுதி என்னும் பாண்டியாதி ராஜன்

..............................

பாகனூர்க் கூற்ற மென்னும் பழனக் கடக்கை நீர் நாட்டு

..................................

கொற்கைக் கிழான் நற் கொற்றன், கொண்ட வேள்வி முற்றுவிக்க

....................................

வேள்விச்சாலை முன்பு நின்று, வேள்விக்குடி என்ற பதியைச்
சீரோடு திருவளரச் செய்தார் வேந்தன்"
வேள்விக்குடி செப்பேடு

52. குறுந்:245
53. நற்:97
54. நற்:301
55. நற்:105; 228
56. புறம்—58

57. சிலம்பு: 27:127—150
சிலம்பு-உரை பெறு கட்டுரை
58. புறம் 183
59. அகம்: 25; புறம் 71
60. அகம் 26; நற்; 98
61. புறம்-72
62. நற் 105; 228
63. புறம் 228
64. குறுந்-345
65. புறம்-346
66. புறம்-184
67. புறம்-188
68. அகம்-28
69. அகம்-373
70. குறுந்-156
71. நற்-55;56
72. புறம்-182
73. பரி-15
74. நற்-56
75. "உண்டாலம்ம இவ்வுலகம்; இந்திரர்
அமிழ்தம் இயைவதாயினும், இனிதெனத்
தமியர் உண்டலும் இலரே; முனிவிலர்;
துஞ்சலும் இலர்; பிறர் அஞ்சுவது அஞ்சிப்
புகழ் எனின் உயிரும் கொடுக்குவர்; பழி எனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர்; அயர்விலர்;
அன்ன மாட்சி அனைய ராகித்
தமக்கு என முயலா நோன்தாள்
பிறர்க்கு என முயலுநர் உண்மையானே"

புறம்182

76. பரி-50
77. அகம் 150
78. பரி 12
79. பரி 12; வரி 57-61
80. நற் 97; குறுந்-220
81 கலி 104
82. சிலம்பு-11; 18-22
83. நற்-97

# 5. வள்ளல்கள்

மூவேந்தர் ஆட்சி புரிந்த தமிழகத்தில், அம்மூவேந்தர்களே அல்லாமல், அவர்களுக்கு அடங்கியும், அடங்காதும் அரசாண்டிருந்தார்களும் பலர் இருந்தனர்.

எட்டுத் தொகை, பத்துப்பாட்டு போலும், இலக்கியங்களும், தொல்காப்பியம் போலும் இலக்கணமும் இருக்கின்றன என்றால், அன்று அவற்றை ஆக்கி அளித்த புலவர் பெருமக்களை, அவர்கள் தம் பசி அறியாவாறு பொன்னும் பொருளும் அளித்துக் காத்த வள்ளல்களே காரணம். சங்ககால வள்ளல்களாக, அதியமான் நெடுமான் அஞ்சி, ஆய் அண்டிரன், வல்வில் ஓரி, மலையமான் திருமுடிக்காரி, கண்டீரக்கோப் பெருநற்கிள்ளி, பறம்பிற் கோமான் பாரி, வையாவிக் கோப்பெரும் பேகன் என எழுவரைக் கூறுகின்றன[1] என்றாலும், அவர்களுக்குப் பிறகு அவர்களே போலும் வள்ளல்களாக வாழ்ந்தனர் என, ஓய்மானாட்டு நல்லியக் கோடனைப் புலவர் இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனாரும்[2] குமணனைப் புலவர் பெருஞ்சித்திரனாரும்[3] கூறியிருப்பதால் அவ்விருவரையும் சேர்த்து வள்ளல்கள் ஒன்பதின்மராவர்.

## 1. அஞ்சி

இவனைப் பாடிய புலவர்கள், அரிசில் கிழார்,[4] ஔவையார்,[5] தாயங்கண்ணனார்,[6] பரணர்,[7] பெருஞ்சித்திரனார்;[8] ஆக, ஐவர் ஆயினும், அவனைப் பெருமளவில் பாடியவர் ஔவையார் ஆவர்.

இவர் பாடல்களிலிருந்து இவன் வரலாறாக அறியத்தக்கன : சேரர் குடியோடு உறவுடைய அதியர் குடியில் வந்தவன். கரும்பைத் தமிழ்நாட்டிற்குக் கொண்டு வந்தவன்,[9] பொருட்டெழினி என்ற மகனைப் பெற்றவன்; இக்காலை தர்மபுரி என வழங்கும் தகடூரைத் தலைநகராகக் கொண்டவன்,[10] பகைவரால் பற்றற்கரிய திண்மை வாய்ந்தது அக்கோட்டை. அண்டை நாட்டு ஆனிரைகளைக் கவர்ந்து கொணரும் வழக்கம் உடையவன்.[11] தன்னோடு பகைகொண்டிருந்த தொண்டைமானிடம், பகை ஒழியுமாறு ஔவையாரைத் தூது விட்டவன். மலையமான் திருமுடிக்காரியின் திருக்கோவலூரை வென்றவன்.[12] தகடூர்ப்போரில் எழினியை வென்றவன்; ஆனால் பெருஞ்சேரல் இரும்பொறையால் கொல்லப்பட்டவன். சிறந்த கொடையாளி. கொடை அளிப்பதில் சிறிது காலம் கடத்துவன் என்றாலும், தவறாது கொடுப்பவன்,[13] ஔவைக்கு உண்டார் உயிரை நெடுங்காலம் வாழவைக்கும் அரிய நெல்லிக்கனியைத் தந்தவன்.[14] குதிரை மலைக்கு உரியவன்[15] இவ்வளவே.

## 2. ஆய்

இவனைப் பாடிய புலவர்கள். இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார்,[16] உமட்டூர்க்கிழார் மகனார் பரங்கொற்றனார்,[17] உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்,[18] காரிக்கண்ணனார்,[19] குட்டுவன் கீரனார்,[20] துறையூர் ஓடைகிழார்,[21] பரணர்,[22] பெருஞ்சித்திரனார்,[23] ஆக எண்மராவர்.

தமிழக மலைகளுள் தலைசிறந்ததும், தமிழ் மொழிக்கு இலக்கணம் கண்ட குறுமுனிவன் இருந்த தாகக் கூறப்படுவதும் ஆய பொதிய மலையைச் சூழ உள்ள நாடு, ஆய்நாடு எனப்படும். அது இமயத்திற்கு நிகரானது என்கிறார் மோசியார்24. கி. பி. 119-161ல் வாழ்ந்திருந்த நில நூல் பேராசிரியர் தாலமி அவர்கள், ஆய் நாட்டையும், அதன் துறைமுகங்களையும் குறிப் பிட்டுள்ளார்.

புலவர்களின் பாக்கள் வழி அறியலாம் ஆய் வரலாறு இது; ஆய்கானம், நறுமலர் நிறைந்தது,25 யானைகள் மலிந்தது. சிறந்த கொற்றமும் கொடையும் வாய்ந்தவன் ஆய் ஆய். நாட்டினுள், பாடிப்பரிசில் பெறும் ஆடுமகள் நுழைவது எளிது. ஆனால் படை எடுத்து வரும் பகைவர் நுழைலும் அரிது.26 பரிசிலாக, யானைகளையே கொடுப்பன். நாகம் ஒன்று அவனுக்கு அளித்த கலிங்கத்தை, ஆலமர் செல்வனுக்கு அளித்து விட்டான் என்பர், இடைக்கழி நாட்டுப்புலவர்.27 புலவர் எண்மர் பாராட்டிலும் மோசிகீரனார் பாராட்டிய பாராட்டே பெரிது என்பதால், "மோசி பாடிய ஆய்" எனப் பாராட்டியுள்ளார் பெருஞ்சித்திரனார்.28 ஆய் மறைந்த பின்னரும், வாழ்ந்து வருந்திப் பாடியவர்கள், மோசியாரும்,29 குட்டுவன் கீரனாரும்.30

## 3 ஓரி

இவனைப் பாடிய புலவர்கள் இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார்,31 கபிலர்32 கல்லாடனார்,33 கழைதின்யானையார், 34 பரணர்,35 பாலத்தனார்36 வன்பரணர்,37 பெருஞ்சித்திரனார். ஆக எண்மர் ஆவர்.

இவர் தம் பாக்கள் மூலம் அறியலாம், இவன் வரலாறு பின்வருமாறு;

சிறந்த வில்லாற்றல் வாய்ந்தவன். ஓரியின் வில்லி லிருந்து விரைந்து புறப்படும் அம்பு, தொடக்கத்தில் வேழத்தை வீழ்த்திப் பின்னர், புலியின் உயிரையும், மானின் உயிரையும், காட்டுப் பன்றியின் உயிரையும், போக்கிவிட்டு, இறுதியாக உடும்பின் உடலில் சென்று தைத்துச் செயலற்றுப் போகும்[38] அத்தகு வில்லாற்றலன் ஆகவே தான் வல்வில் ஓரி என அழைக்கப் பெற்றான்[39] மழவர்களை வென்றவன்[40] கொல்லி மலைக்கு உரியவன்.[41] தம் நாட்டகத்தே உள்ள கொல்லி மலையைப் பிறன் ஒருவன் ஆள்வது பொறாத, சேர வேந்தர் பணிக்க மலைமான் திருமுடிக்காரி, கொல்லி மீது படையெடுத்துச் சென்று, ஓரியைக் கொன்று விட்டுக் கொல்லியைச் சேரலர்க்குக் கொடுத்து விட்டு, அவ்வெற்றிக்களிப்பால், வெற்றி உலா வந்தான்,[42] ஓரி சிறந்த கொடையாளி; வறுமை உற்ற போது, வேழங் களின் தந்தங்களை விற்று மக்களை வாழ்விப்பவன்.[43]

## 4 காரி

இவனைப் பாடிய புலவர்கள், அம்மூவனார்[44] இடைக் கழிநாட்டுநல்லூர் நத்தத்தனார்[45] ஔவையார்[46], கபிலர்[47] கல்லாடனார்[48]. கோவூர்கிழார்[49] பரணர்;[50] பெருஞ் சித்திரனார்[51] மாறோக்கத்து நப்பசலையார் [52] வடம வண்ணக்கன் பேரிசாத்தனார் 53 ஆக பதின்மர் ஆவர்.

இப்பாடல்கள் மூலம் இவன் வரலாறாக அறியத் தக்கன; இன்றைய தென்னார்க்காடு மாவட்டத்தில்

பெண்ணை ஆற்றின் கரையில் உள்ள திருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்ட சிறுநாட்டை ஆண்ட மலையமான் வழிவந்தவன்[54] முள்ளூர் மலையினைக் கொண்ட அந்நாடு பகைவராலும் அழிவுறாது; கடல் கோள்களாலும் அழிவுறாது;[55] அம்மலையமான்கள் சிலகாலம், சோழர்க்கும், பிறிதொருகாலம் சேரர்க்கும் படைத்துணை அளித்து வந்தனர்[56]; தமிழகத்தைத் தனதாக்கிக் கொள்ள வந்த ஆரியப் படையை வென்று துரத்தியவர் அம்மலையமான்கள்.[57]

அம்மலைய மன்னர்களில் சிறந்தவன், காரி. அவன் தகடூர் அதியமான் நெடுமான் அஞ்சிபால் தோல்வி கண்டான். தலைநகரும் பேரழிவுக்கு உள்ளாயிற்று[58] அதியன்பால் தோல்வி கண்ட காரி, அவனை அழித்தற்கு ஏற்ற வழிமுறைகளை எண்ணியிருந்தான். அப்போது, சேர நாட்டு அரியணையில் இருந்த பெருஞ்சேரல் இரும்பொறை, தகடூரான் பால் பகை கொண்டுள்ளான் என்பது அறிந்து, அவன் துணை நாடினான். அவனோ, நான் உனக்குத் துணை புரிய வேண்டின், நீ என் பகைவனாகிய கொல்லிமலை ஓரியைக் கொன்று வரவேண்டும் என்றான். உடனே காரி கொல்லி சென்று ஓரியைக் கொன்றான்[59] அதனால் மகிழ்ந்த பெருஞ்சேரல், அதியமானின் தகடூர் மேல் படையெடுத்துச் சென்று, அதியமானைக் கொன்று காரியின் மனம் மகிழச் செய்தான். சேரனுக்குத் துணை போகிறான் காரி என்பதால், மலையமான் மக்களை, சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் கைப்பற்றிக் கொண்டு போய் யானையின் காற்கீழ் இட்டுக்கொல்லத் துணிந்தான். அது அறிந்த

கோவூர் கிழார், கிள்ளிவளவனை அணுகிஅறிவுரை கூறியதால் உயிர் தப்பினர், மலையமான் மக்கள்.[60]

திருக்கோவலூர் சாசனம் ஒன்று[61] பாரி இறந்த பின்னர், அவன் மகளிர் இருவரைப் புலவர் கபிலர் வேண்ட மணந்து கொண்டனர் மலையமான்கள் எனக் கூறுகிறது.

## 5. நள்ளி

இவனைப் பாடிய புலவர்கள், இடைக்கழி நாட்டு நல்லூர் நத்ததத்னார்,[62] காக்கைப் பாடினியார் நச்செள்ளையார்[63] பரணர்,[64] பெருந்தலைச் சாத்தனார்[65] பெருஞ்சித்திரனார்[66] வன்பரணர்[67] ஆகிய அறுவர் ஆவர்.

இப்பாடல்கள் மூலம், இவன் வரலாறாக அறியத் தக்கன; மதுரை மாநகர்க்குத் தெற்கே உள்ள தோட்டி மலைக்கு உரியவன்[68] கண்டீரக்கோப் பெரு நள்ளி, எனவும் அழைக்கப்பெறுவன்.[69] இவன் தம்பி இளங்கண்டீரக் கோவும், இளம் விச்சிக்கோவும் இருந்த போது, ஆங்கு வந்த, புலவர் பெருந்தலைச் சாத்தனார், முன்னவனைத் தழுவி அன்பு காட்டிய போது, "என்னைத் தழுவாதது ஏன்?" என இளவிச்சிக்கோ கேட்க, "கண்டீரக்கோக் குடி வந்த ஆடவர் மட்டுமே அல்லாமல், பெண்டிரும் கொடைவளம் கற்றவர்; ஆகவே, அக்குடி வந்தானைத் தழுவிக் கொண்டனன்" எனக் கூறி, கண்டீரக்கோ குலத்தவரின் கொடை வளத்தைப் பாராட்டினார்[70] நள்ளியின்காடு, நெய்வளம் பெருக்கும் அண்டர் எனும் ஆயர்களின் வாழிடமாம்[71]

# 6. பாரி

வள்ளல்கள் எழுவர் மட்டுமல்லாமல் பலர் இருப்பினும், "கொடுக்கிலாதானைப் பாரியே எனக் கூறினும் கொடுப்பாரிலை, எனச் சுந்தர மூர்த்தி நாயனாரால், வள்ளலகளுக்கு இலக்கணமாவன் எனப் பாராட்டப்பெற்ற பாரியைப் பாராட்டிய புலவர்கள் இடைக்கழிநாட்டுநல்லூர் நத்தத்தனார்,[72] ஔவையார்[73] கபிலர்[74] நக்கீரர்[75] பாரிமகளிர்[76] புறத்திணை நன்னாகனர்[77], பெருஞ்சித்திரனார்[78] ஆகிய எழுவராவர்.

இவர் பாடல்களால் அறியப்படும் இவன் வரலாறு வருமாறு; பாண்டி நாட்டுத் திருப்பத்தூருக்கு அணித் தாக உள்ள, இப்போது பிரான்மலை என அழைக்கப் பெறும் பறம்பு மலையையும், அதைச் சூழ இருந்த முந்நூறு ஊர்களையும் ஆண்டவன்.[79] ஒரு நாள் தேர் ஏறிச் சென்றவன், வழியில் முல்லைக்கொடி ஒன்று படர்தற்குக் கொழு கொம்பு இல்லாமல் அலைப்புறுவது கண்டு, அது ஏறிப்படர்க எனத் தன் தேரை, அக்கொடி அருகே நிறுத்தி ஏறவிட்டுவிட்டுக் கால்நடையாக அரண்மனை சேர்ந்தான்[80] பறம்புமலை ஒன்று நீங்க, அதைச் சூழ இருந்த முந்நூறு ஊர்களையும் இரவலர்க்கே கொடுத்து விட்டான்[81]

இவற்றால் அவன் புகழ், மூவேந்தர் நாடுகளைக் கடந்தும் பரவவே. அது பொறாத அவர்கள் அவன் பறம்பு மலையை வளைத்துக் கொண்டனர். அம்மலை யில் உழுது விளைவிக்க வேண்டாமல் தாமே விளையும் காய்கனி, கிழங்கு வகைகள், இருந்ததமையால் பல நாட்களாகியும், அவர்களால் மலையைக் கைப்பற்ற முடியவில்லை[82] மேலும், பாரியின் உற்ற நண்பராகிய

கபிலர் அம்மலை நாட்டுக் கிளிகளைப் பழக்கிவிட, அவை சேணெடும் தூரம் சென்று, ஆங்கு விளைந்து முற்றியிருக்கும் நெற்கதிர்களைக் கொய்து கொண்டு வந்து தந்த வண்ணம் இருந்தன[83]

ஆண்டு பல ஆயினும், பாரி, பறம்பு மலையைக் கைவிடான். அதைக் கைப்பற்றல் மூவேந்தர்களால் இயலாது; ஆகவே முற்றுகையைக் கைவிடுங்கள் என்ற அறிவுரையை வேந்தர்களுக்கு வழங்க விரும்பினார் கபிலர். விரும்பியவர்: ஒரு நாள், கோட்டையின் தலையகத்தே நின்று வேந்தர்களை விளித்து, "பறம்பரணைப் படையால் கைக்கோடல் இயலாது; ஆடல் மகளிர் போல் வந்து இரந்து நிற்பீராயின், பறம்பை மட்டுமன்று தன்னையும் கொடுத்துவிடுவன் பாரி" எனக் கூறி விட்டார்.[84] முற்றுகை ஒழிய வேண்டும் என்ற நல்லுணர்வில் கபிலர், அது கூற, மூவேந்தர், அவர் கூறியவாறே வந்து பாரியைப் பரிசிலாகப் பெற்றுக் கொன்றுவிட்டு பறம்பரணைத் தமதாக்கிக் கொண்டனர்[85]

பாரி இல்லாமல் போகவே, அவன் மகளிர் இருவரையும் அழைத்துக் கொண்டு, பறம்பு நாடுவிட்டுப் புறப் பட்டு, அவ்விருவர்க்கும் மணமுடிக்க வேண்டியது பாரியின் உற்ற நண்பராகிய தம் கடமை என்பதால் முதற்கண் விச்சிக்கோவிடம் சென்று வேண்ட[86] அவன் மறுக்க;இருங்கோவேள்பால் சென்று வேண்ட[87] அவனும் மறுக்கவே, தமக்கு வேண்டிய பார்ப்பார் சிலர்பால் அம்மகளிரை ஒப்படைத்துவிட்டு வடக் கிருந்து உயிர் துறந்தார் கபிலர். பாரியின் வரலாறாக அறியத்தக்கன இவ்வளவே.

ஆனால் திருக்கோவிலூர் கல்வெட்டு ஒன்று, கபிலர் வடக்கிருந்து உயிர்விடுவதற்கு முன்னர்ப் பாரி மகளிரை, மலையமான் மக்கள் இருவர்க்கு மணம் முடித்து வைத்தார் என்கிறது[88]

தனிப்பாடல் திரட்டு, பார்ப்பார் பால் ஒப்படைக்கப் பட்ட பாரி மகளிரை ஔவையார் மூவேந்தர் ஒப்புதல் பெற்று அவர் முன்னிலையில், தெய்வீவகனுக்கு மணம் செய்து வைத்தார் எனக் கூறுகிறது.

பாரி மகளிர் திருமணம் குறித்த இச்செய்திகளில், உண்மை இருக்கிறதோ இல்லையோ, பாரி மகளிரை மணம் செய்து கொடுப்பதில் ஆர்வம் காட்டியிருந்தது தமிழ் நெஞ்சங்கள் என்பதை அவை உறுதி செய் துள்ளன.

## 7. பேகன்

இவனைப் பாடிய புலவர்கள், அரிசில்கிழார்[89] இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார்[90] கபிர்,[91] பரணர்[92], பெருங்குன்றூர் கிழார்,[93] மாமூலனார்[94] பெருஞ்சித்திரனார், [95] ஆக எழுவர்.

இப்பாக்கள் மூலம் இவன் வரலாறாக அறியத் தக்கன இவை : மதுரை மாவட்டத்தில் பொதினி என்ற பெயருடைய மலையிடை ஊர் இருந்தது. அது ஆவிநன்குடி என்ற பெயரால் வழங்கி வந்தது.[96] இப்போதைய பழனிதான் அந்த ஊர். அந்த ஊரைத் தலைநகராகக் கொண்டு ஆவியர் என்ற குறுநில மன்னர் ஆண்டு வந்தனர். இவ்வாவியர் சேரகுல அரசர்களுக்கு மகள் கொடுக்கும் உறவுடையவர்.[97]

ஆவியர் குடியில் வந்தாருள் பேகனும் ஒருவன். வையாவிக் கோப்பெரும் பேகன் என்றும் அழைக்கப் படுவன். அவன் பெரிய கொடையாளி, ஒருநாள் சோலை யில் உலாவச் சென்றபோது, ஆங்கு ஒரு மயில் தோகை விரித்து ஆடிக் கொண்டிருக்கக் கண்டு, அதுவும் தன்னே போல் வாடைக்குளிரால் வருந்துகிறதோ என எண்ணிக் குளிருக்காகத் தான் போர்த்திச் சென்றிருந்த போர்வையை அதற்குப் போர்த்திவிட்டு குளிரால் நடுங்கியவாறே அரண்மனை வந்து சேர்ந்தான்[98]. பேகன்கொடை உள்ளம் அத்துணை மென்மையானது.

இவ்வளவு பெரிய கொடையாளியாகிய பேகன் பால் ஒரு பெருங்குறையுமு குடி கொண்டுவிட்டது; கண்ணகி எனும் நல்லாள் ஒருத்தி, அவனுக்கு மனைவியாக வாய்த்திருந்தும்; அவன் பரத்தையர் ஒழுக்கத்தில் நாட்டமுடையவனாகி, நல்லூர் என்ற ஊரில் உள்ள பரத்தை ஒருத்திபால் உறவு கொண்டு அங்கேயே வாழத் தொடங்கினான்.

அவன்பால் பரிசில் பெறுவான் வேண்டி வையாவிக்கோ நகர் சென்ற புலவர் கபிலர், பரணர், அரிசில்கிழார், பெருங்குன்றூர்கிழார் ஆகிய புலவர் நால்வரும். அவன் ஆங்கு இல்லாதிருப்பதையும், அவன் மனைவி அழுது புலம்பிக் கொண்டிருப்பதையும் கண்டு, "பேகன் யாண்டுச் சென்றுள்ளான்? உன் துயர்க்குக் காரணம் யாது?" எனக் கலங்கிக் கேட்க, அவள் அவன் ஒழுக்க நிலையை உணர்த்தவே புலவர் நால்வரும், பேகன் பால் கொடையாகப் பொன்னையும், பொருளையும், பெறுவதைக் காட்டிலும், அவனை வேண்டி, இவள்பால்கொண்டு சேர்ப்பதையே கொடைப் பொருளாக அவன்பால் கேட்டல் வேண்டும் என முடிவு

செய்தனர். விரைந்தனர், நல்லூர்க்கு. புலவர்களைக் கண்ணுற்ற பேகன் மகிழ்ந்து, அவர்கள் தன் புகழ்பாடா முன்பே "புலவர் பெருந்தகையீர்! என்பால் வேண்டும் பரிசில் யாது யாதாயினும் தருகின்றேன்; கேண்மின்" எனக் கேட்க, புலவர்கள் "பேக! நீ, இந்நல்லூர் விடுத்து வையாவிக்கோ நகர் சென்று, நின் மனைவியோடு வாழ்தல் ஒன்றே யாம் விரும்பும்பரிசில்" எனக் கூறப், பேகன் தன் மனைவியை அடைந்தான்[99].

## 8. ஓய்மான் நல்லியக்கோடன்

இவனைப் பாடிய புலவர்கள், இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார்[100] புறத்திணை நன்னாகனார்[101] ஆகிய இரு புலவர்களாவர்.

தென்னார்க்காடு மாவட்டம் திண்டிவனம் வட்டத்தையும், செங்கற்பட்டு மாவட்டம் மதுராந்தகம் வட்டத் தென்பகுதியையும தன் கண் கொண்ட நாடு, சங்க காலத்தில் ஓய்மானோடு எனப் பெயர் பெற்றிருந்தது. கடற்கரை நகராம் எயிற்பட்டினம்[102], கிடங்கில்[103], ஆரூர்[104], உப்புவேலூர்[105], களைக் கொண்ட அந்நாட்டின் தலைநகர் மாவிலங்கை[106] அந்நாட்டை ஆண்ட ஓவியர் குடியில் சிறந்தவன் நல்லியக்கோடன்[107]. புறம் : 376ன் கொளு அவனை வில்லியாதன் என்றும் அழைக்கிறது.

நல்லியக்கோடன் நல்ல கொடையாளி, அஞ்சி முதல் பேகன் வரையான ஏழு வள்ளல்கள் காலத்துக்குப் பிற் பட்டவன்; அவ்வெழுவர் செய்த கொடைவளம் அவ்வளவையும் தான் ஒருவனாகவே இருந்து ஏற்றுக்

கொண்டவன்[108] நல்ல பல பண்புகளின் உறைவிட மாகத் திகழ்ந்த உயர்வோன்[109] இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் இயற்றிய சிறுபாணாற்றுப்படை பாடலின் பாட்டுடைத்தலைவன்.

## 9. குமணன்

இவனைப் பாடிய புலவர்கள், பெருஞ்சித்திரனார்[110] பெருந்தலைச் சாத்தனார்[111] ஆகிய இருவர்.

கோவை மாவட்டம், உடுமலைப்பேட்டையைத் தன்னகத்தே கொண்டு, பழநி வட்டத்துத் தென் மேலைப்பகுதியையும், உடுமலை வட்டத்துத் தென் கீழ்ப் பகுதியையும் கொண்ட நாடே குமணன்ஆண்ட நாடு; முதிரம் என்ற மலையகத்து ஊர் அவன் தலைநகர்.[112] அவன் புகழ் பாடவந்த புலவர் பெருஞ் சித்திரனார், அவன் அஞ்சி முதல் பேகன் வரையான வள்ளல் பெருமக்கள் எழுவர் மறைவுக்குப் பின்னர், அவர்கள் எழுவர்க்கும் ஈடாக வள்ளல் பெருந்தகை யாய் வாழ்ந்தவன் என்ற பாராட்டோடு, தம் பாராட்டைத் தொடங்கி உள்ளார்.[113]

அவன் நாடு வளம் மிக்கது; புலவர் போற்றும் வள்ளலாய் வாழ்ந்திருந்தான்.[114] பெருஞ்சித்திரனார், ஒருநாள், அக்காலத்தே வாழ்ந்திருந்த வெளிமான் என், பவனும் ஒரு வள்ளல் என அறிந்து, அவன்பால் சென்று, பொருள் வேண்டி நின்றார். ஆனால் அந்தோ! அவன் இறக்கும் நிலையில் இருந்தான். ஆயினும், அந்நிலை யிலும், தன் கொடைக் குணத்தை மறவாமல், தன் தம்பி இளவெளிமானை அழைத்துப் புலவர் வேண்டுவன அளித்து அனுப்புமாறு பணித்தான்; ஆனால்,

இளவெளிமான் தன் அண்ணன் போல, அள்ளி வழங்கும் குணமோ, புலவர்தம் தகுதி அறியும் அறிவோ உடையான் அல்லன்; அதனால் புலவர்க்குச் சிறிதே பொருள் கொடுத்தான்; தம் தகுதிக்குக் குறைவானது அது என உணர்ந்த புலவர் அதை வாங்க மறுத்துவிட்டு, நேரே குமணன் பால் சென்று அவன் புகழ் பாடினார். அது கேட்டு மகிழ்ந்த குமணன், "வேண்டும் பரிசில் யாது. யாதாயினும் தருகின்றேன்" என்றான். புலவர், "அரசர்களும் மதிக்கும் வண்ணம், நான் பெரிய யானை மீது அமர்ந்து செம்மாந்து செல்ல விரும்புகின்றேன்,"[115] என்றார்; அது கிடைத்து விட்டது; அதன்மீது அமர்ந்து விடைபெற்றுக் கொண்டு நேரே இளவெளிமான் ஊருக்குச் சென்று, அவன் காவல் மரத்தில், யானையைப் பிணித்துவிட்டு வாயிற்காவலன் மூலம், இளவெளிமானை அழைத்து "இளவெளிமான்! உன் காவல் மரத்தில் பிணித்திருக்கும் களிறு, குமணன் கொடுத்த கொடைநலம்! "எனக் கூறிவிட்டு வெளியேறி விட்டார்.[116]

இவ்வொரு நிகழ்ச்சியே போதும், குமணனின் கொடை வளத்தை அறிய : மற்றுமொரு நிகழ்ச்சி, அவனைக் கொடை வள்ளல்களுக்கெல்லாம் தலைமை வகிக்கவல்ல தகைமைசால் கொடைவள்ளல் என்பதைக் காட்டுவதாய் அமைந்துவிட்டது.

குமணனுக்கு ஒரு தம்பி; இளங்குமணன் என்பது அவன் பெயர், கொடியவன்; அண்ணனைக் கொன்று அரசாளத் துணிந்துவிட்டான். அஃது அறிந்த குமணன் தலைமறைவாகி—விட்டான். ஆயினும், இளங்குமணன் முயற்சியைக் கைவிட்டான் அல்லன். "குமணன் தலையைக் கொணர்வோர்க்குக் கோடிப்பொன் பரிசு," எனப் பறை அறைந்து விட்டான்.

இந்நிலையில், நாட்டு நிகழ்ச்சி அறியாத புலவர் பெருந்தலைச் சாத்தனார், குமணன்பால் பரிசில் பெற விரும்பினார். குமணன், தம்பிக்குத் தலைமறைவாகி விட்டானே அல்லது, அவன் மறைந்து வாழுமிடம் புலவர்கள் அறிந்த இடம்; அதனால் குமணன் பால் சென்று, கொடை வேண்டிப் பாடினார்.117 ஆனால், குமணன் பால் கொடுப்பதற்கு ஏதும் இல்லை. ஆயினும் கொடுப்பதைக் கைவிட்டான் அல்லன். தம்பி, தன் தலைக்கு விலைவைத்துப் பறை அறைந்திருப்பதை அவன் அறிவான். அதனால், தன் போர்வாளைப் புலவர் கைக் கொடுத்துப் "புலவீர்! இவ்வாள் கொண்டு என் தலையைக் கொய்து சென்று, என் தம்பி கைக்கொடும்; அவன் கோடிப் பொன் தருவன்" என வேண்டி வாளைத் தந்தான்.

வாள் பெற்ற புலவர், தன் வறுமை வாட வேண்டும் என்று எண்ணும் வன்கணாளர் அல்லர்; வள்ளல்கள் வாழ வேண்டும் என்ற வளமார் உள்ளம் படைத்தவர்; அதனால், வாள் கைக் கொண்ட புலவர் விரைந்தார் இளங்குமணன் பால், காட்டில் நடந்ததைக் கூறினார்118. முடிவு தெரிந்திலது எனினும், புலவர் செயல் அறிந்து தன் அண்ணன் பெருமை உணர்ந்து, அண்ணனைக் கொன்று அரசாள விரும்பிய தன் கொடுஞ்செயலை அறவே கைவிட்டிருப்பன் என்றே கொள்ளுதல் வேண்டும்.

இவ்வொரு செயல், தலை கொடுத்தாயினும், புலவர்களை வறுமையில் நீக்கி வாழ வைக்க விரும்பும் வள்ளல்கள் பெருமையும்; தமக்குப் பரிசிற் பொருள்கள் தான் குறிக்கோள் என் எண்ணாது, பரிசில் இல்லையாயினும், வள்ளல்களை வாழ வைப்பதுதான் என உலகிற்குக் காட்டும் புலவர்கள் பெருமையும், காட்டி விட்டது.

## சான்றெண் விளக்கம்

1. ''வானம் வாய்த்த வளமலைக் கவாஅன்
கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய
அருந்திறல் அணங்கின் ஆவியர் பெருமகன்
பெருங்கல் நாடன் பேகனும், சுரும்புண
நறுவீ உறைக்கும் நாக நெடுவழிச்
சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய
பிறங்கு வெள்ளருவி வீழும் சாரல்
பறம்பிற் கோமான் பாரியும், கறங்கு மணி
வாலுளைப் புரவியொடு வையகம் மருள
ஈரநன்மொழி இரவலர்க் கீந்த
அழல்திகழ்ந் திமைக்கும் அஞ்சுவரு நெடுவேல்
கழல் தொடித் தடக்கைக் காரியும், நிழல்திகழ்
நீல நாகம் நல்கிய கலிங்கம்
ஆலமர் செல்வற்கு அமர்ந்தனன் கொடுத்த
சாவந் தாங்கிய சாந்துபுலர் திணிதோள்
ஆர்வ நன்மொழி ஆயும், மால்வரைக்
கமழ் பூஞ்சாரல் கவினிய நெல்லி
அமிழ்து விளை தீங்கனி ஔவைக்கு ஈந்த
உரவுச் சினம் கனலும் ஒளிதிகழ் நெடுவேல்
அரவக் கடல்தானை அதிகனும், கரவாது
நட்டோர் உவப்ப நடைப்பரி காரம்
முட்டாது கொடுத்த முனைவிளங்கு தடக்கைத்
துளிமழை பொழியும் வளிதுஞ்சு நெடுங்கோட்டு
நளிமலை நாடன் நள்ளியும், நளிசினை
நறும்போது கஞலிய நாகுமுதிர் நாகத்துக்
குறும் பொறை நன்னாடு கோடியர்க் கீந்த
காரிக் குதிரை காரியொடு மலைந்த
ஓரிக் குதிரை ஓரியும் எனவாங்கு,

எழுசமம் கடந்த எழுவுறழ் திணிதோள்
எழுவர் பூண்ட ஈகைச் செந்நுகம்
விரிகடல் வேலி வியலகம் விளங்க''

—சிறுபாண் 85-114

''முரசு கடிப்பு இருப்பவும், வால்வளை துவைப்பவும்
அரசுடன் பொருத அண்ணல் நெடுவரைக்
கறங்கு வெள்ளருவி கல்லலைத்து ஒழுகும
பறம்பிற் கோமான் பாரியும், பிறங்கு மிசைக்
கொல்லியகண்ட வல்வில் ஓரியும்,
காரியூர்ந்து பேரமர்க் கடந்த
மாரியீகை மறப்போர் மலையனும்,
ஊராது ஏந்திய குதிரைக் கூர்வேல்
கூவிளங் கண்ணிக் கொடும்பூண் எழினியும்
ஈர்ந்தண் சிலம்பின் இருள்தூங்கு நளிமுழை
அருந்திறல் கடவுள் காக்கும், உயர்சிமைப்
பெருங்கல் நாடன் பேகனும், திருந்துமொழி
மோசிபாடிய ஆயும், ஆர்வமுற்று
உள்ளி வருநர் உலைவு நனிதீரத்
தள்ளாது ஈயும் தகைசால் வண்மைக்
கொள்ளார் ஓட்டிய நள்ளியும், எனவாங்கு எழுவர்''

—புறம். 158

2. சிறுபாண். 84-114
3. புறம். 158
4. பதிற்று. 73, புறம். 230
5. நற்.381, குறுந். 80;91
புறம். 87,88,90-95,97-101,103,104,206,315,390
6. அகம். 105
7. அகம். 372
8. புறம். 158,208
9. புறம். 99
10. பதிற்று. 98

11. அகம். 105,372,குறுந்,80
12. புறம். 99
13. புறம். 101,206
14. ''போரடு திருவின்பொலந்தார் அஞ்சி

........................

பெருமலை விடரகத்து அருமிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது
ஆதல் நின்னகத்து அடக்கிச்
சாதல் நீங்க எமக்கு ஈத்தனையே''

—புறம். 91

சிறுபாண். 99-102

15. ''நெடுநெறிக் குதிரைக் கூர்வேல் அஞ்சி''புறம். 372

''ஊராது ஏந்திய குதிரைக் கூர்வேல்
கூவிளங் கண்ணிக் கொடும்பூண் எழினி,' புறம். 158

16. சிறுபாண் : 96-99
17. அகம் : 69
18. புறம் : 127-135;241;374
19. நற் : 237
20. புறம்-240
21. புறம்-136
22. அகம்-152 ; 198
23. புறம்-158
24. புறம்-132
25. அகம்-198
26. புறம்-128
27. சிறுபாண் : 96 - 99
28. புறம்-158
29. புறம்-241; 374
30. புறம்-240
31. சிறுபாண் - 111

32. நற் 320; குறுந்-100
33. அகம் - 209
34. புறம் - 204
35. நற் - 201; குறுந்-80, அகம்-62
36. நற்-52
37. புறம்-152, 153
38. "வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி
பேழ்வாய் உழுவையைப் பெரும் பிறிது உறீஇப்
புழற்றலைப் புகர்க்கலை உருட்டி, உரற்றலைக்
கேழல் பன்றி வீழ, அயலது
ஆழற் புற்றத்து உடும் பிற் செற்றும்
வல்வில் வேட்டம் வலம்படுத்து இருந்தோன்"
—புறம்-152
39. "வல்வில் ஓரி கொல்லிக் குடவரை" —குறுந்-100
40. "மழவர் பெருமகன் மாவன் ஓரி" —நற்-52
41. குறுந்-100
42. முள்ளூர் மன்னன் கழல்தொடிக் காரி
செல்லா நல்லிசை நிறுத்த வல்வில்
ஓரிக் கொன்று சேரலர்க் கீந்த
செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி" -அகம்-209
"காரிக் குதிரைக் காரியொடு மலைந்த
ஓரிக் குதிரை ஓரி" சிறுபாண் -110-111
"பழவிறல்
ஓரிக் கொன்ற ஒரு பெருந் தெருவில்
காரி புக்க நேரார் புலம்" —நற்-320
43. நற்-185; புறம்-152; 153 204; குறுந், 100
44. அகம்-35
45. சிறுபாண்-110
46. புறம்-99
47. நற்-291; 220; குறுந்-198; 312 புறம்-121,124

48. அகம்-209
49. புறம்-46
50. நற்-100
51. புறம்-158
52. புறம்-126
53. புறம்-125
54. அகம்-35; புறம்-126
55. புறம்-122; குறுந்-312
56. புறம்-125
57. ''காரி ஊர்ந்து பேரமர்க் கடந்த
மாரி ஈகை மறப்போர் மலையன்'' —புறம்-158

''முனையூர்ப்
பல்லா நெடு நிரை வில்லின் ஒய்யும்
தேர்வண் மலையன்'' —நற்-100

''மாயிரு முள்ளூர் மன்னன் மாவூர்ந்து
எல்லித் தரீஇய இனநிரைப்
பல்லான் கிழவரின் அழிந்த'' -நற்-291

''ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்ப்
பலருடன் கழித்த ஒள்வாள் மலையனது
ஒருவேற்கு ஓடியாங்கு'' —நற், 170

58. 'பரணன் பாடினன் மற்கொல் மற்றுநீ
முரண்மிகு கோவலூர் நூறி நின்
அரண் அடு திகிரி ஏந்திய தோளே'' —புறம்-99

59. ''முள்ளூர் மன்னன் கழல் தொடிக் காரி
செல்லா நல்லிசை நிறுத்த வல்வில்
ஓரிக் கொன்று சேரலர்க்கு ஈத்த
செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி'' -அகம்-209

''ஓரிக் கொன்ற ஒருபெருந் தெருவில்
காரி புக்க நேரார் புலம் போல்
கல் லென்றன்றால் ஊரே'' —நற்-320

60. புறம்-49
61. தெ.இ.க.மடலம் 7, எண் 863
62. சிறுபாண்-104-107
63. குறுந்-210
64. அகம்-152
65. புறம்-151
66. புறம்-158
67. புறம்-148; 149; 150
68. ''தோட்டி... நளிமலை நாடன் நள்ளி''-புறம்-150
69 புறம்-151
70. புறம்-151
71. குறுந்-210
72. சிறுபாண்-86-91
73. அகம்-203
74. புறம்-105-120; 200-202; 236, 337
75. அகம்-78
76. புறம்-112
77. புறம்-176
78. புறம்-158

79. ''முந்நூறு ஊர்த்தே தண்பறம்பு நன்னாடு'' புறம்-110
புறம் 201
சிறுபாண்-89-91

80. ''பூத்தலை அறா அப்புனை கொடி முல்லை
நாத்தழும் பிருப்பப் பாடாதாயினும்
கறங்கு மணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த
பரந்தோங்கு சிறப்பின் பாரி'' புறம்-200

''சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய
........... ..................... ...................
பறம்பிற் கோமான் பாரி'' சிறுபாண்-89-91

''ஊருடன் இரவலர்க்கு அருளித் தேருடன்
முல்லைக்கு ஈத்த ..................
.............. பறம்பிற் கோமான்
நெடுமாப் பாரி'' —புறம்-201

81. ''முந்நூறு ஊரும் பரிசிலர் பெற்றனர்'' —புறம்-110

82. புறம்—109.

83. அகம்—78; 303.

84. ''அளிதோ தானே பாரியது பறம்பே
நளிகொள் முரசின் மூவிரும் முற்றினும்
..............................
மரந் தொறும் பிணித்த களிற்றினி ராயினும்
புலந் தொறும் பரப்பிய தேரினி ராயினும்
தாளில் கொள்ளலிர்; வாளில் தாரலன்''
—புறம்-109

''பறம்பு பாடினரதுவே; அறம் பூண்டு
பாயும் பரிசிலர் இரப்பின்
வாரேன் என்னான் அவர் வரையன்னே''
—புறம்-108

புறம்—111; 110.

85. புறம்—112.

86. ''விளங்கு மணிக் கொடும்பூண் விச்சிக் கோவே
இவரே ..................
பாரிமகளிர்
யானே, பரிசிலன்; மன்னும் அந்தணன்......
..................
நினக்கு யான் கொடுப்பக் கொண்மதி''
புறம்-200

87. இவர் யார் என்குவை யாயின், இவரே
..................
நெடுமாப் பாரி மகளிர்; யானே
தந்தை தோழன்; இவர் என் மகளிர்
................
யான்தர இவரைக் கொண்மதி'' —புறம்-201

88. தெ.இ.க. மடலம். 7, எண். 863
89. புறம் — 146
90. சிறுபாண். 5-7.
91. புறம்—143
92. புறம்—141; 144; 145
93. புறம்—147
94. அகம்—61
95. புறம்—158
96. அகம்—61.
97. சிலம்பு : நடுகல் : 196-98

98. ''உடாஅ; போரா ஆகுதல் அறிந்தும்
படாஅம் மஞ்ஞைக்கு ஈத்த எங்கோ
கடாஅ யானைக் கலிமான் பேகன்'' —புறம்-141

''மடத்தகை மாமயில் பனிக்கும் என்றருளிப்
படாஇம் ஈத்த கொடாஅ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான் பேக'' —புறம் - 145

''கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய
................ ஆவியர் பெருமகன்
பெருங்கல் நாடன் பேகன்'' —சிறுபாண். 5-7.

99. புறம் : 143; 144; 145; 147.
100. சிறுபாண்.
101. புறம் 175; 376; 379
102. ''மணி நீர் வைப்பு மதிலொடு பெயரிய
பனி நீர்ப் படுவின் பட்டினம்'' —சிறுபாண். 52-53

103. ''கிளை மலர்ப் படப்பைக் கிடங்கில்''
—சிறுபாண்-160

104. சிறுபாண்—188

105. சிறுபாண்—173

107. சிறுபாண்—116- 120; புறம் 176; 379.

106. ''நன்மா விலங்கை மன்ன ருள்ளும்
மறுவின்றி விளங்கிய வடுவில் வாய்வாள்
உறுபுலித் துப்பின் ஓவியர் பெருமகன்
..............................
நல்லியக் கோடன்'' —சிறுபாண் : 120-26.

108. ''எழுவர் பூண்ட ஈகைச் செந்நுகம்
..............................
ஒருதான் தாங்கிய உரனுடை நோன்தாள்
..............................
நல்லியக் கோடன்'' சிறுபாண்—113-115

109. சிறுபாண். 207-20; 231-4

110. புறம்—158-164

111. புறம்—165

112. ''அதிரா யாணர் முதிரம்''—புறம் 158
''மட்டார் மறுகின் முதிரம்''—புறம்-160
''பழந் தூங்கு முதிரம்',—புறம்-162

113. ''எழுவர் மாய்ந்த பின்றை, அழிவரப்
பாடி வரு நரும், பிறரும் கூடி
இரந்தோர் அற்றம் தீர்க்குவென, விரைந்திவண்
உள்ளி வந்தனென் யானே'' புறம்-158

114. புறம்—161.

115. புறம்—161, 163

116. புறம்—162

117. புறம்—164

118. ''தாடாழ் படுமணி இரட்டும் பூநுதல்
ஆடியல் யானை பாடுநர்க்கு அருகாக்

கேட்டில் நல்லிசை வயமான் தோன்றலைப்
பாடி நின்றனெனாகக்; கொன்னே
பாடு பெறு பரிசிலன், வாடினன் பெயர்தல்; என்
நாடிழந்த தனினும் நனி இன்னாது' என
வாள்தந்தனனே, தலை யெனக்கு ஈயத்,
தன்னிற் சிறந்தது பிறிதொன்று இன்மையின்,
ஆடுமலி உவகை யொடு வருவல்
ஓடாப் பூட்கைநின் கிழமை யோற் கண்டே''

—புறம் - 165.

# 9. குறுநில மன்னர்களும் தலைவர்களும்

பண்டைத் தமிழகத்தில், முடியுடை மூவேந்தரான சேர, சோழ, பாண்டிய அரசர்களே மட்டுமல்லாமல், அதியமான் நெடுமான் அஞ்சி போலும் வள்ளல்களே அல்லாமல்; அம் மூவேந்தர்களுக்கு அடங்கியும் அடங்காமலும் வாழ்ந்த குறுநில மன்னர்களும்; குறுநிலத் தலைவர்களும் இருந்துள்ளனர். இவர்கள் ஓரினத்தைச் சார்ந்தவர் அல்லர். இவருள்; பிற நாட்டிற் பிறந்து, தமிழ்நாடு போந்து வாழ்ந்தாரும் உள்ளனர். ஆனால் அவர்கள் அனைவருமே; தமிழ் மொழியைத் தம் தாய் மொழியாகக் கொண்டவர், தமிழ் மண்ணின் வளர்ச்சியில் கருத்துடையவர் என்பதில் சிறிதும் ஐயம் இல்லை. அவர்கள் வரலாற்றை, அவர்களின் பெயர் கூறும் அகர வரிசையில் காணலாம்.

## 1. அகுதை

இவனைப் பாடிய புலவர்கள், கபிலர்; கல்லாடனார்2, பரணர்3, வெள்ளெருக்கிலையார்4 ஆகிய நால்வராவர்.

இந் நால்வர் பாடிய ஐந்து பாக்கள் மூலம் இவன் வரலாறாக அறியத் தக்கன இவை: கூடல் நகரில் வாழ்ந்தவன்,[5] போர் ஒன்றில், பகைவர் ஏவிய திகிரிப்

படையொன்று இவன் மார்பில் தைக்கப் பெரும் புண் உண்டாக்கிவிட்டது என்ற ஒரு செய்தி பரவிவிட்டது. ஆனால் அது உண்மை இல்லை என்பது பின்னர் தெரிய வந்தது.[6] பாழி நகர்க்கு உரிய நன்னன் மேற்கொண்ட போரில், அந்நன்னன் நண்பனான, வேளிர் குலத்து வந்த ஆய் எயினன், நன்னன் பொருட்டுப் போரிட்டு உயிர் இழந்தான்; அதனால், அவன் உரிமை மகளிர் துயர் உற்றனர். தன் பொருட்டு உயிர் துறந்த ஆய் எயினன் உரிமை மகளிர்க்கு உண்டான துயரைத் துடைக்க வேண்டியது தன் கடனாகவும், நன்னன் அது செய்திலன்.

அது அறிந்த அகுதை, அவ்வேள் மகளிர் துயரைப் போக்கினான்.[7] அதனால், நன்னன் அகுதை மீது சினங் கொண்டான். நன்னன் நல்லவன் அல்லன் என்பதை அறிந்திருந்த கோசர், அந் நன்னனால், அகுதைக்குக் கேடு வரும் என அஞ்சி, நன்னன் அணுக மாட்டார் இடத்தே வைத்துக் காத்தனர்[8].

தன்னைப் பாடி வரும் பொருநர், கூத்தர் முதலாம் பரிசிலர்க்கு போரில் தான் பற்றும் பிடியும், களிறும், பெரும் பொருளும், வழங்கிய வள்ளல் பெருந்தகை அகுதை?[9]

## 2. அக்குரன்

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் கொடைவளப் பெருமையைப் பாராட்டும் புலவர் அரிசில் கிழார், சேரலாதன், அக்குரன் போலும் அள்ளி அள்ளி வழங்கும் வள்ளல், எனப் புகழப படுமளவு வாழ்ந்த கொடையாளி அக்குரன்[10]

## 3. அத்தி

சேரன் படைத்தலைவரோடு கழுமலம் எனும் இடத்தே, சோழர் படைத் தலைவன் பழையனுக்குத் துணையாகப் போரிட்டவன் வீர மரணம் எய்தியவன்''

## 4. அதியன்

இவனைப் பாடிய புலவர்கள் பரணரும்,[12] மாமூலனாரும்,[13] ஆவர் பசும் பூண் பாண்டியன் படைத் தலைவன்,[14] பாண்டியனின் பகைவனான அன்னன் என்பானை வெற்றி கொண்டவன்,[15] வாகை எனும் ஊரிடத்தே நடந்த போரில், ஊர்ந்து சென்ற தன் களிறோடு இறந்தவன். அதியன் இறப்பு கேட்டு, அவன் பகைவரான கொங்கர் ஆரவாரித்தனர்,[16] ஆனால் பெருங் கொடை வள்ளலான அதியன் இறந்தான் எனக் கேட்ட புலவர்கள், தம் இசைக் கருவிகளை இயக்கவும் விரும்பாது வருந்தினர்.[17]

## 5. அந்துவன் கீரன்

படையானும், பொருளானும் பேரரசரை யொப்பச் சிறந்து விளங்கிய வீரன். வள்ளல் பெருந்தகை: காவட்டனார் என்ற புலவரின் அறவுரைகளைக் கேட்டு அஃகி யகன்ற அறிவுடையவனாய் விளங்கியவன்[18]

## 6. அந்துவஞ் சாத்தன்

ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியனின் துணைவன். "உரைசால் அந்துவஞ் சாத்தன்'' என்ற சிறப்புப் பெற்றவன்[19]

## 7. அம்பர் கிழான் அருவந்தை

சோணாட்டில், காவிரியின் கிளை ஆறுகளுள் ஒன்றாகிய அரிசிலாற்றின் கரைக் கண் அமைந்த அம்பர் என்ற ஊரில் வாழ்ந்தவன். அருட்கொடையாளன். புலவர் கல்லாடனாரால் பாடப்பெற்றவன்[20]

## 8. அருமன்

சிறுகுடி என்ற ஊரில் வாழ்ந்தவன். இரவலர்க்கு இடையறாது உணவு படைத்து புகழ் பெற்ற வள்ளல்: கள்ளில் ஆத்திரையனார்,[21] நக்கீரர்,[22] ஆகிய புலவர்களால் பாராட்டப் பெற்றவன்.

## 9. அவியன்

அவியலூர் என்ற ஊரில் வாழ்ந்தவன்: நல்ல மனை வாழ்க்கை வாய்க்கப் பெற்றவன். சிறந்த வள்ளல். இவன் புகழ்பாடிய புலவர்கள், காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனாரும்,[23] மாறோக்கத்து நப்பசலையாரும்[24] ஆவர்.

## 10. அழிசி

அழிசி. காவிரிக் கரையில் இருந்த ஆர்க்காட்டில் வாழ்ந்தவன்[25] சோழர் பெயரோடு இணைத்து வழங்கப் பெற்றவன்[29] வாள் வீரர் நிறைந்த பெரும் படை உடையவன். பகைப் படை வென்று கைப்பற்றும், யானைகளைக்கொண்டு வந்து தன் ஊர் மருத மரங்களில் பிணிக்கும் பேராற்றல் வாய்ந்த சேந்தன் என்ற மகனைப் பெற்றவன்[27] பரணர்[28], நக்கண்ணையார்[29] ஆகிய புலவர்களோடு, பாடியவர் இன்னார் என்று அறியமாட்டாப் புலவர்[30] ஒருவராலும்; பாராட்டப் பெற்றவன்.

## 11. அறுகை

அறுகை; சேரன் செங்குட்டுவனின் துணைவன் மோகூர் பழையனோடு போரிட்டுத் தோற்றவன். தோல்விக்கு நாணி நாடு விட்டுச் சென்றவன். நண்பனுக்கு உண்டான இழிவு போக்கச் செங்குட்டுவன் மோகூர்மீது படையெடுத்துச் சென்றான். பழையனை வென்றான். அவன் காவல்மரமாம் வேம்பையும் வெட்டி வீழ்த்தி, முரசு செய்வதற்கென தன் ஊர் கொண்டு சென்றான். பாடிய புலவர் பரணர்[31]

## 12. அன்னி

அன்னி; நீடூர் தலைவனான எவ்வி என்பானுடைய நண்பன். அன்னியின் பகைவன் திதியன். திதியனுடைய காவல் மரமான புன்னையை அழிக்க அன்னி எண்ணினான். நண்பனான எவ்வி நன்மொழி கூறித் தடுத்தும் கேளாத அன்னி படை கொண்டு சென்றான். குறுக்கை எனும் இடத்தே நடந்த போரில் திதியனால் கொல்லப்பட்டான். எவ்வி கூறிய அறிவுரை கேளாது அழிந்த அன்னியின் செயலைப் புலவர் பழித்தனர்[32]

## 13. அன்னிமிஞிலி

கோசர் என்ற இனத்தவரின் வயலில் புகுந்து பயற்றுப் பயிரை அன்னிமிஞிலி என்ற இம் மங்கையின் தந்தையின், பசுக்கள் மேய்ந்து விட்டது. அச் சிறு தவறுக்கு, கோசர் அன்னி மிஞிலியின் தந்தை கண்களையே போக்கி விட்டனர். கோசர் கொடுஞ்

செயலால் சினம் மிகக் கொண்ட அன்னமிஞிலி "அக்கோசரை அழிக்கா முன், கலத்தும் உண்ணேன், தூய ஆடையும் உடுத்தேன்" என வஞ்சினம் உரைத்தாள்,

அக் கோசரை அழிக்க வல்லவன். அழுந்தூர்த் தலைவனான திதியன் தான். என்பதை உணர்ந்தாள். அவன் பால் சென்று முறையிட்டாள் திதியனும் அவ் வீர நல்லாளின் வேண்டுகோள் ஏற்று அக்கோசரை அழித்தான். கோசர் அழிவு கண்டு அன்னிமிஞிலி சினம் தணிந்தாள். பாடிய புலவர் பரணர்[33]

## 14. ஆட்டனத்தி

ஆட்டனத்தி; சேர நாட்டு இளவரசன். சோழ மன்னன் கரிகாலன் மகள் ஆதி மந்தியை மணந்து கொண்டவன். காவிரியில் புது வெள்ளம் வரும் போது நிகழும் புனல் விளையாட்டில் பங்கு கொண்டு ஆடும் பொழுது வெள்ளத்தால் அடித்துச் செல்லப் பட்டான். மருதி என்பவளால் காப்பாற்றப்பட்டான். கணவனைத் தேடிச் சென்ற ஆதி மந்தியார், கணவன் மருதியால் காக்கப்பட்டது கண்டு மகிழ்ச்சி உற்றாள். ஆட்டனத்தியின் இவ்வரலாற்று நிகழ்ச்சியினைப் பரணரும்[34]; இளங்கோவடிகளும்[35] தம் பாடல்களில் படம் பிடித்துக் காட்டியுள்ளனர்.

## 15. ஆதனவினி

சேரர் குலத்து அரசர்களுள் ஒருவன். பாடிய புலவர் ஓரம் போகியார் 36

## 16. ஆதன் அழிசி

ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியனின் துணைவன் அவனால் பாராட்டப் பெற்றவன் [37]

## 17. ஆதன் எழினி

சோணாட்டுக் கடற்கரை நகரங்களுள் ஒன்று செல்லூர் அவ்வூருக்குக் கிழக்கே கோசர்க்குரிய நியமம் என்ற ஊர் இருந்தது. வேந்தர் குலத்தை வேரறுத்த பரசுராமன் வேள்வி செய்த சிறப்புடையது செல்லூர். அத்தகைய புகழ் மிக்க செல்லூர்க்கு உரியவன் ஆதன் எழினி. பெரிய வேல் வீரன்; அவன் எறியும் வேலேறுண்ட யானைகள் கலங்கி அழிவுற்றுப் போகும். ஆதன் எழினியின் வரலாறு அறிய உதவும் பாடல் களைப் பாடிய புலவர்கள் மதுரை மருதன் இளநாக னாரும்[38], ஐயூர் முடவனாரும் [39] ஆவர்.

## 18. ஆதனுங்கன்

வேங்கட மலைக்கு உரியவன்: சேரர் குலத்தவன் என்று கருதப்படுபவன். இரவலர் போற்றும் வள்ளல் புலவர் கள்ளில் ஆத்திரையனார்பால் பேரன்பு கொண்டு விளங்கியவன். அவரால் பாராட்டப் பெற்றவன்[40]

## 19. ஆந்தை

ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியனின் துணைவன் "மன்னெயில் ஆந்தை" "நிலை பெற்ற அருண் உடையான்" என அவனால் பாராட்டப் பெற்றவன்.[41]

## 20. ஆமூர் மல்லன்

ஆமூர் நாட்டில் வாழ்ந்த மல்லன். முக்காவல் நாட்டு ஆமூர் மல்லன் எனவும் அழைக்கப் பெற்றவன். நாடிழந்து ஆமூரில் வாழ வந்த சோழ இளவல் போரவைக் கோப்பெருநற்கிள்ளியோடு, மற்போரிட்டு, தோற்று உயிர் துறந்தவன் 42

## 21. ஆய் எயினன்

சோழ நாட்டு வெளியம் எனும் நகர்க்கண் வாழ்ந்த வேளிர் குலத்தவன். வெளியன் வெண்மான் ஆய் எயினன் என்று அழைக்கப் பெற்றவன். 43 பாழி ஆண்ட நன்னன்பால் நட்பு கொண்டவன்; நன்னன் ஆட்சிக் குட்பட்ட வாகைப்பகுதியின் ஆட்சிப் பொறுப்பில் அமர்த்தப்பட்டவன்[44] வாகைமீது போர் தொடுத்த, பசும்பூண் பாண்டியன் படைத்தலைவனான அதியனைக் கொன்று களம் வென்ற வீரன். [45]நன்னனுக் குரிய பாழி மீது மிஞிலி என்பான் போர் தொடுத்த போது அவனை எதிர்த்துப் போரிட்டு அமரிடை வீழ்ந்தான்.

ஆய் எயினன் பறவைகளிடம் பேரன்பு கொண்டவன். அதனால் போரில் இறந்துபட்ட அவன் உடல் வெய்யிலில் வருந்தாவாறு பறவைகள் தம் சிறகு களை விரிந்து நிழல் கொடுத்தன. தனக்காகப் போரிட்டு வீழ்ந்த ஆய் எயினனின் உரிமை மகளிர் துயர் துடைக்க வும் முன் வராத நன்னனின் இழி செயலைப் புலவர்கள் தூற்றினர்[46] ஆய் எயினன் சிறந்த கொடையாளி. பாடி வந்த இரவலர்க்கு, பகல் இரவு பாராது யானைகளைப் பரிசிலாகக் கொடுத்து மகிழ்பவன் 47

## 22. ஆரியப்பொருநன்

வடநாட்டிலிருந்து வந்த மற்போர் வீரன். சேரர் படைத் தலைவன் கணையன் பொறுப்பில் வாழ்ந்தவன். கட்டி என்பானின் பொறுப்பில் வாழ்ந்திருந்த பாணன் என்ற மற்றொரு வடநாட்டு மற்போர் வீரன், ஆரியப் பொருநனோடு மற்போர் செய்ய முன் வந்தான். மற்போரில் ஆரியப் பொருநன் தோள் இரண்டும் முறிந்து தோற்றான். உயிர் இழந்தான். கணையன், நாணித் தலை குனிந்தான்.[48]

## 23. ஆரிய அரசன் பிரகத்தன்

தமிழ் நாட்டிற்கு அண்மையில் வாழ்ந்திருந்த ஆரிய அரசன். அவனுக்குத் தமிழின் பெருமையை உணர்த்தும் வகையிலும் தமிழ் மக்களின் பண்பு இயல்புகளை எடுத்துரைக்கும் தன்மையிலும், புலவர் கபிலர், குறிஞ்சிப்பாட்டு என்ற பாடலைப் பாடி அவனை நெறிப் படுத்தினார். கபிலர் பாடல் கேட்டு பிரகத்தன் தமிழ் அறிவு பெற்றான்.

## 24. இயக்கன்

ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியனின் துணைவன். அடங்கா சினம் கொண்டவன், ஆதலால் 'வெஞ்சின வியக்கன்' எனப் பெயர் பெற்றவன்.[49]

## 25. இருங்கோ வேண்மான்

வேளிர் குலத்தவன். தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியனோடு, தலையாலங்கானம் என்ற இடத்தில் போரிட்ட எழுவரில் ஒருவன் போரில் தோற்று அழிந்தவன்.[50]

## 26. இருங்கோவேள்

வடபால் முனிவன் ஒருவன் இயற்றிய வேள்வியில் தோன்றிய பதினெண் வேளிர் மரபில் தோன்றி, துவரையில் இருந்து அரசாண்ட மரபின் நாற்பத் தொன்பதாம் தலைமுறையினன்.[51] அரையம் என்ற நகரின் தலைவன்[52] புலி கடிமால் என்றும் அழைக்கப் பட்டவன்[53] பாரி மகளிரை மணமுடிக்க வேண்டும் என்று கபிலர் இருங்கோவேளிடம் வேண்டியும், மூவேந்தர் பகை எண்ணி அம்மகளிரை மணக்க மறுத்தவன்[54]. கரிகாலன் பகைவனாய் விளங்கி அவனால் வெற்றி கொள்ளப்பட்ட இருங்கோவேளும்[55] இவனும் ஒருவரோ, வேறுவேறானவரோ என்பது ஆராய்ந்து அறிய வேண்டிய ஒன்று.

## 27. இளங்கண்டீரக்கோ

தோட்டி மலைத் தலைவனான வள்ளல் கண்டீரக் கோப்பெரு நள்ளியின் உடன் பிறந்தான். விச்சிக்கோன் தம்பி இளவிச்சிக்கோவின் நண்பன். இருவரும் ஒருங்கிருந்தகாலை, ஆண்டு வந்த புலவர் பெருந்தலைச் சாத்தனார் இளங்கண்டீரக்கோவை மட்டும் தழுவி நிற்க, விளக்கம் கேட்ட இளவிச்சிக்கோவிற்கு, இளங்கண்டீரக்கோவின் குடிச்சிறப்பையும் பண்பு நலத்தையும் புலவர் விளக்கினார், என்பர்[59].

## 28. இளங்குமணன்

வள்ளல் பெருந்தகை குமணனின் இளவல். அண்ணன் புகழ் கண்டு மனம் பொறாது, நாட்டைத் தானே ஆள விரும்பியவன். குமணன் நாடு விட்டு காடு

சென்று வாழ்ந்த போதும், அண்ணனை அழிக்க, "குமணன் தலையைக் கொண்டு வருவார்க்கு ஆயிரம் பொன் பரிசு அளிக்க" பறையறைந்தவன்.

குமணனை நாடி காடு சென்று பாடி நின்ற புலவர் பெருந்தலைச் சாத்தனார்க்குப் பரிசு ஏதும் கொடுக்க இயலாத நிலையில், தன் தலையைக் கொய்து சென்று தம்பி இளங்குமணனிடம் பரிசு பெறுவீர் என் தன் வாளை புலவரிடம் கொடுத்தான். வாளோடு சென்ற புலவர் இளங்குமணன் பால் சென்று, நிகழ்ந்ததைக் கூறி குமணனின் சிறப்பைப் பாடி நின்றார். இளங்குமணன் மனம் திருந்தியிருப்பன் என்பது உறுதி57

## 29. இளவிச்சிக்கோ

விச்சி நாட்டுத் தலைவனான விச்சிக்கோவின் தம்பி இளவிச்சிக்கோ. தோட்டி மலை இளவரசன் இளங்கண்டீரக்கோவின் நண்பன். இளவரசர் இருவரும் ஒரு சேர இருந்த காலை ஆண்டு வந்த புலவர் பெருந்தலைச் சாத்தனார், இளங்கண்டீரக் கோவை மட்டும் தழுவி நின்றார். மனம் வருந்திய இளவிச்சிக்கோ புலவர் தன்னிடம் அன்பு காட்டாமைக்கு காரணம் கேட்டான்.

இளங்கண்டீரக்கோவின் குடிவளமும், கோல் வளமும், குன்றா மனவளமும் மாண்புடையன என்று புகழ்ந்த புலவர், இளவிச்சிக்கோ நல்லவன் ஆயினும் அவன் பிறந்த குடி, பெண் கொலைப்புரிந்த நன்னன் வழி வந்த பழியுடையது. அக்குடிப்பிறந்த அரசன் ஒருவன் இரவலர்க்கு பரிசில் தராது வாயிற் கதவை அடைத்தான்,

பழியுடைய அக் குடியைப் பாடுவதை புலவர்கள் விடுத்தனர். அதனால் தான் பழியுடைய குடி வந்த அவனைத் தழுவிக் கொள்ளவில்லை. தவறு, அவனுடையது அல்ல, அவன் நலலவனாயினும் அவன் பிறந்து குடி பழியுடையது என்று விளக்கம் அளித்தார் [58]

## 30. இளவெளிமான்

வெளிமான் என்ற கொடை வள்ளலின் தம்பி. அண்ணனைப் போல் கொடை உள்ளம் உடையானல்லன். வெளிமான் பால் பரிசில் வேண்டி, புலவர் பெருஞ்சித்திரனார் சென்றிருந்தபோது வெளிமான் இறக்கும் நிலையில் இருந்தான். அந்த நிலையிலும் தம்பி இளவெளிமானை அழைத்து புலவர்க்குப் பரிசில் அளித்து அனுப்பச் சொன்னான், இளவெளிமானோ சிறிதே பொருள் அளித்தான். அதை ஏற்க மறுத்த புலவர் குமணனை நாடிச் சென்றார். பெருங்களிறு ஒனறைப் பரிசிலாக வேண்டிப் பெற்றார். அந் நெடு நல் யானையை, கொண்டு சென்று இளவெளிமானுக்குரிய காவல் மரத்தில் கட்டினார், இளவெளிமானிடம் "இரவலரைப் புரக்கும் குமணன் கொடுத்த பரிசில் இது நீ இரவலரைப் புரக்கும் புரவலன் அல்ல'' என்று அறிவுரை கூறினார்.[59]

## 31. ஈர்ந்தூர் கிழான் தோயன் மாறன்

கொங்கு நாட்டு ஈர்ந்தூர் தலைவன். கோயமான் என்றும் அழைக்கப்பட்டவன். உடல் முழுவதும் விழுப் புண் வடு பூண்ட பெருவீரன். வரையாது வழங்கிய

வள்ளல் பொருள் நாடி வந்த இரவலர்க்குப் பொருள் ஈய கொல்லன் உலைக்கலம் சென்று போருக்காம் படைக் கலத் துணை கொண்டு, பகை வென்று பெரும் பொருள் கொணர்ந்து பரிசிலர்க்கு அளிக்கும் மாண்புடையவன். 'பாண் பசிப் பகைஞன்' என்று புலவர் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனாரால் போற்றப் பட்ட புகழுடையவன்.[60]

## 32. எருமையூரன்

குடநாடு பகுதியில், அயிரி எனும் ஆற்றங்கரையில் அமைந்திருந்த எருமையூர் தலைவன். வடுகர் இனத்தவன். நள்ளிரவில் பகைவர் தம் காவற் படை களை அழித்து, அவருடைய ஆனிரைக் கூட்டங் களைக் கவர்ந்து வரும் பேராற்றல் வாய்ந்தவன்[61] பாண்டியன் நெடுஞ்செழியனோடு, தலையாலங்கானம் எனும் இடத்தில் கடும் போர் ஆற்றிய எழுவரில் ஒருவன். தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ் செழியனால் தோற்கடிக்கப்பட்டவன்.[62]

## 33. எவ்வி

எவ்வி என்ற வேளிர்குடியிற் பிறந்தவன். சோணாட்டுக் கடற்கரைப் பகுதியில் இருந்த மிழலை நாட்டுத் தலைவன். நீடுர், உறந்தூர் ஆகிய ஊர்களும் அவன் ஆட்சிக்குட்பட்டிருந்தன[63]. எவ்வி விற்போர்; வாட்போரில் வல்லவன் ''பல்வேல் 'எவ்வி'[64], வாய்' 'வாள் எவ்வி''[65] 'பொலம்பூண் எவ்வி.[66]' என்றெல்லாம் அழைக்கப்பட்டவன். கொடைக் குணம் குறைவறப் பெற்ற கோன் [67]

எவ்வியின் நண்பன் அன்னி. திதியன் என்ற தலைவனோடு பகை கொண்ட அன்னி, திதியனின் காவல் மரமாம் புன்னையை அழிக்க விரும்பினான். திதியனின் ஆற்றலை அறிந்திருந்த எவ்வி, தன் நண்பன் அன்னிக்கு அறிவுரை கூறித் தடுத்தான். எவ்வியின் அறிவுரையைப் புறக்கணித்த அன்னி திதியனோடு போரிட்டு அழிந்தான்.[68]

பாண்டியப் பேரரசனான, தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், எவ்வியின் மிழலையைக் கைப்பற்றத் துணிந்து படையெடுத்தான். எவ்வி போரில் உயிரிழந்தான். மிழலை பாண்டியனால் கைப் பற்றப்பட்டது.[69]

தம்மைப் புரந்த பெருவள்ளல் இறந்தானாகவே, தம் பாடல் தொழில் இனிப் பயனுறாது, தம் கை யாழால் இனிப் பயனில்லை, என்பதை உணர்ந்த பாணர், தம் யாழை ஒடித்துப் போட்டுப் புலம்பினர்.[70]

'போரில் விழுப்புண் பெற்று எவ்வி வீழ்ந்தான்' என்ற செய்தியைக் கேட்ட புலவர் வெள்ளெருக் கிலையார், அதை நம்ப மறுத்தார். அச் செய்தி பொய்யாக வேண்டும் என விழைந்தது அவர் உள்ளம்[71] களம் சென்ற அவர், ஆங்கே, எவ்வி உயிர் நீத்த இடத்தே, அவன் மனைவி பிண்டம் வைத்துப் படைத்து வழிபடுவதைக் கண்டு, கண்ணீர் விட்டு வருந்தினார். பாடிய புலவர்கள், மாங்குடி கிழார், வெள்ளெருக்கிலையார் குடவாயிற் கீரத்தனார்.[72]

## 34. எழினி

அதியர் குடிவந்தவன். திருமுது குன்றத்துத் தலைவன் கண்ணன் எழினி என்றும் பெயர் பெற்றவன்[73]. சோழ மன்னனின் யானை வேட்டையில் துணை செய்யாது போனமையால். சோழன் ஏவிய மத்தி என்பவனால் தோற்கடிக்கப்பட்டவன். மத்தி, எழினியின் பல்லைப் பறித்து'வெண்மணி'எனும் ஊரின் வாயிற் கதவில் பதித்தான்[73].

பாண்டியன் நெடுஞ்செழியனோடு தலையாலங் கானத்தே போரிட்டு அழிந்த எழுவரில் 'போர்வல் யானைப் பொலம் பூண் எழினியும்' ஒருவன். பாடிய புலவர் மாமூலனார்.[75]

## 35. எழினியாதன்

வேளிர் வழி வந்தவன். சோணாட்டு வாட்டாற்றுத் தலைவன். வேல் வீரன். மெலிந்தோர்க்குத் துணை வனாகவும், ஆதரவற்றோர்க்கு நண்பனாகவும் விளங்கி அறிவுரை வழங்கியவன். வருவோர்க்கு வரையாது வழங்கிய வள்ளல். பாடியபுலவர் மாங்குடி கிழார்.[76]

## 36. ஏற்றை

சேரமான் கணைக்கால் இரும்பொறையின் படைத் தலைவர்களுள் ஒருவன். கழுமலம் எனும் இடத்தே. நடந்த போரில் சோழர் படைத் தலைவன் பழையன் என்பானோடு போரிட்டு உயிர் துறந்தவன்.[77]

## 37. ஏறைக்கோன்

குறவர் தலைவன். பெருங்கல் நாடன். சிறந்த வில்லாளி. வேற்படைத் தாங்கியவன். போற்றற்குரிய பண்புகள் பெற்றவன். நட்பு கொண்டு பழகியவர் செய்யும் தவறுகளை மன்னிக்கும் தன்மை; பிறர் வறுமை கண்டு வருந்தும் உள்ளம்; பழி தரும் வழியில் வெற்றி பெற விழையா மாண்பு; அரசர்க்கும் அஞ்சா பெருமித வாழ்வு; போன்ற நல்லியல்புகள் கொண்டவன். பாடிய புலவர் குறமகள் இள எயினியார்.78

## 38. ஒல்லையூர் கிழார் மகன் பெருஞ்சாத்தன்

பாண்டிய நாட்டின் வடவெல்லையான வெள்ளாற்றின் தென் கரையில் அமைந்த தென் கோனாட்டின் மேலைப் பகுதி ஒல்லையூர் நாடு என அழைக்கப்பட்டது, அந்நாடாண்ட பெருஞ்சாத்தன் பெரு வீரன். வல்வேற் சாத்தன் எனவும் அழைக்கப் பட்டவன். தன்னைப் பாடி வரும் பாணர்க்கு பரிசில் பல நல்கும் பேருள்ளம் பெற்றவன். பெருஞ்சாத்தன் மறைந்த காலை, அவன் பிறிவாற்றத வீரரும், மகளிரும், பாணரும், பாடினியரும் மகிழ்ச்சி இழந்தனர். மலர் சூடி வாழும் மனம் நிறை வாழ்வை வெறுத்தனர். 79

## 39. ஓய்மான் வில்லியாதன்

ஓவியர் குடியில் வந்தவன். ஓய்மானாடு ஆண்டவன். எயிற்பட்டினம், கிடங்கில், உப்பு வேலூர், ஆமூர் போன்ற நகரங்களைக் கொண்ட ஓய்மானாட்டுத் தலை

நகரம் மாவிலங்கை.[80] ஓய்மானாடாண்ட வில்லியாதன் வரையாது வழங்கும் வள்ளலாக வாழ்ந்தவன். பாடிய புலவர் புறத்திணை நன்னாகனார்.[81]

## 40. கங்கன்

சேரர் படைத் தலைவருள் ஒருவன். கழுமலம் எனும் இடத்தே நடந்த போரில் சோழர் படைத் தலைவன் பழையன் என்பானோடு போரிட்டு உயிர் துறந்தான்.[82]

## 41. கட்டி

கட்டி, வடுக நாட்டை அடுத்து வாழ்ந்திருந்த வீரன்.[83] பாணன் என்ற மற்றொரு வடநாட்டு மல்லனோடு, உறையூர் தலைவனான தித்தன் வெளியனோடு மற்போரிட எண்ணி உறையூர் சென்றான். உறையூர் நாளவைக் கண், புலவரும் பாணரும், தித்தன் புகழ் பாடி வாழ்த்தும் ஒலியைக் கேட்டு, தித்தனோடு போரிடுவது இயலாது என அஞ்சி ஓடிவிட்டான்.[84]

பின்னர், சேரன் கணையன் படையிற் சேர்ந்தான், கழுமலம் எனுமிடத்தே, சேரன் கணையனுக்கும், சோழன் சேரன் பெரும்பூட் சென்னிக்கும் இடையே நடந்த பெரும் போரில், சோழர் படைத்தலைவன் பழையன்என்பவனால் தோற்கடிக்கப்பட்டுஅழிந்தான்.[85]

## 42. கடவன்

விளங்கில் என்ற நகரின் தலைவன். உள்ளத்தே உரனும் ஊக்கமும் பெற்றவன். பகையரசர்களின்

யானைப் படைகளை அழித்து வெற்றி கொள்ளும் ஆற்றல் பெற்றவன். வள்ளல் தன்மை வாய்க்கப் பெற்றவன்.[86]

## 43. கரும்பனூர் கிழான்

வேங்கட மலையை அடுத்த திருவேங்கடக் கோட்டத்து ஊர்களுள் ஒன்று கரும்பனூர்,[87] இயற்கை வளம் நிறைந்த ஊர்.[88] அவ்ஊரின் தலைவன் கரும்பனூர்கிழான். நாடி வந்த இரவலர்க்குப் பெருஞ் சோறு அளித்துப் புரந்தவன்[89] இரவலர் பலர் அவன் மனையகத்தே பன்னாள் விருந்துண்டு, வறுமை நீங்கி வாழ்ந்தனர். அவர்கள் என்றென்றும் தன் மனையகத்தே வாழ வேண்டும் என்று விரும்பும் கொடையுள்ளம் கொண்டவன் கரும்பூர்க்கிழான்[90]

## 44. கழுவுள்

சேர ஆட்சிக்குட்பட்ட காமூர் என்ற ஊரின் தலைவன் கழுவுள். ஆயர் குலத்தவன். வேற்படை வல்லவன். வள்ளல் தன்மை கொண்டவன். காமூரில், பூதம் தந்த வேங்கை மரம் இருந்தது என்பர் புலவர் மதுரை இளநாகனார்.[91]

கழுவுள் புகழைக் கண்டு மனம் பொறாத சேர அரசன், தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை காமூரை முற்றுகையிட்டான். கழுவுள் பணிய மறுத்தான்.

ஆனால் நீடித்த முற்றுகையால் துயர் உற்ற காமூர் வாழ் ஆயர், கழுவுள் அறியாவாறு. சேரர் படைத் தலைவனிடம் திறையளித்துப் பணிந்தனர். ஆயர் செயல் அறிந்த கழுவுள், வேறு வழியின்றி பணிந்தான்.92 பழி துடைக்க வாய்ப்பை எண்ணிக் காத் திருந்தான்.

அரசன் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை இறந்தவுடன். மீண்டும் கழுவுள் காமூரில் தன் ஆட்சியை நிலை நாட்டினான். ஆனால் அரியணை யேறிய சேர மன்னன் இளஞ்சேரல் இரும்பொறை படைகொண்டு சென்று கழுவுளைப் புறங்கண்டான்93

கழுவுளின் புகழ் கண்டு மனம் பொறாத பதினான்கு வேளிர் தலைவர்கள் ஒன்று கூடி காமூரை அழித்தனர், என்பது பரணர் கூற்று.94

## 45. கொடுமுடி

தொண்டை வளநாட்டு, ஆமூர் கோட்டத்தின் தலைநகரான ஆமூர் தலைவன் கொடுமுடி. பெருவீரன். ஆமூரைக் கைப்பற்ற விற்படை, யானைப் படை களோடு முற்றுகையிட்டான் சேர மன்னன். அவ்வான வனுடைய யானைப் படையை அழித்து, சேரனை வென்று தலை நகர் காத்த புகழுடையவன் கொடுமுடி.95.

## 46. கொண் கானங் கிழான்

"பொன் படு கொண்கானம்" எனப் போற்றப் பெற்ற மலையைத் தன்னகத்தே பெற்ற நாடு கொண்கானம்96. அக் கொண்கானத்தின் தலைவனே

கொண் கானங்கிழான். புலவர் மோசி கீரனாரால் பாராட்டப் பெறும் பெருமை பெற்றவன். பரிசில் நாடி வந்த இரவலர்களாலும், பணிந்து திறை செலுத்தி மீளும் அரசர்களாலும் சூழப் பெற்றிருக்கும் கொற்றமுடையவன் கொண் கானங்கிழான்.[97] "ஞாயிறு செல்லும் திசை நோக்கியே செல்லும் நெருஞ்சிப் பூக்களைப் போல, யாழ்ப்பாணர்கள் கொண்கானங் கிழானையே நாடி நிற்பர்.[98] நீர் வேட்கை மிக்கார், உண்ணும் நீர் உள்ள இடம் தேடி அலைவது போல பரிசிலர் தம் துயர் தீர்ப்பான் கொண் கானங் கிழான், ஒருவனே. என்று அவனைத் தேடிச் செல்வர்"[99] என்று அவன் பெருமையை புலவர் பாராட்டியுள்ளனர்.

## 47, கௌணியன் விண்ணந்தாயன்

சோணாட்டு, பூச்சாற்றூர் ஊரினன். கௌணியைப் பார்ப்பனர் குடியில் வந்தவன். சோணாட்டுப் பூச்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயன் என அழைக்கப் பெறுவன். வேள்வி பல செய்தவன். வேள்வி முடிவில் விருந்தளித்துப் போற்றியவன்[100] புலவர் ஆவூர் மூலங்கிழாரால் 'இமயம் போல் என்றும் நிலை பெற்று நெடிது வாழ்க' என வாழ்த்தப் பெற்றவன்.

## 48. சிறுகுடி கிழான் பண்ணன்

சோணாட்டில், காவிரியின் வடகரையில் அமைந்த ஊர் சிறுகுடி. அச்சிறுகுடி, அச்சிறுகுடியின் தலைவன் பண்ணன் பேராற்றல் பெற்றவன். பகைவர் யானைப்

படை அழித்தமையால் அந்த யானைகளின் குருதிக் கறை படிந்த விரக் கழல் அணிந்தவன் அக் 'கழற்கால் பண்ணன்[101]

வேளான் தொழில் மேற் கொண்டு வாழ்ந்த பண்ணன் 'தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன் பண்ணன்' என்று போற்றப்பட்டவன் 102 பல நாடு களிலிருந்தும், புலவர்கள் அவன் புகழ் பாட வந்தனர். பாண்டிய நாட்டுப் புலவராய மதுரை அளக்கர் ஞாழலார் மகனார் மள்ளனார் என்பார் "பண்ணன் புகழ் பாடேனாயின் பெரு நன்றி கொன்ற பழி யுடையேனாவன், எம் மன்னன் வழுதி என் சுற்றம் வறுமையில் உழல விடுவானாக'' என்று பாராட்டி யுள்ளார்.[103]

பெருங் கொடை வள்ளலாகிய சோழன் குள முற்றத்துஞ்சிய கிள்ளிவளவனே, பண்ணனைப் பசிப் பிணி மருத்துவன், என்று பாராட்டியுள்ளான்,[104]

## 49. சேந்தன்

சோழ நாட்டைச் சேர்ந்த ஆர்க்காடு எனும் நகரை ஆண்டவன் அழிசி என்பான் [105] அவருடைய வீர மகன் சேந்தன் தன் அருந்திறத்தால், வீரத்தாய் 'சேந்தன் தந்தை அழிசி' எனக் கூறுமளவு புகழ் பெற்றவன், காவிரியில் மக்கள் நீராடும் பெருந் துறையாம் மருதத் துறையில் புகுந்து இன்னல் விளைத்த யானையை அடக்கி மருத மரத்தோடு பிணைத்தவன் [106] பரிசில் வேண்டி வரும் புலவர்க்கு வரையாது வழங்கும் வள்ளலாக வாழ்ந்தவன்.

## 50. சோழிய ஏனாதி திருக்குட்டுவன்

சேரர் குடியான குட்டுவர் குடியில் வந்தவன். சேர நாடு விட்டு, சோணாடு சென்று, சோழன் படையில் பணி மேற்கொண்டான். 'ஏனாதி' என்ற சிறப்புப் பெற்றான். படைத்தலைவனாய் விளங்கி சிறப்புப் பெற்ற திருக்குட்டுவன், பணியினின்றும் ஓய்வு பெற்ற பின் தன்னாட்டகத்ததாய வெண்குடை என்ற ஊர் சென்று வாழத் தொடங்கினான். வள்ளலாக வாழ்ந்து புகழப்பெற்றான்.

புலவர் மாடலன் மதுரைக் குமரனார், வெண்குடை வந்து, திருக்குட்டுவன் தந்தை புகழைப் பாடினார். திருக்குட்டுவன் மன மகிழ்ந்து யானை யொன்றைப் பரிசிலாக அளித்தான். யானையைப் பெற்ற புலவர் அதைக் கண்டு அஞ்சி அதை அவன்பாலே திருப்பி அனுப்பி விட்டார். 'கொடுத்த பரிசில் குறைவோ' என்று எண்ணிய திருக்குட்டுவன் மற்றுமோர் யானையைப் பரிசளித்து புலவர் வறுமையை அகற்றினான். 107

## 51. தந்துமாறன்

பாண்டியர் பேரரசில் பணி செய்து, அப்பாண்டியர் பெயரை மேற்கொண்டவன். சான்றோர் போற்ற வாழ்ந்தவன். பெருங் கொடை வள்ளலாக வாழ்ந்தவன். சங்க வருண ரென்னும் நாகரையர் என்ற புலவரால் பாராட்டப் பெற்றவன். 108

## 52. தழும்பன்

கடற்கரைப் பட்டினமாகிய மருங்கூர்ப் பட்டினத்தை அடுத்து அமைந்த ஊர் ஊணூர். மதில் சூழ்ந்த அரண் உடைய அவ் ஊணூரில்; போர்க் களத்தில் யானையால் தாக்குண்டு, அதனால் தழும்பு பெற்ற வீரன் வாழ்ந்திருந்தான். அவனை, தழும்பன், வழுதுணைத் தழும்பன் என்று பெயரிட்டு பாராட்டினர்.109 தழும்பன்; வாட்போர் வல்ல வீரன் மட்டுமல்ல, வரையாது வழங்கும் வள்ளலாகவும் திகழ்ந்தான். வாய்மையே வழங்கும் வழக்குடையானாக விளங்கினான்.110 தூங்கலோரியார் எனும் புலவரால் பாராட்டப் பெற்றவன். பரணரும், நக்கீரரும் அவன் புகழ் பாடியுள்ளனர்.

## 53. தாமான் தோன்றிக்கோன்

கரூவூர்க்கு அண்மையில் உள்ள தோன்றி மலைக்குரிய வள்ளல். புலவர் ஐயூர் முடவனார் என்பார் உறையூர் ஆண்ட சோழன் கிள்ளி வளவனை நாடி பரிசில் பெறச் செல்லும் வழியில், அவர் சென்ற தேரில் பூட்டிய எருது சேற்றில் சிக்கித் தளர்ந்து போனது. அண்மையில் வாழும் தோன்றிக் கோவின் சிறப்பறிந்து அவனைக் கண்டார், அவன் அளித்த பரிசில் பெற்று பாடிப் புகழ்ந்தார்111

## 54. திதியன்

திதியன் என்ற பெயருடையார் மூவரை சங்க இலக்கியங்களில் காண்கிறோம், இவர்களுள் பரணர் போற்றும் அழுந்தைத் திதியன் ஒருவன். அன்னி மிஞிலி

எனும் பெயருடைய ஒருத்தியின் தந்தையினுடைய பசுக்கள். கோசர்க்குரிய நிலத்தில் புகுந்து விட்டன. அக்குற்றத்திற்காக கோசர் அன்னி மிஞிலியின் தந்தையுடைய கண்களை அழித்து விட்டனர். இந்தக் கொடுமைக்குப்பழி தீர்க்க அன்னி மிஞிலி அழுந்தை வாழ் திதியனின் துணை நாடினாள்' அழுந்தைத் திதியன, கோசரை அழித்தான்[112] இது பரணர் கூறும் திதியன் வரலாறு.

நக்கீரர், வெள்ளி வீதியார் கயமனார் ஆகிய புலவர்கள், புன்னையைத் தன் காவல் மரமாகக் கொண்ட திதியன் ஒருவனைப் பாடியுள்ளனர். அக்காவல் மரமாய புன்னையை அழிக்களண்ணினான் அன்னி என்ற ஒருவன் அன்னியின் நண்பனான எவ்வி எனும் வேளிர் குலத் தலைவன் அத்தகு அழிவு தரும் செயலில் ஈடுபட வேண்டாம் என அன்னிக்கு அறிவுரை கூறித் தடுத்தான். அதையும் கேளாது புன்னையை அழித்தஅன்னியை போரிட்டுக் கொன்று பழி தீர்த்தான் திதியன்[113] என்பது புலவர் மூவர் கூறும் குறுக்கைப் பறந்தலைத் திதியன் வரலாறு.

புலவர் மாமூலனார், பாணர் மகிழ நாளவை இருந்து நனிமிக நல்கும் கொடைவள்ளல் திதியன் ஒருவனைப் பாடியுள்ளார் [114]

இம் மூன்று திதியன்களே அல்லாமல், பொதியிலை ஆண்ட; விற்படை. வேற்படை தேர்ந்தவனும்,பொன்னாலாய பெரிய தேர் பல உடையவனுமான பொலந்தேர்த்திதியன்' என்பானைப் பரணரும், ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியனும், பாடியுள்ளனர்[115] பாண்டியன் நெடுஞ்செழியனை,

த்லையாலங்கானத்தே எதிர்த்துப் போரிட்டு அழிந்த எழுவருள் திதியன் என்பானும் ஒருவன் என்றுநக்கீரர் குறிப்பிட்டுள்ளார்.116

அழுந்தைத் திதியனையும், பொதியில் திதியனை யும் பரணர் பாடியுள்ளதால். அது ஒரே திதியனைக் குறிப்பதாகக் கொள்ளலாம். அன்னியோடு போரிட்ட திதியனையும், தலையாலங்கானத்துப்பட்ட திதியனை யும் பற்றி நக்கீரர் பாடியுள்ளவையால். அவ்விரு திதியர்களும் வேறு வேறானவரல்லர், ஒருவனே எனவும் கொள்ளலாம்,

திதியன் எனும் பெயருடையார்; இருவரோ, மூவரோ அல்லர்; அப்பெயருடையான் ஒருவனே; அவனைப் பாடிய புலவர்கள் அனைவரும், அவன் செயல் அனைத்தையும் எடுத்துக் கூறாது, அவற்றுள் தாம் தாம் விரும்பும் சிலவற்றை மட்டுமே எடுத்துக் கூறிப் பாராட்டியுள்ளனர்.

ஆகவே, அன்னியோடு போரிட்டோனும், அன்னி மிஞிலியின் துயர் களைந்தோனும், பாண்டியனைப் பகைத்தோனும், வேளிரோடு வாட்போர் புரிந்தோனும் அழுந்தைக் குரியோனும், பொதியில் வாழ்ந்தோனும் ஒருவனே எனக் கொள்க.

இதைக் குறித்து விரிவாக, தென் இந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் வெளியிட்ட ''சங்க கால அரசர் வரிசை—5, அகுதை முதலிய 44பேர்கள்'' என்ற நூலில் 'திதியன்' என்ற தலைப்பின் கீழ் விரிவாக விளக்கியுள்ளேன், ஆண்டு கண்டு கொள்க.117

# 55. திரையன்

திரையன் வெற்றி தரும் வேற்படை வீரன்.[118] வேங்கட நெடுவரைஆண்ட தொண்டை நாட்டு அரசன் கடியலூர் உருத்திரங்கண்ணனார் இயற்றிய பெரும் பாணாற்றுப்படையின் பாட்டுடைத்தலைவன். அல்லன் கடிந்து நல்லன ஓம்பும், அறநெறி அறிந்தவன். அறம் விரும்பும் பெருங்கோலன்.[119]

தன் பாட்டுடைத் தலைவன் திரையன் வரலாறாகக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் கூறுவன வருமாறு,

திரையன், திருமாலை முதல்வனாகக் கொண்ட குடி வழி வந்தவன். திரைதரு மரபின் வழி வந்தவன்.[120] காஞ்சியைத் தலைநகராக் கொண்டு நாடாண்டவன்[121] நீர்ப் பேர் எனும் பெயருடைய தொரு பேரூர் அவன் ஆட்சியில் இருந்தது.[122] வேங்கட மலையும் அவன் ஆட்சிக்குட்பட்டதே. பூஞ்சோலை பல சூழ்ந்த பவத்திரி எனும் ஊரும் அவனுடையதே என்று அக் நானூறு பாடல் எடுத்துரைக்கிறது.[123]

திரையன் வரலாறு குறித்துப் பல கருத்துக்கள் நிலவுகின்றன. "நாகப்பட்டினத்துச் சோழனுக்கும் நாக கன்னிகைக்கும் பிறந்தவன். தொண்டையையே அடையாளமாகக் கட்டி தாயால் கடலிலே விடப் பட்டவன். திரை தருதலின் திரையன் எனப் பெயர் பெற்றான்" என்பார் நச்சினார்க்கினியர். அச் சோழன் கிள்ளி வளவனாவன்; நாககன்னி பீலிவளையாவள் என்று கொள்வர் சிலர்.

துரோணர் மகன் அசுவத்தாமனுக்கும், மதனி என்ற அரமகள் ஒருத்திக்கும் பிறந்தவன். துரோணரின் தாய்,

கங்கை நீரில் பிறந்தவளாய 'க்ருதாசி' என்ற நீரரமகள். எனவே பல்லவர்; திரைதரு மகளிர் மரபினராவர் என்றும் சிலர் கூறுவர்.

## 56. தொண்டைமான்

ஆமூர் முதலாய இருபத்து நான்கு கோட்டங்களையும், அருவா, அருவா வடதலை ஆகிய இரு நாடுகளையும், வேங்கட மலையும் தன்னகத்தே கொண்டு விளங்கியது தொண்டை நாடு. வீரம் மிகுந்தவரும், யானைப் படையை உடையவருமான தொண்டையர் வாழ்ந்த நாடு. [124]

அத் தொண்டையர் மரபில் வந்தவன் தொண்டைமான். அதியமான் நெடுமான்அஞ்சி ஆண்ட காலத்தில் வாழ்ந்தவன். அதியமானோடு பகை கொண்டவன். தொண்டைமான் பெரும்படையும், பேரரணும் கொண்டிருத்தலை அறிந்த அதியமான் பகை தணிந்து வாழ விரும்பினான். தன் அவைப் புலவர் ஔவையாரை தொண்டைமான் பால் தூது அனுப்பினான்.

ஔவையை அன்புடன் வரவேற்ற தொண்டைமான், அவர்க்குத் தன் படைக்கலக் கொட்டிலைத் திறந்து காட்டினான். படைக்கலக் கொட்டிலைக் கண்ட ஔவையார், தொண்டைமான் படைகளைப் புகழ்வார் போல் பழித்தும், அதியமான் படைக்கலங்களைப் பழிப்பார் போல் புகழ்ந்தும் பேசி அமர் ஒழிக்க வேண்டினார். [125] அதியமானும் அவன் ஆண்டிருந்த தகடூரும் அழிவுற்றதில் தொண்டைமானும் பங்கு கொண்டிருக்கக் கூடும்.

## 57. நன்னன்சேய் நன்னன்

தொண்டை நாட்டு, பல்குன்றக் கோட்டத்துச் செங்கண்மா நகரில் இருந்து அரசாண்டவன் நன்னன் சேய் நன்னன்; இவன் வேளிர் வழி வந்தவன், என்பது "வேள்" "மான விறல் வேள்" என அழைக்கப் பெறுதலால் உணரலாம்.[126] இரணிய முட்டத்துப் பெருங் குன்றூர்ப் பெருங் கௌசிகனார் இயற்றிய மலைபடுகடாம் பாட்டின் தலைவன் இவன்.

இந் நன்னனின் தந்தையாகிய நன்னன் யாவன் என்பது குறித்து ஆராய்ச்சியாளரிடையே பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன. "நன்னன் சேய் நன்னனுக்குரிய பல்குன்றக்கோட்டம், ஏழிற்குன்றம் எனவும் வழங்கப் பெறும். ஆகவே, ஏழில் மலையைக் கொண்ட கொண்கான நாடாண்ட, பெண்கொலை புரிந்து பழி கொண்ட கொண்கானத்து நன்னனே, மலைபடுகடாம் பெற்ற நன்னனின் தந்தையாதல் வேண்டும்" எனக் கூறுவர் ஒருசாரார்,

"செங்கண்மா எனும் நகரம், கொண்கான நாட்டின் ஒரு பகுதியான சேலம் மாவட்டத்தையடுத்து உளது, எனவே அந்நகரமும், பல் குன்றக் கோட்டமும் கொண்கான நாட்டினைச் சேர்ந்திருத்தல் கூடும்: அதனால் செங்கண்மா நகரத்து நன்னனும், அவன் தந்தை நன்னனும், கொண்கான நாட்டு நன்னனின் வழி வந்தவராயிருக்கக் கூடும்" என்பார் சிலர்.

"மலை நாட்டின் ஒரு பகுதியான கொண்கானமும் நெடுந்தூரத்ததாகிய தொண்டை நாட்டு பல்குன்றக் கோட்டமும் ஓர் அரசனால் ஆளப்பட்டது எனக் கொள்வதில் ஐயம் உண்டாயிற்று. "பல்குன்றக்

கோட்டத்துச் செங்கண் மாத்துவேள்''என்னும் அடைமொழி, நன்னன் சேய் நன்னனை, கொண்கானத்து நன்னனின்றும் வேறுபடுத்திக் காட்டுவதற்காகவே கொடுத்தது போலத் தோன்றுகிறது'' என மறுப்பர் வேறு சிலர்.

இதுவுமன்றி, ''நன்னன் உதியன், அருங் கடிப்பாழி'' என்ற தொடரால் அறியப்படுவான் ஒருவன்[127], ''நன்னன் ஏற்றை'' என்ற பெயரால் அறியப்படும் தலைவன் பிறிதொருவன்.[128] பல்குன்றக் கோட்டத்து தலைவனான நன்னன்சேய் நன்னன்; என நன்னன் என்ற பெயருடையார் மூவர் சங்க இலக்கியப் பாடல்களில் இடம் பெற்றுள்ளனர். இம்மூவரும் ஒருவரா, வேறு வேறானவரா என்பதை ஆராய்ச்சி யாளர் பெரிதும் விழிப்புடன் ஆராய்ந்து அறிதல் வேண்டும்,

''மலைபடு கடாத்தில், நன்னன் சேய் நன்னனுக்குக் கொடுக்கப்பட்டுள்ள 'வான விறல் வேள்' என்ற சிறப்பு அடைமொழியே, மதுரைக் காஞ்சியில்[129], சேரமானுடைய படைத் தலைவருள் ஒருவனான அழும்பில் வேள் என்பானுக்கும் கொடுக்கப்பட்டிருப்பதால், நன்னன் சேய் நன்னன், சேரர் படைத் தலைவருள் ஒருவனாக இருந்திருக்கக் கூடும். அதனால் தான் அவன்' நன்னன் உதியன் அருங்கடிப்பாழி' 'நன்னன் ஏற்றை' போன்ற தொடர்களால் குறிக்கப்பட்டுள்ளான் என்று கூறி, மூவரும் ஒருவனே என்ற முடிவுக்கு வருவார் சிலர்.

''மானவிறல் வேள்'' என்ற தொடர் 'வான விறல் வேள் என்று வானவரான சேரர் வெற்றிக்குரிய வேள் எனப் பொருள்படும் தொடரினும் வேறுபட்டது

நன்னன் ஏற்றை' என்ற தொடரால் சேரன்படை முதலிகளுள் ஒருவனாக உணரப்படும நன்னன் கொண்கானத்து நன்னன், நன்னன் சேய் நன்னன், ஆகிய இருவரினும் வேறுபட்ட ஒருவனாவான், அவன் சேரர்க்கும் சோழர்க்கும் கழுமலம் எனுமிடத்தே நடை பெற்ற போரில்; சேரர்க்குப் படைத்துணையளித்த நன்னனாவன். 'நன்னன் உதியன், அருங்கடிப்பாழி' என்ற தொடரால், சேரரோடு யாதோ ஒரு வகையால் உறவு பூண்டு, அதனால் 'உதியன்' என்ற சிறப்புப் பெயர் பெற்ற நன்னன், அதே நிலையில், அச் சேரரோடு பகை கொண்டு, களங்காய்க் கண்ணி நார் முடிச் சேரலால் உயிர் இழந்த கொண்கானத்து நன்னனே யாவன்.

இனி, மலை படுகடாம் பாடல் வழி அறியும் நன்னன் சேய் நன்னன் வரலாறு பின்வருமாறு.

பல்குன்றக் கோட்டம் மலைகள் பலவற்றைக் கொண்ட மலைநாடு. மலை வளம் நிறைந்தது. அவன் நாட்டில் உள்ள நவிரம் என்ற மலையில் காரியுண்டிக் கடவுள் என்ற திருநாமம் கொண்ட சிவபெருமான் திருக்கோயில் கொண்டுள்ளார் நன்னன் நாட்டில் பாய்ந்தோடும் ஆறு சேயாறு.[130] நன்னன் இருந்து அரசாண்ட தலை நகர் செங்கண்மா. அவன் நாட்டு மக்கள் நனி மிக நல்லவராவர். அவன் நாட்டைச் சார்ந்த காட்டு வாழ் மக்களும், மலை வாழ் குறவர் களும், ஆயரும், நகர மாந்தரும் ஆண்டு வரும் புதியரை, அண்ணன் எனவும்; அம்மான் எனவும் தம் மக்கட்கு முறை கூறி, விருந்தளித்துப் பேணி அன்பு காட்டுவர்[131]

நன்னன் சேய் நன்னன் நற்பண்பு பல பெற்றவன்[132] பேராற்றல் பெற்றவன். பகைவரைப் புறங்கண்டு, அவர் பால் கவர்ந்து கொண்ட பெரும்பொருளைப் பாடி வரும் புலவர்களுக்கு வரையாது வழங்கியவன்.[133]

## 58. நன்னன் வேண்மான்

நன்னன் வேண்மான், வேளிர் குலத்தவன். கொண்கானம் நாட்டை ஆண்டவன், ஏழில், பாழி, பிரம்பு முதலிய மலைகளும் பாரம், பாழி, வியலூர் முதலிய ஊர்களும் அவனுக்கு உரியனவாம்[134] நன்னனுடைய பாழிப் பெரு நகர், பகைவர் அணுகு தற்கரிய காவல் செறிந்தது. அதனால். வேளிர் பலரும் தாம் அரிதின் ஈட்டிய பெரும் பொருளை ஆங்கு வைத்துப் போற்றிக் காத்தனர்.[135]

"நன்னன் உதியன் அருங்கடிப் பாழி" என்ற தொடரை வைத்து,[136] உதியன் என்ற சேரரைக் குறிக்க வழங்கும் பெயர், நன்னன் பெயரோடு இணைந்து வழங்குவதாலும், நன்னனுக்குரிய கொண்கான நாடு, சேர நாட்டின் ஒரு பகுதியாகக் கொள்ளப்படுதலாலும், நன்னன் யாதோ ஒரு வகையால் அச் சேரரோடு உறவுடையவனாவன் என்று கொள்ளலாம். "நன்னன் ஏற்றை, நறும்புண் அத்தி,[137] என்ற தொடரால் குறிக்கப் பெறும் நன்னன் என்பானொருவன் சேரர் படைத் தலைவனாய் விளங்கினான் எனத் தெரிகிறது; அந் நன்னனே, இந் நன்னன் என்று சிலர் கூறுகின்றனர். சேரர் படையில் பணியாற்றிய ஒருவன், அச்சேரரின் பகைவனாய்ப் பெருவாழ்வு வாழ்ந்தான்; அவனை அழிக்க, அச்சேரர் அரும் போர்

ஆற்ற வேண்டியவராயினர் எனல் அத்துணைப் பொருத்தம் உடைத்தன்று ஆதலால், சேரர் படைத் தலைவனாய்ப் பணியாற்றினவன் அல்லன் இந்நன்னன். இவன் வேறு; அவன் வேறு என்றே கொள்வது பொருத்தமுடையதாகும்.

நன்னனுக்குரிய ஊர்களுள், கடம்பின் பெருவாயில் என்பதும் ஒன்று. சேரர் பகைவருள் கடம்பர் என்பாரும் ஒருவர். களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலும், இளஞ் சேரல் இரும் பொறையும், கடம்பின் பெருவாயில் நன்னனை வென்று அழித்தனர் என்று கூறப்படு கிறது[138] இதனால், நன்னன், அக் கடம்பரோடும் யாதோ ஒரு வகையான் உறவுடையவனாவன் என்பது தோன்றுகிறது.

''பொலந்தேர் நன்னன் மருகன் அன்றியும், நீயும் முயங்கற்கு ஒத்தனைமன்''[139] என்ற புலவர் பெருந் தலைச் சாத்தனார் பாடல் வரிகள் மூலம்' விச்சியர்[140] என்ற இனத்தைச் சார்ந்த இளவிச்சிக்கோ எனும் இளவரசன் ஒருவன், நன்னன் வழி வந்தவனாவன் என்பது புலனாகிறது.

''இளவிச்சிக்கோ' எனும் சொல், 'இளவிச்சிரக்கோ' என்பதன் திரிபாதலும் கூடும் என்று கொண்டு. நன்னன் சோணை நதிக்கரையில் உள்ள தேயமான வச்சிர நாட்டினின்றும் வந்தோர் வழியினாதல் வேண்டும் என்பாரும் உளர். இவை ஆய்ந்து அறிய வேண்டியன ஆகும்.

நன்னன், தேர்ப் படை, யானைப் படை, வேற்படை போன்ற பெரும்படை கொண்டிருந்தான்[141] அடிப்படை வலிமை கொண்டு சிற்றரசுகள் பலவற்றை அழித்தான். அந் நாடுகளின் பொருள்களை அள்ளி வந்தான்[142]

பேராண்மையுடைய பிண்டன் எனும் சிற்றரசனை வென்றான்143 அரசர் பலரை வென்று, அவர் தம் மனைவியர் தலையை மழித்து, அக்கூந்தலால் கயிறு திரித்து அவ்வரசர் தம் யானைகளைப் பிணித்துக் கொணர்ந்தான்144

நன்னனின் காவல் மரமாக விளங்கியது வாகை மரமாகும். அம் மரத்தின் பெயரால் வாகை எனும் ஊர் ஒன்று கண்டு; அவ்வூர் ஆட்சியைத் தன்பால் அன்பு உடையவனாகிய ஆய் எயினன் என்பான் பால் ஒப் படைத்திருந்தான். ஒரு கால், அண்டை நாடான புன்னாடு என்ற பகை நாட்டை யழிக்க நன்னன் படை கொண்டு சென்ற போது, அவனுடைய பாழியை யும், பாழிக்கண் உள்ள பெரும் பொருளையும் காக்கும் பொறுப்பை ஆய் எயினன் ஏற்றான்.

அந்நிலையில், மிஞிலி என்பான் பாழியைத் தாக்கினான். நன்னனின் பாழியைக் காக்க ஆய் எயினன் விரைந்து வந்தான். போரில் ஆய் எயினன் கொல்லப் பட்டான். நண்பனுககுத் துணையாக நன்னன் போர்க் களம் புகாது புலவர் பழிக்கு ஆளானான். பாழி, பாரம் இரு நகரங்களையும் நன்னன் இழந்தான்145

நன்னன் அரண்மனைத் தோட்டம் நறுமாமரங்கள் நிறைந்தது. அருகே ஓடிய அருவியில் மிதந்து வந்த, அத் தோட்டத்து மாங்காய் ஒன்றை. அவ்வருவியில் நீராட வந்த இளம் பெண் ஒருத்தி, அது நன்னன் அரண்மனைத் தோட்டத்துக்காய் என அறியாது, தின்று விட்டாள். அக்குற்றத்திற்காக, நன்னன் அப் பெண்ணைக் கொல்லத் துணிந்தான். அப் பெண்ணின் பெற்றோர் அப்பெண்ணின் உயிருக்கு ஈடாக'' அவள் நிறை பொன்னாலாய பாவையும்,எண்பத்தொரு யானை

களையும் தர'' முன் வந்தும். அதை ஏற்றுக் கொள்ளாது 'பெண் கொலை புரிந்த நன்னன், என்ற பழியை ஏற்றான்.146 அப்படு கொலைக்குப் பழி வாங்கத் துணிந்த கோசர் எனும் கூட்டத்தார், அவன் நாட்டில் புகுந்து அம்மாவினை வெட்டித் துண்டுகளாக்கித் தம் ஊர்க்குக் கொண்டு சென்றனர். 147

''கோசர். தம் முயற்சிக்குத் துணையாக அகுதை யென்ற தலைவனை நாடினர். வள்ளலான அகுதையை, அகவன் மகளிர்க்குப் பெரும்பிடிகளைப் பரிசிலாகத் தரும்படி செய்தனர். அப் பிடிகளை அம்மகளிரைக் கொண்டு நன்னன் தோட்டத்து மாமரத்தில் கட்டச் செய்தனர்.

அப்பிடிகள் மண்ணைப் பறித்த நிலையில் அம்மா மரம் வேரோடு ஆற்றிற் சாய்ந்தது. ஒரு காய் தின்ற தப்பிற்கு ஒரு மகளைக் கொலை செய்த நன்னன், மரமே யில்லையாகச் செய்த இவ் வகவன் மகளிரை என் செய்வன் என்பது துணிய இச் சூழ்ச்சி செய்தனர்''148 என்ற ஒரு கருத்தும் கூறப்படுகிறது. அது வரலாற் றுண்மை உடையதன்று.

பாழிப் பெரு நகரும், பாரமும், பகைவர் கைப் பட்டமையால், நன்னன், கடம்பின் பெருவாயில் என்று அழைக்கப் பெறும், வாகைப் பெருந்துறை சென்று ஆளத் தொடங்கினான். சேர நாட்டின் ஒரு பகுதியான, வாகைப் பெருந்துறையை மீட்க இருமுறை படை கொண்டு வந்த சேர வேந்தனை வெற்றி கொண்டு பெருந்துறையைக் காத்தான்.149

சேர நாட்டு அரியணையில் களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல் அமர்ந்த பின், இளஞ்சேரல் இரும்

பொறையோடு இணைந்து பெருந்துறையை முற்றுகை யிட்டான். நன்னன் கடும் போர் ஆற்றினான. நார் முடியின் வாட் புண் பெற்று உயிரிழந்தான். கடம்பின் பெரு வாயில் திறந்து விட்டது. வாகை வெட்டி வீழ்த்தப்பட்டது. வாகைப் பெருந்துறை சேரர் கைப் பட்டது.150

பெண் கொலை புரிந்து பழியுடையவனாக தூற்றப் பட்ட நன்னன் பரிசிலரைப் புரக்கும் பேரன்புடைய வனாகவும், களிறு பல வழங்கும் கொடை வள்ளலாக வும் விளங்கினான்.151 அவன் பேராண்மையும், பெருங் கொடையும் கண்டு அவன் பால் பேரன்பு கொண்ட மக்கள் அவன் பிறந்த நாளை விழாவாகக் கொண்டாடினர்.152

## 59. நாஞ்சிற் பொருநன்

பொதியின் மலைத் தொடர்களுள் ஒன்றாக அமைந்தது, நாஞ்சில்மலை அம் மலையைச் சூழ இருந்த நாடும் நாஞ்சில் எனும் பெயரே கொண்டது. நல்ல வளஞ் செறிந்த நாஞ்சில் நாட்டை ஆண்டிருந்த வில் வீரன் நாஞ்சிற் பொருநன்153 அவன் நாஞ்சில் வள்ளுவன் எனவும் அழைக்கப்பட்டான். நாஞ்சிற் பொருநன், பாண்டியர் படைத் தலைவனாய்ப் பணி யாற்றும் பெருமையுடையோனாவன். அப் பாண்டியன் பொருட்டுத் தன் உயிரையும் இழக்கத் துணிவன்.154 போரில் புறங்காட்டா உயர்வுடையோர் வழி வந்த நாஞ்சிற் பொருநன், பகைவர்க்கு அணுகற்கு அரியனாகவும். நட்புடையார்க்கு உற்றுழி உதவும் உரவோனாகவும் விளங்கினான். வரையாது வழங்கிய 'ள்ளலாக வாழ்ந்தான்.155

ஒரு சிறைப் பெரியனார், கருவூர்க் கதப்பிள்ளை, ஔவையார், மருதன் இளநாகனார் முதலாய புலவர் பெருமக்கள் அவன் வள்ளல் தன்மையைப் பாடிப் பெருமை செய்துள்ளனர். தன்னைப் புகழ்ந்து பாடிய ஔவையார்க்கு, அவர் அருமை யுணர்ந்து, தன் பெருமை தோன்ற, பெரிய யானை ஒன்றைப் பரிசாக அளித்து மகிழ்ந்தான்.[156]

## 60. நாலை கிழவன் நாகன்

பாண்டிய நாட்டு நாலை எனும் நகர்க்குத் தலைவனாக விளங்கியவன் நாகன். இன்று அருப்புக் கோட்டைக்கருகே நாலூர் என வழங்கும் அந்நகர்த் தலைவனாக விளங்கிய நாலை கிழவன் நாகன் பெருவீரன். அறிவும் ஆற்றலும் ஒருங்கே வாய்ந்த நாகனின் திறன் அறிந்த, பாண்டிய அரசன், 'மண் பல தந்த திருவீழ் நுண்பூட் பாண்டியன்' என்பான் நாகனைத் தன் படைத் தலைவனாக்கினான். (அப்பாண்டியன் நிலந்தரு திருவின் பாண்டியனாதலும் கூடும் என எண்ணுவாரும் உளர்)

ஆற்றல் பல பெற்ற நாகன், பரிசிலர் தம் பசித் துயர் போக்கும் பேருள்ளம் உடையவனாகவும் விளங்கினான்.[157]

## 61. நெடுமிடல்

நெடுமிடல் அஞ்சி எனப் பெயர் பெற்றவன். சேரமான் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலோடு, போரிட்டு வாழ்விழந்தவன்.[158]

## 62. நெடுவேளாதன்

சேரரோடு ஏதோ ஒரு வகையில் தொடர்புடையவன். ஆதன் என்ற சேரர் குடிப்பெயர் பெற்றவன். வேள் குடியில் வந்தவனாக இருக்கக் கூடும். நெல் நிறைந்த வயல்களையும், மலர்ச் சோலைகளையும், பொன் கொழிக்கும் தெருக்களையும் கொண்ட போந்தை எனும் நகரத்தின் தலைவனாக விளங்கியவன் நெடு வேளாதன் ஆவன். *159*

## 63. நெடுவேளாவி

ஆவியர் குடித் தலைவன். யானைகள் நிறைந்த பொதினி மலைக்குரிமையுடையவன். பொன்வளம் செறிந்த பொதினி நகர்த் தலைவன். வேள் குடியில் வந்தவனாக இருக்கக்கூடும். முருகனைப் போன்ற வலிமையுடையான். மழவரை வென்று புகழ்க் கொண்டவன். *160*

## 64. பண்ணி

இன்று கோடைக் கானல் என வழங்கப் பெறும் கோடைப் பொருப்பு எனப் பெயர் பூண்ட மலைச்சாரலில் கடியம் என்ற பகுதியின் தலைவனாக விளங்கியவன் பண்ணி. கோடைப் பொருநன் எனவும் அழைக்கப் பெற்றவன். வில்; அம்பு கொண்டுவேட்டையாடுவதிலும், காட்டு யானைகளைக் கைப்பற்றி வருவதிலும் வல்ல

வனாய் விளங்கியதால், வேட்டுவன், நெடு வேட்டுவன், கடிய நெடு வேட்டுவன் என்றெல்லாம் சிறப்புப் பெயர் பல பெற்றவன்[161]

கைப்பற்றிய காட்டு யானைகளுக்கு மொழி அறிவித்துப் பழக்க வல்ல திறமை கொண்ட பண்ணி, பாண்டியர் படையில் பணியாற்றியவன். பரிசிலர் தமக்கு வரையாது வழங்கும் வள்ளலாகவும் விளங்கியவன். புலவர் பெருந்தலைச் சாத்தனாரால் பாராட்டப் பெறும். பெருமை படைத்தவன்.[162]

## 65. பழையன் மாறன்

கள்ளக் குறிச்சியை அடுத்த மோகூர் தலைவன். மோகூர் மன்னன் என அழைக்கப் பெற்றவன். மாறன் என்ற பாண்டியர்க்குரிய பெயரையும், அவருடைய வேம்பினையேத் தன் காவல் மரமாகவும் கொண்டு, பாண்டியர் படைத் தலைவனாக விளங்கியவன். பாண்டியன் நெடுஞ்செழியனுடைய படையணியில் இருந்த கோசர் இன வழி வந்த வீரர்கட்குத் தலைவனாக விளங்கிய மாறன் என புலவர் மாங்குடி மருதனாரால் புகழ்ப்பட்டவன்.[163]

சோழன் கிள்ளி வளவன், கூடல் மாநகரைக் கைப் பற்ற முற்றுகையிட்ட போது, பழையன் தன் களிற்றுப் படையோடு சோழனை எதிர்த்துப் போரிட்டு வெற்றி பெற்றான். சோழனுக்குரியகளிறு களையும் குதிரை களையும் கைப்பற்றினான். சோழனுக்குரிய பல ஊர் களையும் கைப்பற்றிக் கொண்டான்.[164]

பழையனின் மோகூரைக் கைப்பற்றக் கருதி, அறுகை என்பான் படையெடுத்து வந்தான், அறுகையை வென்று துரத்தினான் பழையன். சேரன் செங்குட்டுவனின் நண்பனான அறுகை சேரநாடு சென்று தலை மறைந்து வாழலாயினன். நண்பனுக்கு உண்டான இழிவிற்குப் பழி தீர்க்க சேர மன்னன். மோகூரைத் தாக்கினான். வேளிர், வேந்தர் சிலர் துணை பெற்று பழையன் சேரனோடு போரிட்டான். படைவலி இழந்து தோற்றான். அவனுடைய காவல் மரமான வேம்பு, சேரனால் வெட்டி வீழ்த்தப் பெற்றது. அதைச் சிறுசிறு துண்டுகளாக்கி வீரமுரசு செய்வதற் கென சேரனாடு கொண்டு சென்றான் சேரவேந்தன்.165

வடநாட்டு மௌரியப் பேரரசுப் படையொன்று. தமிழகத்தைத் தன்னடிப்படுத்தும் நோக்குடன், தென்னாடு நோக்கி வரலாயிற்று. அவர் தம் நெடிய தேர்ப் படைக்கு, வடவெல்லையில் வாழ்ந்த வடுகர் துணை புரிந்தனர். வந்த பெரும் படை பழையன் காக்கும் மோகூரை முற்றுகையிட்டது. மோகூர் பழையனுக்குத் துணையாகப் பாண்டியன் தன் படையை அனுப்பினான். பாண்டியர் படையிலிருந்த பேராண்மையுடைய கோசர் துணையோடு பழையன், மோரியர் தம் தேர்ப்படையை வென்று துரத்தினான். வெற்றி வீரனாய் புகழ்பெற்றான்.166

## 66. பாணன்

தமிழகத்தின் வடவெல்லைப் பகுதியில் வாழ்ந் திருந்த தலைவன். பகைவரை வென்று அவர் தம் ஆனிரைகளைக் கவர்ந்து வருவதில் வல்லவன். ஆற்றல் வாய்ந்த வேற்படையுடையவன்[167] மற்போர் புரிவதில்

வல்ல மல்லன். தன் ஆற்றலைக் காட்ட, வாய்ப்பை எதிர் நோக்கி, சேரர் படையில் பணியாற்றிய கட்டி என்பானின் துணை நாடி நின்றான். சேரர் படைத் தலைவனான கணையன் என்பான் ஆதரவில் மற்றொரு ஆற்றல் மிக்க வட புலத்து மல்லனான ஆரியப் பொருநன் வாழ்ந்திருந்தான். பாணன் ஆரியப் பொருநனோடு மற்போர் புரிய எண்ணினான். மற்போரில் ஆரியப் பொருநனை, தோள்களை முறித்துக் கொன்று வெற்றி பெற்றான் பாணன்[168]

பாணனின் ஆற்றல் கண்டு உவகை கொண்ட கட்டி, அவனோடு உறையூர் சென்றான். உறையூரை ஆண்டிருந்த தித்தன் வெளியன் என்பானை வென்று ஆட்சியைக் கைப்பற்ற கட்டி திட்டமிட்டான். ஆனால் உறையூர், நாளவையில் தித்தன் வெளியனின் ஆற்றலைப் புகழ்ந்து பாணரும், மக்களும் கூறும் மொழி கேட்டு, அஞ்சி கட்டி, பாணனோடு உறையூரை விட்டே ஓடி மறைந்தான்[169].

## 67. பிடவூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன்

சோழ நாட்டில், உறையூர்க்குக் கீழ் பால் அமைந்த பிடவூர், வளஞ்செறிந்த வயலகள் சூழப் பெற்றது.[170] அவ்வூரில் மாசாத்தனார் கோயில் ஒன்றும் உள்ளது. அச சாத்தனார் பெயரே பிடவூர் தலைவன் மகனுக்கும் பெயராயிற்று. வேளாளர் வழி வந்தோன்.

பிடவூர் பெருஞ்சாத்தன் புலவர் போற்றும் வள்ளலாக வாழ்ந்தான். பெரும் புலவர் நககீரர், அவன் வள்ளல் தன்மையைப் பாராட்டி, அவனை “அறப்பெயர்ச் சாத்தன்” என பெயரிட்டு சிறப்பித்துள்ளார்.[171]

# 68. பிட்டங் கொற்றன்

சேரர் படைத் தலைவனக விளங்கிய பெருவீரன். சேர நாட்டு குதிரைமலைப் பகுதியின் தலைவன்[172] பகைவர் படைகளைத் தான் ஒருவனாக நின்று தடுத்து அழிக்கும் ஆற்றல் மிக்கவன். கோசர் போன்ற படை வீரர், படைப் பயிற்சி பெற எறியும் படைக்கலன்களை இலக்காக ஏற்று நிற்கும் முருக்க மரம் போல, பிட்டன் படைவர் படைக்கலங்களை உடலில் ஏற்று நிற்கும் பெருவன்மையுடையவன்'[173] சம்மட்டி அடிகளைத் தாங்கி நிலைகுலையா விளங்கும் கொல்லன் உலைக் களத்து பட்டடைக் கல்போல, பகைவர் படைத்தாக்கு தலைத் தாங்கி நிற்கும் திண்ணியன் பிட்டங் கொற்றன்[174]

பேராற்றல் பெற்றுத் திகழ்ந்த பிட்டன் பெருங் கொடை வள்ளலாகவும் விளங்கினான். பரிசிலர்க்கு நெல்லும் மணியும். யானைகளையும் பசுக்களையும் வாரி வழங்கினான்.[175] அவன் வள்ளல் தன்மை யில் தோய்வு ஏற்படா வண்ணம் பிட்டனின் அரசனான சேரவேந்தனும் துணைநின்றான்.[176] பிட்டனைப் போலவே, அவன் நாட்டுமக்களும் பெருங் கொடை வள்ளல்களாய் வாழ்ந்தனர்.[177]

பேராண்மையாளனும், பெருங்கொடையாளனுமாய் விளங்கிய பிட்டங் கொற்றன், துயர் அறியாப் பெரு வாழ்வு பெற்று வாழ வேண்டுமென வாழ்த்தி அவன் புகழ் பாடியுள்ளனர், காவிரிப் பூம் பட்டினத்துக் காரிக் கண்ணனார்,[178] ஆருலவிய நாட்டி ஆலம் பேரி சாத்தனார்,[179] முதலாய புலவர் பெருமக்கள்.

## 69. பிண்டன்

குறும்பர் குடித் தலைவருள் ஒருவன். பாழி நகர் அரசனான நன்னன் போன்ற அரசர்க்கும், அவர் நாட்டு குடிகளுக்கும் கேடு விளைவித்து வாழ்ந்தவன். அவன் திறன் அழிக்க நன்னன் பெரும்படை கொண்டு சென்று, தன் வேற்படை வலிமையால் பிண்டனின் ஆற்றலை அழித்துப் புகழ் பெற்றான்.[180]

## 70. புல்லி

தமிழ் நாட்டின் வடவெல்லையில், வேங்கட மலையையும் அதைச் சூழ்ந்த பகுதியையும் ஆண்ட தலைவன் புல்லி வேங்கட மலைக்கு வடக்கே வாழ்ந்த வடுகு மொழி பேசிய வடுகர் தாக்குதனின்றும் தமிழகத்தைக் காத்து நின்றவன்[181] கள்வர் இனத் தலைவன்,[182] கள்வர் இனம், களப்பாளர் இனத்தையே குறிக்கும் என்பர் சிலர். தென்னவர் எனச் சிறப்பிக்கப் படும் பாண்டியர் கள்வர் தலைவராவர் எனவும், பாண்டியர் தம் படையணிக்குத் தேவையான யானை களை கள்வர் கோமான் புல்லியின் வேங்கடத்தினின்றே பெற்றனர் எனவும், கூறப்படுவதால் [183] புல்லி, யாதோ ஒரு வகையால். பாண்டியர் குடியோடு தொடர் புடையனாதல் வேண்டும் எனக் கொள்ளலாம்.

வேழங்கள் மலிந்த வேங்கட நாடாண்ட புல்லி நாளவைக்கண் தன்னைப் பாடி வரும் பரிசிலர்க்கு யானைத் தந்தங்களைப் பரிசிலாக அளிப்பன்.[184] அவன் நாட்டு ஆயர், தம் நாடு நோக்கி வருவாரை விருந் தேற்றுப் போற்றும் அன்புடையராக விளங்கினர்.[185]

## 71 புன்றுறை

சேர வேந்தன் கணைக்கால் இரும்பொறையின் படைத்தலைவருள் ஒருவன். கழுமலம் எனும் இடத்தே சேரமன்னனுக்கும் சோழ வேந்தனுக்கும் இடையே நடந்த பெரும் போரில், சோழர் படைத் தலைவன் பழையன் என்பானோடு போரிட்டு உயிர் துறந்தவன்.[186]

## 72. பொகுட்டெழுனி

தகடூர் ஆண்ட அதியர் மரபினன்[187] "நெல்லி அமிழ்து விளை தீங்கனி ஔவைக் கீந்த" அருங் கொடை வள்ளல் அதியமான் நெடுமான் அஞ்சியின் அருமை மகன். பேராற்றல் பெற்றவன். பகைவர் நாட்டை வென்று, பகை வீரர்களின் குருதியால் ஈரம் பட்ட நிலத்தை, கழுதை ஏர் பூட்டி உழுது வெள்ளை வரகும் கொள்ளும் விதைத்துப் பாழ் நிலமாக்கும் போர் வேட்கை கொண்டவன்[188]

அதியமான் நெடுமான் அஞ்சியின் மனறவால் நிலை குலைந்து போன நாட்டை, நிலை பெறச் செய்து புகழ்பட ஆண்டான்.[189] தந்தையைப் போலவே, வள்ளலாக விளங்கி, பரிசிலர்க்கு வறுமை நீங்க பெரும் பொருள் அளித்தவன். ஔவையாரால் பாராட்டப் பெற்ற பெருமைக் குரியவன்.

## 73. பொறையாற்றுக் கிழான் பெரியன்

சோழ நாட்டின், கடற்கரையை யடுத்த நெய்தல் வளம் நிறை நல்லூர்களுள் ஒன்று பொறையாறு, அப்பொறையாறு நகர்த்தலைவனாக விளங்கியவன்

பெரியன்.190 எப்போதும் இரவலர் சூழ பெருங் கொடை வள்ளலாய் வாழ்ந்தவன். தான் வாழும்நாடு வறுமை கொள்ளுந் தோறும்,புலவர் கல்லாடனார் பொறையாறு போந்து பெரியன்அரவணைப்பில் வாழ்வார். இரவலர் இன்னல் தீர்க்கும் அவன் கொடைவளம் பெருக அவன் வயல் வளம் 'வேலியாயிரம் விளைக' என புலவர்கள் வாழ்த்தப் பெருவாழ்வு வாழ்ந்தான்.191

## 74. போரூர் கிழவன் பழையன்

சோணாட்டில், காவிரிக் கரையில் அமைந்த பெருவளம் பெற்ற ஊர்களுள் ஒன்று போஓர். போரூர் என வழங்கும் அவ்வூர்த் தலைவனாக விளங்கியவன் பழையன் என்பான்192 விற்படை, வேற்படை தேர்ந்த பெருவீரன் இலக்கு தப்பாமல் வேலெறிவதிலும் மாரி போலஅம்பு சொறிவதிலும்ஆற்றல் பெற்றவன். சோழன் பெரும்பூட் சென்னியின் படைத் தலைவனாக விளங்கினான்.193

சோழ மன்னனான செங்கணானுக்கும், சேர அரசன் சேரமான் கணைக்கால் இரும்பொறைக்கும் பகை மூண்டது. கழுமலம் என்ற இடத்தே பெரும் போர் மூண்டது. சேரன் படையில் படைத் தலைமை ஏற்று நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்றுறை ஆகிய ஆற்றல் மிக்க வீரர் அறுவர் போரிட்டனர். சோழர் படைக்குப் பழையன் தலைமை தாங்கினான். பேராற்றல் காட்டிப் போரிட்டான். ஒரே பகலில் சேரர் படைத்தலைவர் அறுவரையும் வென்று அழித்தான். சேரர் படையை புறங்காட்டி ஓடச் செய்தான். வெற்றி பெரும் நிலையில் மார்பில் அம்பு தைக்க விழுப்புண் பெற்று வீரமரணம் அடைந்தான்.

படைத் தலைவன் பழையன் பட்டது கேட்டுப் பொங்கி எழுந்தான் சோழ மன்னன். பழையனைக் கொன்றவரைப். பழி வாங்கக் களம் புகுந்தான். சேரமான் கணைக்கால் இரும்பொறையைப் போரில் வென்று. சிறைபிடித்துக் கொண்டு வந்து குடவாயிற் கோட்டத்தில் சிறை வைத்து பழி துடைத்தான்[194]

## 75. மத்தி

காவிரி கடலோடு கலக்குமிடத்தே அமைந்த கழார் என்ற நகரத்தின் தலைவன் மத்தி பரதவர் கோமான்[195] சோழர் படை தலைவருள் ஒருவன். சோழ அரசன் யானை வேட்டைக்குச் சென்றபோது அவனுக்குத் துணை புரிய மறுத்தான், எழினி என்பான். சினங் கொண்ட சோழனின் ஏவலால், படை கொண்டு சென்ற மத்தி, அவ்வெழினியை வென்றான். அவன் பல்லைப் பறித்து வெண்மணி வாயிற் கதவில் பதித்தான். அவ்வெற்றிக்கு அறிகுறியாக வெண்மணியில் உண்ணு நீர்த் துறையொன்றை அமைத்தான்[196] மத்தியின் பெருமையினையும், வெற்றியினையும் ஓரம் போகியார், பரணர், மாமூலனார் ஆகிய புலவர்கள் பாராட்டி யுள்ளனர்.

## 76. மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணன்

திருக்கோவலூர் மலையமான் திருமுடிக்காரியின் மகனே திருக்கண்ணன் என்பாரும் உளர். சோழ அரசில் சிறந்து பணியாற்றியமையால் 'சோழிய ஏனாதி' என்ற பட்டத்தைப் பெற்றவன், சோழ அரசில் ஏற்பட்ட

அரசுரிமைப போரில், தாயத்தாரால் விரட்டப்பட்ட, அரியணைக்கு உரிய இளவரசன், திருக்கண்ணனிடம் அடைக்கலம் புகுந்தான். அச் சோழர் குல இளவலை கேடொன்றும் நேராவண்ணம் தன்னுடைய அரண் சூழ்ந்த முள்ளூர் மலையிடத்தே வைத்துக் காத்தான், திருக்கண்ணன். பகைவரை அழித்து, இளவரசனை சோணாட்டிற்கு அரசனாக்கினான். சோணாட்டு மக்கள் மனத்துயர் துடைத்தான். 'கடுமையான கோடையின் கொடுமையில் வருந்திய மக்களின் துயர் தீர்க்க வந்த பெருமழையைப் போல திருக்கண்ணன் துயர் துடைக்க வந்தான்' என புலவர் மாறோக்கத்து நப்பசலையார் அவன் சிறப்பைப் போற்றியுள்ளார்[197].

## 77. மல்லிகிழான் காரியாதி

மல்லி என்ற நாட்டின் தலைவன். மல்லிநாடு இன்றைய திருவில்லிப்புத்தூர் பகுதியைச் சார்ந்தது. மல்லிநாட்டுப்புத்நூர் என்ற சொல்லே மல்லிப்புத்தூர் எனவும். வில்லிப்புத்தூர் எனவும் மருவியிருக்கக்கூடும் என்பார் சிலர். கல்வெட்டுக்கள் திருவில்லிப்புத்தூரை மல்லி நாட்டு திருவில்லிப்புத்தூர் என்றே குறிப்பிடு கின்றன.

மல்லிநாடு அரண் மிகுந்த நாடு. காரியாதி சிறந்த கொடை வள்ளல் வருவோர் அனைவருக்கும் வெண் சோறு வழங்கி மகிழும் தன்மை கொண்டவன் என்பார் புலவர் ஆவூர் மூலங்கிழார்[198].

## 78. மாவன்

மையல் என்ற நகரத்துக் கோமான். நிலை பெற்ற வருவாயை உடையது அவ்வூர். பாண்டிய அரசன் ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியனின் துணைவர்களுள் ஒருவனாக விளங்கியவன்[199]

## 79. மிஞிலி

விற்படையும், தேர்ப்படையும் கொண்ட பெரு வீரன். வஞ்சினம் வழுவாது முடிக்கும் வன்மை யுடைவன். கொண்கான நாட்டு நன்னனின் பகைவனாக விளங்கியவன் மிஞிலி. 'வாய்மொழி மிஞிலி' என வரும் அடைமொழி கொண்டு அவன் கோசர் இனத்தவனா யிருக்கக் கூடும்' என்பார் சிலர். அது ஒன்றையே கொண்டு அவனைக் கோசன் எனக் கோடல் பொருந்தாது.

நன்னனுக்குரிய பாழி மீது போர் தொடுத்தான் மிஞிலி. மிஞிலியை எதிர்த்துப் போரிடத் தயங்கினான், நன்னன் அவனுக்குத் துணையாக; அவன் நண்பன் வாகைப் பெருந்துறைத் தலைவன் ஆய் எயினன், களம் புகுந்து மிஞிலியை எதிர்த்தான். ஆய் எயினனின் பேராற்றலை உணர்ந்தவன் மிஞிலி, ஆகவே பாழி நகர்க்கண் இருந்த பேயைப் பரவி "எயினனைக் கொன்று வென்று வருவனேல், வழங்குவேன் நினக்கும் பெரும் பலி" என வேண்டி, வணங்கிக் களம் புகுந்தான், என்பர் புலவர்.

கடும் போர் நிகழ்ந்தது, இறுதியில் நண்பன் நன்னனுக்குத் துணையாக வந்து போரிட்ட ஆய் எயினன் வீழ்ந்தான்[200] நன்னனுக்குரிய பாரம் என்ற ஊர் மிஞிலிக்கு உரிமையானது.[201]

## 80. முசுண்டை

வேம்பி எனும் நகர்த் தலைவன் முசுண்டை. வேற் படை வீரன். கொடை வள்ளலாய் வாழ்ந்தவன். பாடி வரும் பாணர்களுக்கு, அறுசுவை உணவளித்து, அவர் மகிழ, கொம்புகளில் பொன்னாலான பூண்களும். கழுத்தில் பொன்னரி மாலையும் கொண்ட காளைகள் பூட்டிய பெற்றேர்களை பரிசிலாக அளிப்பவன் எனப் புகழ் பெற்ற கொடை வளம் கொண்டவன்.[202]

## 81. மூடியன்

மூங்கில் நிறைந்த மலை நாட்டுத் தலைவன். மலை போல் உயர்ந்த யானைகளைக் கொண்ட படை யுடையவன் வாய்மை வழுவாது வாழ்ந்தவன்.[203]

## 82. மூவன்

நெய்தல் நிலத்தைச் சார்ந்த, [மருதவளம் நிறைந்த நாட்டுக்கு உரியவன் மூவன். வளம் நிறைந்த நாட்டைப் பெற்றிருந்தும், பரிசில் வேண்டி வருவார்க்கு வழங்கி வாழும் மனமில்லாதவன். அவன் பால் பரிசில் பெறுவான் வேண்டிச் சென்ற புலவர் பெருந்தலைச் சாத்தனார் தம் பெருமையறியாது அவர்க்கு பரிசில் அளிக்காது அவரை மனம் வருந்தச் செய்தவன்.[204]

இவனையன்றி, புலவர்பொய்கையார் பாடல் வழி, மற்றுமொரு மூவன் என்பானை அறிகிறோம். அம் மூவன் பொறையன் என்ற சேர மன்னனுக்குப் பகை வனாக விளங்கியவன். பொறையன் அந்த மூவனைப்

போரில் வென்றுஅவன் பல்லைப் பறித்துக் கொணர்ந்து தன் தொண்டி நகர் வாயிற்கதவில் வைத்துப் பொறித் தான் என்பர்.205

மூவன் என்ற பெயருடைய இவ்விருவரும் வாழ்ந்த நாடு நெய்தல் நிலம் என்பதாலும், இருவரும் பண்பு நலம் அற்றவர்களாக புலவர்களால் காட்டப்பட்டுள்ள தாலும், இருவரும் ஒருவராகவே இருக்கக் கூடுமோ என்பதை ஆராய்ச்சியாளர் ஆராய்தல் வேண்டும்,

## 83. வண்டன்

கொடை வள்ளலாய், புலவர்கள் போற்ற வாழ்ந்தவன். ''வண்டன் அனைய'' என, வள்ளல் தன்மைக்கு ஒரு எடுத்துக் காட்டாக புலவர் காப்பியாற்றுக் காப்பியனாரால் காட்டப் பெறும் பெருமை பெற்றவன்206

## 84. வல்லங்கிழான்

சோணாட்டில், வல்லம் என்ற நகரின் காவல் தலை வனாக விளங்கியவன். எல்லோர்க்கும் நல்லவனாய் நாடாண்ட புகழ் உடையோன். பேராண்மை கொண்டவன். பேரரணும் பெரு வளமும் படைத்த வல்லம் நகரைக் கைப்பற்ற வந்த ஆரியப் படையினை வென்று அழித்த வீரன் வல்லங் கிழான்.207

## 85. வல்லார் கிழான் பண்ணன்

விளாமரங்கள் நிறைந்த, சுற்றிலும் காடுகளால் சூழப்பெற்ற வல்லார் எனும் ஊரின் தலைவன். பண்ணன் எனும் பெயருடையவன். அம்பேந்திய வீரர் நின்று காக்கும் அரிய அரண்களை உடையது வல்லார்

அதன் தலைவன் வாட்போரில் வல்லவன். கொடை உள்ளமும் பெற்றவன். பகைவரை அழித்துப் பெறும் பொருளையெல்லாம் பண்ணன், தன்னைப் பாடி வரும் பரிசிலர்க்கே அளிக்கும்அருள் உள்ளம் பெற்றவன்' என புலவர், சோணாட்டு முகையலூர்ச் சிறுகருந்தும் பியார் என்பார் பண்ணன் சிறப்பைப் போற்றியுள்ளார்.[208]

## 86. வாணன்

வாணன் என்ற பெயருடையார் இருவர் பற்றிய குறிப்புக்கள் சங்க இலக்கியப் பாடல் வரிகளில் காணக் கிடைக்கின்றன. ஒருவன், பாண்டி நாட்டில், நெய்தல் நிலத்தைச் சார்ந்த மருத நிலத்து ஊரான சிறுகுடி எனும் பெயருடைய ஊரில் வாழ்ந்தவன்.[209] பாண்டியன் நெடுஞ்செழியன் பெயரால் அமைந்த பெருங்குளம் ஒன்று அமையப் பெற்ற வளம் கொண்ட ஊரை உடையான், வற்றாப் பெருஞ்செல்வமுடையான் என நக்கீரர் அவ் வாணனைப் பாராட்டியுள்ளார்[210]

மதுரைக் காஞ்சி ஆசிரியர். புலவர் மாங்குடிகிழார், தென்புலத்தைச் சார்ந்த வாணன் என்ற பெயருடையான் ஒருவன் சேர்த்து வைத்துள்ள பெருஞ் செல்வத்தைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்[211] அதற்கு உரையெழுதிய நச்சினார்க்கினியனாரும், "தென்திசை நிலத்தின் மலைகள் எல்லாம் நிறையும் படி வாணன் என்னும் சூரன் வைத்த சீரிய பொருட்டிரள்" என்றே பொருள் கூறியுள்ளார். இவற்றை நோக்க, வாணன் என்னும் பெயருடையார் இருவரும் வேறு வேறானவர் அல்லர், ஒருவரே எனக் கோடல் பொருந்தும்.

## 87. விச்சிக்கோன்

விச்சியர் குடியில் வந்தோன், வீச்சிமலையைத் தன்னகத்தே கொண்ட நாட்டு அரசன் மூவேந்தரையும் வென்று தம் தலைநகரான குறும்பூரில் வெற்றி விழாக் கொண்டாடினர் விச்சியர் எனப் பரணர் பாராட்டி யுள்ளார்.212 விச்சியரை, சேரமன்னன் இளஞ்சேரல் இரும்பொறை வெற்றி கொண்டான் எனப் பதிற்றுப் பத்துப்பதிகம் கூறுகிறது.213

வாட்போரில் வல்லவன் விச்சிக்கோ. அவனுடைய இளவல், இளவிச்சிக்கோ என அழைக்கப்பட்டான். கடையெழு வள்ளல்களுள் ஒருவனாய கண்டீரக்கோப் பெருநள்ளியின் தம்பி இளங்கண்டீரக்கோவின் இணை பிரியா நண்பனாக விளங்கியவன்

குணத்தாலும், கொடையாலும், கொற்றத்தாலும் சிறந்து விளங்கியவன் விச்சிக்கோ. பாரி இறந்தானாக அவன் மகளிர்க்கு மணஞ் செய்து வைக்கும் பொறுப்பை யேற்ற கபிலர் அம் மகளிரை அழைத்துக் கொண்டு விச்சிக்கோன் அவைக்கு வந்தார். பாரி மகளிரை மணந்து கொள்ளும் மாண்புடையான் அவன் என்று எண்ணினார் கபிலர். ஆனால், மூவேந்தர்க்கும் பகைவனாய பாரியின் மகளிரை மணந்தால். அப் பேரரசர் பகைப்பர் என அஞ்சி விச்சிக்கோன் அம் மகளிரை மணக்க ஒப்பவில்லை.214

விச்சிக்கோன் புகழ்பட வாழ்ந்தனன் எனினும், அவன் பிறந்த விச்சியர் குடி புலவர் பழிக்கு ஆளான குடியாக விளங்கியது. பெண் கொலை புரிந்த நன்னன் வழி வந்த பழியுடையது அவ்விச்சியர் குடி. பரிசில் வேண்டி தம் மனை அடைந்து வாழ்த்தி நின்ற புலவர்க்கு, பரிசில் அளிக்காது வாயில் கதவை

அடைத்தான் விச்சியர் குடியில் வாழ்ந்த மன்னன் ஒருவன் என்ற வழக்குடையது அவன் குடி. அதனால் தான், விச்சிக்கோனின் தம்பி இளவிச்சிக்கோ தன் நண்பன் இளங்கண்டீரக்கோவுடன் ஒருங்கிருந்த போது ஆண்டு வந்த புலவர் பெருந்தலைச் சாத்தனார், இளங்கண்டீரக்கோவை மட்டும் அன்புடன் தழுவி, விச்சிக்கோன் இளவலைத் தழுவாதே சென்றார்.[215]

## 88. விரான்

வயல் வளம் நிறையப் பெற்ற இருப்பை என்ற ஊரின் தலைவன் விரான் என்பான். புதுக் கோட்டையைச் சார்ந்த விராலி மலை இவன் பெயரால் அழைக்கப் பெற்ற மலையாகவும், அம் மலையைச் சார்ந்துள்ள இருப்பையூர், இவன் ஆண்ட இருப்பை யாகவும் இருக்கக்கூடும் என்பது ஆராய்ச்சியாளர் கருத்து. நெல் வளம் செறிந்த இருப்பை ஆண்ட விரான் பெரு வீரனாக விளங்கினான். பகை கொண்டு படையோடு வருவாரை பாழாக்க வல்ல பெரு வலிவு கொண்டவன். பரிசில் வேண்டி வருவார்க்கு வரையாது வழங்கும் வள்ளலாகவும் விளங்கிப் புகழ் பெற்றவன். விரான்[216]

## 89. வெளிமான்

புலவர் போற்றும் பெருங்கொடை வள்ளலாக வாழ்ந்தவன் வெளிமான் உடல் தளர்ந்து உயிர் பிரியும், நிலையிலும், பரிசிலர்க்கு பொருள் ஈயும் உள்ளம் உடையவன். குமணனின் காலத்தில் வாழ்ந்திருந்தவன். வெளிமான் புகழ் கேட்டு அவனைப் பாடிப் பரிசில் பெற வந்தார் புலவர் பெருஞ்சித்திரனார். அக்காலை,

உடல் நலம் கெட்டிருந்த வெளிமான் உயிர் துறக்கும் நிலையை எய்தி விட்டான். அந்நிலையிலும் புலவரை அன்புடன் அழைத்து அவர் பாடலைக் கேட்டு மகிழ்ந்து, அங்கிருந்த தம்பி இளவெளிமான் என்பவனை அழைத்து புலவர்க்கு அவர் வேண்டும் பரிசில் அளித்து அனுப்புக எனப் பணித்தான். அந்நிலையிலேயே உயிர்துறந்தான். வெளிமான் மறைவு கேட்ட புலவரெல்லாம் வருந்தி வாடினர், அவன் புகழ் பாடினர்217

## 90. வேங்கை மார்பன்

பாண்டிய, நாட்டில் கானப்பேரெயில் என்ற அரண் அமைத்து ஆண்ட தலைவன் வேங்கை மார்பன். இன்று காளையார் கோயில் என வழங்குமிடத்தே, ஆழ்ந்த அகழியினையும், வானளாவிய நெடிய மதில்களையும அடர்ந்த காவற் காட்டினையும் அமைத்து அவன் உருவாக்கிய கானப் பேரெயில் பகைவர் பற்றற்கரிய பேரரணாய் அமைந்தது.

வேங்கை மார்பனின சிறப்பினைக் கண்டு மனம் பொறாத பாண்டிய மன்னன் உக்கிரப் பெருவழுதி பெரும் படையுடன் கானப் பேரெயிலை முற்றிகை யிட்டான். வேங்கை மார்பனை வென்றான். பற்றற்கரிய கானப் பேரெயிலைக் கைப்பற்றினான்: கானப் பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி எனும் சிறப் பினையும் பெற்றான். கொல்லன் உலைக்களத்தே சிவக்கக் காய்ந்த இரும்பு உண்ட நீரை மீண்டும் பெறல் இயலாது என வேங்கை மார்பன் மனம் வருந்தினான். 218

## சான்றெண் விளக்கம்

1. புறம்-347
2. அகம்-113
3. அகம்-76, 208
4. புறம்-233
5. புறம்-247
6. புறம்-233
7. அகம்-208
8. அகம்-113
9. குறுந்-298; அகம்-96
10. பதிற்று-11
11. அகம்-44
12. குறுந்-393; அகம்-162
13. அகம்-325
14. அகம்-162
15. அகம்-46, 325
16. குறுந்-393
17. அகம்-162, 325
18. புறம்-359
19. புறம்-71
20. புறம்-385
21. குறுந்-293
22. நற்-367
23. அகம்-271
24. புறம்-383
25. நற்-190; குறுந்-258
26. நற்-87
27. குறுந்-258

28. மேலது
29. நற்-87
30. நற்-190
31. பதிற்று-44
32. நற்-180; அகம்-45, 129, 145
33. அகம்-196, 262
34. அகம்-76, 222, 236, 376, 396
35. சிலம்பு-21; 11-15
36. ஐங்குறுநூறு
37. புறம்-71
38. அகம்-90, 220
39. அகம்-216
40. புறம்-389, 175
41. புறம்-71
42. சிறுபாண்-187-88; புறம்-80
43. அகம்-208
44. புறம்-251; குறுந்-393
45. குறுந்-393
46. அகம்-142, 148, 181, 208, 396
47. அகம்-208
48. அகம்-386
49. புறம்-71
50. அகம்-36
51. புறம்-201
52. புறம்-201, 202
53. புறம்-202
54. மேலது
55. பட்டின-282
56. புறம்-151
57. புறம்-165
58. புறம்-15
59. புறம்-162

60. புறம்-180
61. அகம்-253, 115
62. அகம்-36
63. புறம்-202, 24
64. அகம்-126
65. அகம்-115, 266
66. அகம்-266
67. புறம்-24, 233
68. அகம்-126
69. அகம்-266; புறம்-24
70. குறுந்-16: அகம்-115
71. புறம்-233
72. புறம்-234
73. அகம்-197
74. அகம்-211
75. அகம்-36
76. புறம்-366
77. அகம்-44
78. புறம்-157
79. புறம்-243
80. சிறுபாண்-116, 152-3, 160, 172-3, 187-8; புறம்-179, 376
81. புறம்-379
82. அகம்-44
83. குறுந்-11
84. அகம்-226
85. அகம்-44
86. அகம்-81
87. க. ஆ. அ, ஆண்டு-1932-33, எண்-176.
88. புறம்-384
89. புறம்-384, 381
90. மேலது
91. அகம்-365

92. பதிற்று-71
93. பதிற்று,88
94. அகம்-135
95. அகம்.195
96. நற்-391; அகம்-173; புறம்-154
97. புறம்-156
98. புறம்-155
99. புறம்-154
100. புறம்-166
101. அகம்- 177; புறம்-70
102. அகம்-54
103. புறம்-388
104. புறம்-173
105. குறுந்-258; நற்-87, 190
106. குறுந்-258
107. புறம்-394
108. புறம்-360
109. அகம்-227
110. புறம்-348; நற்-300
111. புறம்-399
112. அகம்-262, 196
113. அகம்-126, 45, 145
114. அகம்-221
115. அகம்-25, 322
116. அகம்-36
117. புலவர். கா. கோவிந்தன், சங்க கால அரசர் வரிசை-5, அகுதை முதலிய 44 பேர்கள் ''திதியன்,'' பக்கம் 109-119
118. அகம்-85
119. பெரும் பாண்-36-45
120. பெரும் பாண்-26-37
121. பெரும் பாண்-420
122. பெரும் பாண்-319

123. அகம்-340
124. அகம்-213; குறுந்-260; பெரும் பாண் 450-54
125. புறம்-95
126. மலைபடுகடாம்-94, 194
127. அகம்-258
128. அகம்-44
129. மதுரை-344-45
130. மலைபடு-474-6,554-5
131. மலைபடு-17, 19, 152-7, 162-6, 183-7, 492-97
132. மலைபடு-59,-634,-702,-845, 1634-,62
550-8, 60-61, 73-76
133. மலைபடு-86-89, 77-80
134. நற்-391: சிலம்பு-28: 114-15
அகம்-15, 17, 152, 173, 349, 356, 372
135. அகம்-258; 372
136. அகம்-258
137. அகம்-44
138. அகம்-199; பதிற்று-40 பதிகம்-4; பதிற்று-88
139. புறம்-151
140. பதிற்று-பதிகம் 9; குறுந் 328; புறம்-200
141. அகம்-173; 15, 142, 152
பதிற்று-40; நற்-270
142. அகம்-349
143. அகம்-152
144. நற்-270
145. அகம்-396, 208
146. குறுந்-292
147. குறுந்-73
148. குறுந்-73, 298
149. அகம்-392
150. அகம்-199, பதிற்று பதிகம்-4; பதிற்று-40, 88
151. அகம்-349, 152, 97
152. மதுரை-618-19

153. புறம்-137
154. புறம்-380, 139,
155. புறம்-129, 380, 137, 138
156. புறம்-140
157. புறம்-179
158. பதிற்று-32
159. புறம்-338
160. அகம்-1, 61
161. அகம்-13, 205
162. மேலது
163. மதுரை-771-6
164. அகம்-346
165. பதிற்று-44, 49; பதிகம்-5; சிலம்பு-27: 124 26
166. அகம்-251
167. அகம்-113, 325
168. அகம்-386
169. அகம்-226
170. புறம்-395
171. மேலது
172. அகம்-142
173. புறம்-169
174. புறம்-170
175. புறம்-171
176. புறம்-172
177. புறம்-168
178. புறம்-178
179. அகம்-142
180. அகம்-152
118. அகம்-195
182. அகம்-61
183. மாமூலனார் அகம்-342, 27
184. அகம்-83, 61
186. அகம்-44

187. புறம்-99, 390, 230 பதிற்று-78
188. புறம்-392
189. புறம்-102
190. நற்-131; அகம்-100
191. புறம்-391
192. அகம்-186
193. அகம்-326
194. குடவாயிற் கோட்டத்து கீரத்தனார் அகம்-44
நற்-10; களவழி-14
195. அகம்-6, 226; ஐங்குறு-61
196. அகம்-211
197. புறம்-174
198. புறம்-177
199. புறம்-71
200. அகம்-142, 148, 181, 208, 399
201. நற்-265
202. அகம்-249
203. நற்-390
204. புறம்-205
205. நற்-18
206. பதிற்று-31
207. அகம்-356, 336
208. புறம்-181
209. அகம்-204, 269; நற்-340
210. நற்-340
211. மதுரை 202-3
212. குறுந்-328
213. பதிற்று-பதிகம்-1
214. புறம்-200
215. புறம்-151
216. நற்-350, 260; ஐங்குறு-58
217. புறம்-237, 238
218. புறம்-21

# 7. பிற மரபினர்

சங்க காலத் தமிழகத்தில். முடியுடை மூவேந்தராய் பெரும் புகழ் கொண்டு பேரரசாண்ட சேர சோழ பாண்டிய மரபினரேயன்றி, குறுநில மன்னர்களாக, படைத்தலைவர்களாக, கொடை வள்ளல்களாக புகழ் பட விளங்கிய, வேறுசில மரபினரும் வாழ்ந்திருந்தனர் என்பதை சங்கத் தமிழ் இலக்கியங்கள் வழி அறி கிறோம். இம் மரபினரும். சங்க காலத் தமிழகத்தின் வரலாற்றோடு ஒன்றிப் போனவர்கள். இம் மரபினரில் சிலர் தமிழ் இனத்தைச் சார்ந்தவர்கள்; சிலர் வேற்று நிலத்திலிருந்து வந்தவர்கள்! தமிழ் இனத்தோடு ஒருங் கிணைந்து வாழ்ந்தவர்கள்; சங்ககாலத் தமிழகத்தின் அரசியல் நிலைக்கு, இம் மரபினர்தம் வாழ்வும் பெரிதும் காரணமாதலின், அம்மரபினர் குறித்து சங்கத் தமிழ் இலக்கியங்கள் சுட்டிக் காட்டும் வரலாற்றுக் குறிப்புக்களை தொகுத்துரைத்தலும், சங்க காலத் தமிழகத்தின் வரலாற்றினை அறிய பெருந்துணை புரிவதாகும் என்பது உறுதி.

## 1, கொங்கர்

சேரநாட்டின் கிழக்கெல்லை, சோழ நாட்டின் மேற் கெல்லை, பாண்டிய நாட்டின் வட மேற்கெல்லை ஆகிய வற்றிற்கு இடைப்பட்ட பகுதியில் வாழ்ந்த தமிழ்

மறவர் மரபினரே கொங்கர் ஆவர். கொங்கர் வாழ்ந்த நாடு கொங்கு நாடு என அழைக்கப் பெற்றது. இன்றைய கோவை, பெரியார் மாவட்டங்கள், சேலம் மாவட்டத்தின் தென்பகுதியும் கொண்டது கொங்கு நாடு.

கொங்கர் ஆனிரை போற்றும் அருந் தொழில் மேற் கொண்டு வாழ்ந்த மரபினர். அவ்வானிரைகட்கு நீரளித்து ஓம்புவான் வேண்டி ஆழ்ந்த பல கிணறுகளை ஆங்காங்கே தோண்டி வைப்பர்![1] ஆனிரைச் செல்வம் பேணிய கொங்கர் ஆற்றல் மிக்க வீரர்களாகவும் விளங்கினர். வாட்போரில் வல்லவர்கள், பகைவர் தம் பேரரண்களைப் பாழ் படுத்துமாறு, பெருங்கற்களை எறிய வல்ல 'கல்கால் கவணை' எனும் பொறிகளை பயன்படுத்தும் திறனுடையவர்.[2]

வீரம் மிக்க கொங்கர் மரபினரின் திறன் அடக்கவும், அவர் தம் கொங்கு நாட்டைக் கைப்பற்றவும் மூவேந்தரும் ஆர்வம் மிக்கவராயினர். சேர மன்னன் பல்யானைச் செல்கெழுகுட்டுவன் கொங்கரை வென்று கொங்கு நாட்டைத் தன்னாட்டோடு இணைத்துக் கொண்டான்[3] அதையடுத்து கொங்கு நாடு சேர நாட்டின் ஒரு பகுதியாகவே கருதப்பெறலாயிற்று, சேர மன்னர்களும் 'கொங்கர்கோ' எனும் சிறப்புப் பெயர் பெறலாயினர். சேரமன்னன் இளஞ்சேரல் இரும் பொறையை 'கொங்கர்கோ'' எனப் புலவர்கள் பாராட்டி யுள்ளனர்[4]

சோழ மன்னன் கிள்ளிவளவன் கொங்கரை வென்றான் என புலவர்கள் புகழ்ந்துரைத்துள்ளனர்[5] செங்கணான் எனவும், பெரும்பூட் சென்னி எனவும் அழைக்கப் பெறும் சோழ மன்னனின் படைத்தலை

வனான போரூர் பழையன் என்பான் கொங்கரை வென்று சோழர்க்கு புகழ் சேர்த்தான்.[6] கழுமலம் என்னும் இடத்திலே சோழன் செங்கணான் படைக்குத் தலைமை தாங்கிய பழையன், சோழரை எதிர்த்த சேரமான் கணைக்கால் இரும்பொறையையும், சேரர்க்குத் துணையாக வந்த கொங்கரையும். சேரர் படைத் தலைவர் அறுவரையும் வென்றான். இறுதியில் கொங்கர் படையால் களத்தில் மாண்டான். சோழன் செங்கணான் வீறு கொண்டு எழுந்து, படைத்தலைவன் பழையனைப் பாழ் செய்த அக் கொங்குப் படையையும், கொன்று குவித்து, சேரமான் கணைக்கால் இரும் பொறையையும் கையப்படுத்தி குடவாயிற் கோட்டத் தில் சிறைவைத்தான்

பாண்டிய நாட்டு எல்லையில் வாழ்ந்த கொங்கரால் பாண்டிய அரசுக்கு தீங்கு வரக்கூடுமென அஞ்சிய பாண்டியன், பசும் பூண் பாண்டியன் என அழைக்கப் பெறும் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ் செழியன், கொங்கரை அழிக்க, அவர் அண்மையில் இருந்த தன் படைத்தலைவன் அதியன் என்பானைப் போக்கினான், அதியன், கொங்கு நாட்டின் மீது படை கொண்டு சென்று, கொங்கரை வென்றான்.[8]

இவ்வாறு கொங்கரை வென்று விரட்டிய அதிகன் பின்னாளில் வாகை யெனும் இடத்தே நடந்த போரில் கொல்லப்பட்டான். அதை அறிந்த கொங்கர் உள்ளம் உவந்தனர்.[9]

குறுநில மன்னனாகவும், கடையெழு வள்ளல்களில் ஒருவனாகவும் விளங்கிய ஆய் அண்டிரன், கொங்கரை வன்று. அவர்கள் தம்முடைய படைக்கருவிகளை

களத்திலேயே போட்டு விட்டு, மேலைக் கடல் நோக்கி ஓடி ஒளியுமாறு துரத்தினான்.10

இவ்வாறு, வேந்தர் பலருடைய பகைக்கு ஆளாகி வருத்தப் பெற்றாலும், கொங்கர் இனம் அழிந்து விடாது தொடர்ந்து தமிழகத்தில் கொங்குவேளிர், கொங்குதேச ராசாக்கள் என்றெல்லாம் பெயர் பெற்று வாழ்ந்திருந்தது.

## 2. கோசர்

வடபுலத்தில், மௌரியப் பேரரசன் அசோகன் ஆட்சி செய்த காலத்தில், தென்னிந்தியாவில் அரசோச்சிய அரச இனங்கள் நான்கனுள் சத்ய புத்ரன் இனமும் ஒன்று. இச் சத்ய புத்ரரே, 'வாய்மொழி வழுவாதவர்' எனச் சங்க இலக்கியங்களில் போற்றப் படும்; கோசராவர்''11 என வரலாற்று நூலாசிரியர் கருதுகின்றனர்.

கோசர்கள் வாழ்ந்த வாழ்விடம் துளு நாடு என இலக்கியங்களால் அறிகிறோம்.12 கேரளநாட்டிற்கும், துளு நாட்டிற்கும் எல்லையாக அமைந்த சந்திரகிரி எனும் நாடே சத்யபுத்ரர் நாடு எனவும் வரலாற்று நூலாசிரியர் கூறுவர். அவர்கள் கொங்கிளங் கோசர் எனவும் அழைக்கப் பெறுவதால், கோசர் ஆட்சி கொங்கர் நாட்டிலும் செயல்பட்டிருந்திருக்கக் கூடும் என்பது புலனாகிறது.

தாயகமாம் துளு நாட்டை விட்டுக் கோசர் நாளடைவில் கிழக்கே சென்று வாழத் தொடங்கினர். கீழ்க் கடலை யொட்டி. ஆதனெழினி என்பான் ஆண்ட

செல்லூர் அல்லது செல்லீ என வழங்கப் பெறும் ஊர் இருந்தது. அச்செல்லூர்க்கு கிழக்கே அமைந்திருந்த நியமம் எனும் ஊரே கோசர்க்கு உரிய ஊராக இருந்தது.[13]

போர்ப் படை வீரராய் விளங்கிய கோசர், உழவுத் தொழிலையும் மேற்கொண்டிருந்தனர். கோசர் விளை நிலத்தில் அன்னி மிஞிலி என்பாளுடைய தந்தையின் பசு புகுந்து மேய்ந்து விட்டது. பெருஞ்சினம் கொண்ட கோசர், மிஞிலியின் தந்தை கண்களை அழித்து விட்டனர். கோசரின் கொடுஞ் செயல் கண்டு கடுஞ் சினம் கொண்ட மிஞிலி அவர்களைப் பழி வாங்க, அழுந்தூர்க்குடையோனாய திதியன் பால் சென்று உதவி கோரினாள். திதியன் தவறு செய்த கோசரை வென்று அழித்தான்.[14]

பாழி நகர்த் தலைவனான நன்னன், அவன் அரண்மனைத் தோட்டத்து மாங்காய் ஒன்று ஓடையில் மிதந்து வர அதை அறியாது தின்ற இளம் பெண்ணைக் கொன்று பழி சுமந்தான். அப்படுகொலைக்குக் காரண மாயிருந்த நன்னனின் காவல் மரமான மாமரத்தை வெட்டித் தம் நாட்டிற்குக் கொண்டு சென்று பழி தீர்த்தனர் கோசர்15

நன்னனின் துணைவனாக விளங்கியவன் ஆய் எயினன் என்பான். அவன் நன்னனுக்குரிய பாழியைக் கைப்பற்ற வந்த மிஞிலி என்பானோடு போரிட்டு மாண்டான். நண்பனான ஆய் எயினனுக்குத் துணையாக போர்க்களம் புகவோ, தன்பொருட்டு உயிர் துறந்த அவன் உரிமை மகளிர் துயர் துடைக்கவோ செய்யாது வாளாவிருந்தான் நன்னன். அம் மகளிர் துயர் கண்டு மனம் பொறாத கூடல் நகர்

தலைவனான அகுதை என்பான் அவர் துயர்களைய முன்வந்தான். அதனால் நன்னன் பகையினை ஏற்க வேண்டியவனாயினான். அகுதைக்குத் துணையாக நின்ற கோசர், அவனை, நன்னன் நெருங்காதவாறு காவல் செறிந்த இடத்தே வைத்துக் காத்தனர்.16

போர்த் திறன் கொண்ட கோசர், பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் படை வீரர்களாகப் பணி ஏற்றனர். அப்படைக்குத் தலைவனாய் விளங்கியவன் பழையன்மாறன் என்பான். பாண்டியர் தலை நகரான கூடல் மாநகரைக் கைப்பற்றச் சோழன் கிள்ளி வளவன் படையெடுத்த காலை, கோசர் பெரும்படையோடு பழையன் மாறன், கிள்ளி வளவனைப் புறங்கண்டான்.17

வடபுலத்துப் பேரரசான மௌரியப் பேரரசின் படையொன்று, தமிழகத்தைத் தன்னடிப்படுத்தும் நோக்குடன் தென்னாடு நோக்கி வந்தது. தமிழகத்தின் வடவெல்லையை அடுத்து வாழ்ந்த வடுகர் அம்மோரியர் தேர்ப்படைக்கு த்துணையாக நின்றனர். வந்த பெரும் படை பழையனுக்குரிய மோகூரை வளைத்துப் போரிட்டது. பாண்டியனின் கோசர் பெரும் படை மோகூர் பழையனுக்குத் துணையாகப் போரிட்டது. மோரியர் தம் பெரும் படையை வென்று துரத்தித் தமிழகத்தைக் காத்தது.18

இவ்வாறு பெரு வீரர்களாய் வாழ்ந்த கோசர், இடைவிடாப் போர்ப் பயிற்சி மேற்கொண்டு தம் திறனை வளர்த்தனர். படைக்கலம் பயிலும் இளங்கோசர் முருக்க மரத்தான் இயன்ற இலக்கு அமைத்து, குறி தப்பாது படைக்கலங்களை எறிந்து பயிற்சி பெற்றனர்.19

## 3. தொண்டையர்

காஞ்சி மாநகரைத் தலை நகராய்க் கொண்டு, அருவா, அருவா வடதலை நாடு, வேங்கட மலை உள்ளடக்கிய நாடான தொண்டை நாடு ஆண்ட மரபினர் தொண்டையர் என அழைக்கப் பெற்றனர்[20] வேங்கட மலையில் வேட்டையாடிப் பெற்ற வேழங் களைக் கொண்ட, "படையுடையவர், தேர்ப் படையும் கொண்டவர்.[21] பகைவர் தம் அரண்களை அழித்து அவர் தம் முடிகளையும் நாடுகளையும் கைப்பற்றி விழுமிய வாழ்வு வாழ்ந்தவர்.[22] தொண்டையர் மரபு, வட தமிழ் நிலப் பகுதியில் தோன்றியது, சோழ மன்னன் கரிகாற் பெருவளத்தான் காலத்திற்குப் பின்னரே இருந்திருக்க வேண்டும். தொண்டைர் மரபினரைப் பற்றியும், அம்மரபின் மன்னர்களான தொண்டைமான். திரையன் ஆகியோரைப் பற்றியும் தம்பாடல்களில் குறித்துள்ள புலவர்களான. தாயங் கண்ணனார். கல்லாடர், ஔவையார், காட்டூர்கிழார் மகனார் கண்ணனார், நக்கீரர் ஆகியோரெல்லாம் கரிகாற் பெருவளத்தான் காலத்திற்கு பிற்பட்டோ ராவர்என்பதுஇதை உறுதி செய்யும்.

## 4. பூழியர்

பூழி நாடு, செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலத்துள் ஒன்றாக விளங்கியது. அந்நிலத்திற்கு உரிய மரபினரே பூழியர் என்றழைக்கப்பட்டனர். ஆனிரை ஓம்பி வாழ்ந்தவர். பசுக்களையும் காளை களையும் மேய்க்கும் தொழிலை மேற்கொண்ட நல்லினத் தாயர்களாகவும், ஆடுகளை மேய்த்து வாழும் புல்லினத்

தூயர்களாகவும் பூழியர் விளங்கினர். அத் தொழிலோடு அமையாது, தம் நிரைகளைப் புல்நிறை நிலங்தேடி மேயகொண்டு செல்லும் போது காடுகளில் கற்களின் இடையே சிதறிக் கிடக்கும் ஒளி வீசும் மாணிக்கக் கற்களையும் திரட்டி வாழ்ந்தனர்.[23] காட்டு யானைகளைப் பிடிக்கும் தொழிலையும், அவற்றைப் பழக்கும் முறையினையும் அறிந்தவர் பூழியராவர்[24]

பூழி நாடு சேர நாட்டின் உள் நாடுகளில் ஒன்றாய் விளங்கியது. சேர மன்னர் பலர், 'பூழியர்கோ[25], 'பூழியர் பெருமகன்,[26] 'பூழியர் மெய்ம்மறை,[27] என சிறப்புப் பெயர்களைப் பெற்றிருந்தனர். இடையே பூழி நாடு நன்னன் கைப்பட்டு ஆளப்பட்டது. சேரமான் களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல்; நன்னனை வென்று, அவன் காவல் மரமான வாகை மரத்தினை வெட்டி வீழ்த்தி, பூழி நாட்டை மீட்டான்.[28]

## 5. மழவர்

சோணாட்டைச் சேர்ந்த மழ நாடு பகுதியில் வாழ்ந்த மரபினர் மழவர் ஆவர். மழநாடு மழகங்கம் எனவும் அழைக்கப்பட்டது. விரைந்து செல்லும் புரவிப் படை வீரர்களாக விளங்கியவர் மழவர்.[29] சிவந்த கண்களையும், சுருண்டு தொங்கும் தலை முடியையும் கொண்ட மழவர், தம் புரவிப் படை கொண்டு நெடுந் தூரம் சென்று ஆனிரைகளைக் கவர்ந்து வரும் களவு வாழ்க்கையினைக் கொண்டவர்களாக வாழ்ந்தனர்[30] ஆறலைத்து வாழும் கொடுமையாளராக விளங்கினர்[31]

தம் குலத்து இளைய வீரர்கட்கு விற்போர், வாட்போர், போன்றவற்றில் பயிற்சி அளித்து, அவர்கள்

திறனை அரங்கேற்ற பூந்தொடை விழா என்றபெயரில் ஆண்டுதோறும் விழா எடுத்தனர்.[32]

மழவர் தம் திறன் அறிந்து, அவர்களைத் தம் படையில் சேர்த்து படை வலிமை பெற்றனர் சேர மன்னர் பலர். 'மழவர் மெய்ம்மறை,[33] என்ற சிறப்புப் பெயரும் ஏற்றனர்.

சேரர் துணைவனாக விளங்கிய தகடூர் அதியமான் நெடுமான் அஞ்சியும் மழவர் படையை தன் பணியில் கொண்டிருந்தான். மழவர் பெருமகன் என்ற பெருமையைப் பெற்றவனாக விளங்கினான்[34] கொல்லி மலைத் தலைவனான வல்வில் ஓரியும் மழவர் துணை கொண்டு'மழவர் பெருமகன் மாவள் ஓரி'[35]எனப் புகழப் பட்டான்.

ஆனிரைக் கவருபவராகவும், ஆறலைக் கள்வராகவும் தம் புரவிப் படைகொண்டு, அண்டை நாடுகளுக்குத் தொல்லை கொடுத்து வந்த மழவர்களை, பொதினி மலைத்தலைவனான நெடு வேளாவி என்பான் வென்று துரத்தினான்,[36] வேங்கடத்து மன்னனான புல்லி என்பான் படை கொண்டு சென்று மழவர் நாட்டையே வென்று, மழவர்களை அடக்கி ஆண்டான்.[37]

## 9, வடுகர்

தமிழகத்தின் வட வெல்லைக் கப்பால், புல்லி ஆண்ட வேங்கட மலைக்கு அப்பால் அமைந்திருந்தது வடுகர் தேயம்.[38] வடுகர் வேற்றுமொழிமரபினர். வடுகர் நாட்டில், தமிழகத்து எல்லையையொட்டி அமைந் திருந்தது, கட்டி என்பவனால் ஆளப்பட்ட நன்னாடு,[39]

வடுகர், பம்பை எனும் பறையொலிக்க; வன்மை மிக்க நாய்கள் உடன்வர, மயிற்தோகை கட்டப்பட்ட வில்லோடும், அம்போடும் திரிவர். அண்டை நாடுகளுட் புகுந்து, காவற் படையினரை அழித்து ஆனிரைகளைக் கவர்ந்து வருவர்.[40]

தமிழகத்தை வெல்ல எண்ணிப் போந்த வடபுலத்து மோரியர் படைக்குத் துணை நின்றனர். வடுகர் மோரியர் படைக்குத் தூசிப் படையாய் வந்த வடுகர் படையும் மோகூர் களத்தில் தோற்று அழிந்தது.[41]

நன்னன் ஆண்டிருந்த பாழி நகரையும் கைப்பற்றி சில காலம் வடுகர் ஆண்டிருந்தனர். அது கண்ட சோழன் இளம் பெருஞ் சென்னி என்பான், தன் யானைப் படைகொண்டு பாழியின் அரண் அழித்தான். வடுகரை வென்று துரத்தி பாழியைக் கைப்பற்றினான்.[42]

## 7. வேளிர்

சங்க கால தமிழகத்தில் வாழ்ந்த தொன்மைமிகு குடிகளுள் ஒன்று வேளிர் குடி. வேளிர் மரபு தோற்றம் குறித்து பல கருத்துக்களும், கதைகளும் நிலவுகின்றன. அகத்தியருடைய துணைவர்களாக தமிழகம் வந்தவர்கள், கண்ணன் வழியினராய், துவாரகையாதவ குலத்து வந்தோராவர் என்று கூறுவரும் உளர். வேளிர்க்கும் அக்கதைகளுக்கும் தொடர்பு இல்லை என்று மறுப்பாரும் உள்ளனர்.[43]

வேளிர் குடிப்பிறப்பு குறித்து கருத்து வேறு வேறாக இருப்பினும், வேளிர் குடி வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த குடி, என்பதில் யாருக்கும் கருத்து வேற்றுமை இருக்க முடியாது.

"உழுவித் துண்போர், மண்டிமாக்களும், தண்டத் தலைவருமாய்ச் சோழ நாட்டுப் பிடவூரும். அழுந்தூரும் நாங்கூரும், நாவூரும், ஆலஞ்சேரியும், பெருஞ்சிக்கலும். வல்லமும், கிழாரும், முதலிய பகுதியில் தோன்றி. வேள் எனவும், அரசு எனவும் உரிமை எய்தினோரும், முடியுடை வேந்தர்க்கு மகட் கொடைக்குரிய வேளாளர்' குடியே வேளிர் மரபு.[44]

சோழ மன்னன் உருவப் பஃறேர் இளஞ் சேட் சென்னி அழுந்நூர் வேள் மகனை மணந்திருந்தான் என்பதும், அவன் மகனான சோழப் பேரரசன் கரிகாற் பெருவளத்தான் மனைவி, நாங்கூர் வேள் என்பானின் மகள் என்பதும், சோழ மன்னர்கட்கு மகட் கொடை அளித்த பெருமைக்குரியவர் வேளிர் மரபினர் என்பதை உறுதி செய்யும்.

வான வரம்பன் வெளியம்[45]. என் அழைக்கப்படும் சேர நாட்டு வெளியம் நகர்க் கண் வேளிர்மரபினர் வாழ்ந்திருந்தனர். அவர்கள் வெளியன் வேண்மான் என்று அழைக்கபெற்றனர்[46] அவ் வேளிர் மரபினர் சேர வேந்தர்க்கு மகள் கொடுக்கும் குடியினராக விளங்கினர்.

சேர மரபின் மூன்னோனான உதியன் சேரலாதன், வெளியன் வேண்மான் எனும் வேளிர் குலத் தலைவன் மகளான நல்லினி என்பாரை மணந்திருந்தான்[47] என்பதும், அவன் மகனான இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன், வேளிர் மரபினனான, வேளாவிக் கோமான் பதுமன் மகளை மணம்' முடிந்திருந்தான் என்பதும்,[48] அவ் வேளிர் மகள் வயிற்றுப் பிறந்தோரே சேர மன்னர் களான, களங்காய்க் கண்ணி நார் முடிச்சேரல்,[49] ஆடு கோட்பாட்டுச் சேரலாதன்[50] ஆகியோர் என்ற வரலாற்று உண்மையும், இமயவரம்பன் நெடுஞ் சரலாதன் மகனான, கடல் பிறக்கோட்டிய

செங்குட்டுவன் அரசியான, இளங்கோ வேண்மாள் வேளிர் குலப் பெண்ணரசு என்பதும், குட்டுவன் இரும் பொறை என்னும் சேரமன்னன், மையூர் கிழான் வேண்மான் என்ற வேளிர் மரபினனின் மகள் அந்துவஞ் செள்ளை என்பாரை மணந்திருந்தான் என்பதும், அவர்க்குப் பிறந்த மகனே சேரன் இளஞ்சேரல் இரும் பொறை என்பதும்,[51] சேர அரச மரபினருக்கும் வேளிர் மரபினருக்கும் இடையே நிலவிய உறவு முறைக்கு சான்று பகருகின்றன.

பெருங்கொடை வள்ளல்களாகவும், மன்னா களாகவும் விளங்கிய ஆய் அண்டிரன்,[52] பறம்புமலைத் தலைவன் பாரி; [53]. வையாவிக் கோப் பெரும் பேகன்[54], ஆகியோர் வேளிர் குடி வந்தவர்களே.

மலைபடு கடாம் பாட்டுடைத் தலைவனான நன்னன் சேய் நன்னன்,[55] மிழிலை நகர்த் தலைவன் எவ்வி[56], வாட்டாற்று எழினியாதன் [57], வேளிர் தம் பெரும் பொருளைத் தன் பாழிநகர் அரணில் வைத்துக் காத்த நன்னன் வேண்மான்[85] அரையம் என்ற பேரூர்த் தலைவனான புலி கடி மால் என்றழைக்கப்பட்ட இருங்கோ வேள்,[59] இளவிச்சிக்கோ, 60 வெளிமான்,[61] இளவெளிமான்,[62], பிடவூர் கிழார் வேண்மாள்,[63] வெளியன் வேண்மான். ஆய் எயினன் [64] நெடுவேள் ஆவி, நெடு வேளாதன், அழும்பில் வேள் [65] போன்ற வேளிர் மரபினர் குறுநில மன்னர்களாகவும் படைத் தலைவர்களாகவும் விளங்கித் தம் குடிக்கு பெருமை சேர்த்தனர்.

தலையாலங் கானத்துப் போர்க்களத்தில் பாண்டியன் நெடுஞ்செழியனால் அழிக்கப்பட்ட எழுவரில் இருங்கோ வேண்மான் என்ற வேளிர் மரபினனும் ஒருவன், [66] சோழன் கரிகாற் பெருவளத்

தானோடு வெண்ணி வாயில் போர்க்களத்தே பொருதவருள் இருங்கோவேள் உள்ளிட்ட பதினொரு வேளிரும் அடங்குவர்; 67 கரிகாற் பெருவளத் தானோடு ஒன்பது வேளிர் வாகை எனும் இடத்தே போரிட்டுத் தோற்றனர்;[68] சேர வேந்தன் பல்யானைச் செல்கெழு குட்டுவன் தன்னோடு பொருத இரு பெரும் வேந்தரையும் வேளிரையும் வென்று அழித்தான்;[69] கழுவுள் என்ற ஆயர்குலத் தலைவனை பதினான்கு வேளிர் போரிட்டு வென்றனர்;[70] போன்ற வரலாற்று உண்மைகள் சங்க இலக்கியப் பாடல்களில் காணக் கிடக்கின்றன. அவை, சங்ககாலத் தமிழ் நிலம் ஆண்ட முடியுடை மூவேந்தரும் தம்முள் பகை கொண்டு போரிட்ட போது, வேளிர் குடியினரின் போர்த் திறன் உணர்ந்து, அவர் துணை நாடியுள்ளனர் என்ற உண்மையினையும், தமிழக வரலாற்றில் வேளிர் மரபினர் பெற்றிருந்த பெருமையினையும், உணர்த்து வனவாக அமைந்துள்ளன.

# சான்றெண் விளக்கம்

1. அகம்-79; பதிற்று-77, 22
2. குறுந்-393; பதிற்று-88
3. பதிற்று-22
4. பதிற்று- 88, 90
5. புறம்-373
6. நற் 10; களவழி-14
7. அகம்-44
8. அகம்-253
9. குறுந்-393
10. புறம்-138
11. குறுந்-15; அகம்-205
12. அகம்-15
13. அகம்-90, 216, 113
14. அகம்-262, 196
15. குறுந்-73
16. அகம்-112
17. மதுரை-771-4; அகம்-205, 346
18. மதுரை-508-9; அகம்-251
19. புறம்-161
20. அகம்-213
21. குறுந்-260
22. பெரும் பாண்-450-4
23. பதிற்று-21
24. அகம்-8

25. பல்யானைச் செல்கெழு குட்டுவன், பதிற்று-21
இளஞ்சேரல் இரும் பொறை, பதிற்று-84
26. செல்வக் கடுங்கோ வாழியாதன்-புறம்-387
27. தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை-
பதிற்று.93
இளஞ்சேரல் இரும்பொறை-பதிற்று-90
28. பதிற்று-பதிகம்-4; அகம்-199.
29. அகம்-1, 187.
30. அகம்-101, 131, 301
31. அகம்-127, 91,337
32. அகம்-187
33. பல்யானைச் செல்கெழு குட்டுவன், பதிற்று-21
ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் பதிற்று-55
34. புறம்-88, 90
35. நற்-52
36. அகம்-1
37. அகம்-91
38. அகம்-513, 295
39. குறுந்-11
40. அகம்-107, 281, 252; நற்-212
41. அகம்-281
42. அகம்-375
43. புறம்-201
தொல்-பாயிரம்-நச்சினார்க்கினியர் உரை
44. தொல் பொருள் அகத்திணையியல்-சூத்திரம்-30-
நச்சினார்க்கினியர் உரை
45. அகம்-359
46. அகம்-208
47. பதிற்று பதிகம்-2
48. பதிற்று பதிகம்-4
49. மேலது
50. பதிற்று பதிகம்-6
51. பதிற்று பதிகம்-9

52. 'மாவேள் ஆய்',-புறம்-128
53. அகம்-78
54. புறம்-147
55. மலைபடு-94, 194
56. புறம்-24
57. புறம்-396
58. அகம்-97, 258, 372
59. புறம் 208, 202
60. புறம்-15
61. புறம்-237,238
62. புறம்-162
63. புறம்-395
64. அகம்-208
65. மதுரை-344-5
66. அகம்-36
67. அகம்-55, 246; பட்டின-282
68. அகம்-125
69. பதிற்று-30
70. அகம்-135

# கருவி நூற்பட்டியல்

## இலக்கியங்கள்

1. அகநானூறு
2. இராசராச சோழன் உலா
3. ஐங்குறுநூறு
4. கலிங்கத்துப்பரணி
5. கலித்தொகை
6. களவழி நாற்பது
7. குலோத்துங்க சோழன் உலா
8. குலோத்துங்கன் பிள்ளைத் தமிழ்
9. குறுந்தொகை
10. சிலப்பதிகாரம்
11. சிறுபாணாற்றுப்படை
12. தொல்காப்பியம்
13. நற்றிணை
14. நெடுநல்வாடை
15. பட்டினப் பாலை
16. பதிற்றுப் பத்து
17. பரி பாடல்
18. புற நானூறு
19. பெரும் பாணாற்றுப் படை
20. பொருநராற்றுப் படை
21. மணிமேகலை
22. மதுரைக் காஞ்சி
23. மலைபடு கடாம்
24. விக்கிரம சோழன் உலா

தமிழ்

**கோவிந்தன். புலவர் கா.** திருமாவளவன், கழகம், 1951.
சோழர், கழகம், 195.
'திதியன்' 'அகுதை' முதலிய 44 பேர்கள், கழகம், 19

**கல்வெட்டுத் தொகுப்பு நூல்கள்**
**தென்னிந்தியக் கல்வெட்டுகள்**
**கல்வெட்டு ஆண்டு அறிக்கை**

# தமிழக வரலாறு

## சங்ககாலம்—அரசர்கள்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| iii | 7 | தலைவராக. | தலைவராக |
| 7 | 23 | குடம் | குடகம் |
| 12 | 1 | இமயவம்ரபன் | இமயவரம்பன் |
| 12 | 17 | வழியாக்க | வழியாகக் |
| 13 | 12 | கொடுத்தான், | கொடுத்தான். |
| 14 | 1 | பரணரும். | பரணரும், |
| 14 | 19 | புறந்தவனாக | பிறந்தவனாக |
| 16 | 5 | இருகக | இருக்க |
| 17 | 24 | தலைநகராக் | தலைநகராகக் |
| 18 | 7 | மரபில | மரபில் |
| 19 | 22 | சேர்த்தது. | சேர்த்தது; |
| 21 | 8 | தொணடி | தொண்டி |
| 21 | 19 | பமைவர்க்கு | பகைவர்க்கு |
| 22 | 6 | மலைவளமும். | மலைவளமும், |
| 22 | 21 | பரணரும். | பரணரும், |
| 22 | 22 | ஆவர் | ஆவர். |
| 23 | 1 | கொண்டவன்; | கொண்டவன். |
| 23 | 24 | உடையானல்லன், | உடையானல்லன். |
| 24 | 3 | தேர்வணமலையன் | தேர்வண்மலையன் |
| 24 | 8 | அஞ்சியிருந்தபோது. | அஞ்சியிருந்தபோது, |
| 24 | 18 | புலவர்கள். பாவல காவலர் | காவல பாவலர் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 25 | 4 | தோழிய | தோழியர் |
| 26 | 30 | (269) | (268) |
| 28 | 5 | அறுப்பத்தாறும் | அறுபத்தாறும் |
| 39 | 12 | நெலலை | நெல்லை |
| 40 | 28 | வானவர்க்குத | வானவர்க்குத் |
| 41 | 23 | பாண்டரங் கண்ணனார். | பாண்டரங்கண்ணனார், |
| 43 | 23 | ]புறம் 61] | [புறம் 61] |
| 43 | 23 | புறம், | புறம் |
| 44 | 2 | இணைந்து | இணைத்து |
| 44 | 6 | இலவநதிகை | இலவந்திகை |
| 45 | 13 | பாளுளுர் | பாமுளூர் |
| 45 | 21 | இருப்பதாலும். | இருப்பதாலும், |
| 47 | 2 | பெயர். | பெயர் |
| 49 | 23 | தனி | தன் |
| 50 | 9 | வச்சிரதாட்டான் | வச்சிரநாட்டான் |
| 50 | 15 | Voi | Vol |
| 50 | 16 | Cholas | Chola |
| 50 | 17 | Encyclopeadia | Encyclopaedia |
| 50 | 17 | Brittanica | Britannica |
| 53 | 13 | எனவுமு | எனவும் |
| 54 | 2 | குமராப்பள்ளியான். | குமராப்பள்ளியான், |
| 54 | 20 | அழைக்கப் பெற்றுளது, | அழைக்கப்பெற்றுள்ளது. |
| 55 | 5 | பெறுவன | பெறுவன் |
| 55 | 20 | ஏற்ற | ஏற்று |
| 56 | 10 | நெடுது | நெடிது |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 56 | 16 | எயிற்றியனார | எயிற்றியனார் |
| 57 | 13 | வருவார். | வருவார், |
| 61 | 3 | மற்பேரர் | மற்போர் |
| 62 | 19 | இடைப்படைனக்கு | இடைப்படைக்கு |
| 64 | 1 | கூறவும். | கூறவும், |
| 64 | 12 | நெடுங்கிள்ளி, | நெடுங்கிள்ளி. |
| 67 | 11 | ஆவன், | ஆவன். |
| 77 | 18 | ப்றம் | புறம் |
| 79 | 30 | கொண்டவன். | கொண்டவன், |
| 81 | 4 | புறநானுற்று | புறநானூற்று |
| 81 | 11 | சூளுரைத்ததகாக | சூளுரைத்ததாக |
| 81 | 11 | அறியக் அறியக் | அறியக் |
| 84 | 11 | புலவர்களாவர், | புலவர்களாவர். |
| 84 | 17 | அறியலாகும். | அறியலாகும், |
| 84 | 20 | )யானைக்கண்சேய் | (யானைக்கண்சேய் |
| 84 | 22 | வேண்மாள் | வேண்மான் |
| 84 | 28 | அறிந்தான் | அறிந்தான். |
| 85 | 13 | பெற்றறான்[34] | பெற்றான்.[34] |
| 86 | 5 | பெருரையும் | பேருரையும் |
| 86 | 26 | மட்டுமே, | மட்டுமே. |
| 87 | 15 | விடுவேன், | விடுவன். |
| 87 | 20 | நெடுஞ்சடையன், | நெடுஞ்சடையன் |
| 89 | 3 | இவன், | இவன். |
| 89 | 16 | புணைந்தவன், | புனைந்தவன். |
| 92 | 1 | நெடுஞ்வண்ணணார் | நெடுங்கண்ணனார் |
| 93 | 4 | புறநானுற்று | புறநானூற்று |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 93 | 5 | திருக்மாலின் | திருமாலின் |
| 94 | 10 | காண்டு | கொண்டு |
| 100 | 23 | புரம்போர் | புரப்போர் |
| 104 | 7 | என்றால். | என்றால், |
| 105 | 21 | புலவர்கள். | புலவர்கள், |
| 106 | 12 | ஆய் ஆய் | ஆய். ஆய் |
| 106 | 13 | நுழைலும் | நுழைவது |
| 106 | 26 | பரணா | பரணர் |
| 106 | 26 | பாலத்தனாா | பாலத்தனார் |
| 109 | 9 | நத்தூத்னார் | நத்தத்தனார் |
| 110 | 5 | வள்ளலகளுக்கு | வள்ளல்களுக்கு |
| 110 | 8 | நன்னாகனர் | நன்னாகனார் |
| 110 | 26 | இருந்ததமையால் | இருந்தமையால் |
| 112 | 7 | தெய்வீவகனுக்கு | தெய்வீகனுக்கு |
| 112 | 16 | கபிர் | கபிலர் |
| 113 | 21 | நால்வரும். | நால்வரும், |
| 116 | 5 | நேரே. | நேரே, |
| 117 | 28 | என் | என |
| 118 | 15 | ஆலமலர் | ஆலமர் |
| 119 | 7 | ஒழுகும | ஒழுகும் |
| 119 | 9 | கொல்லியகண்ட | கொல்லியாண்ட |
| 120 | 7 | ஆச | ஆதல் |
| 121 | 18 | கிந்த | கீத்த |
| 129 | 16 | மாட்டார் | மாட்டா |
| 129 | 21 | அகுதை? | அகுதை |
| 129 | 26 | புகழுப படுமளவு | புகழ்ப் படுமளவு |
| 131 | 19 | கற்றவன் | பெற்றவன் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 133 | 5 | வல்லவன். | வல்லவன், |
| 133 | 6 | திதியன்தான். | திதியுன்தான், |
| 134 | 6 | செல்லுர் | செல்லூர். |
| 136 | 25 | ஒருவன் | ஒருவன். |
| 137 | 19 | மட்டும் | மட்டும். |
| 138 | 8 | வாளைள் | வாளை |
| 139 | 4 | நலலவனாயினும் | நல்லவனாயினும் |
| 139 | 14 | சொன்னான், | சொன்னான். |
| 137 | 17 | பெற்றாா | பெற்றார் |
| 140 | 1 | வள்ளல் | வள்ளல். |
| 141 | 25 | வெள்ளெருக் கிலையார் | வெள்ளெருக்கிலையார்; |
| 142 | 2 | குன்றத்துத | குன்றத்துத் |
| 142 | 3 | தனைவன் | தலைவன். |
| 142 | 5 | போனமையால். | போனமையால், |
| 142 | 21 | இடத்தே. | இடத்தே, |
| 143 | 15 | அழைக்கப்பட்டது, | அழைக்கப்பட்டது. |
| 143 | 19 | பிறவாற்றத | பிறிவாற்றாத |
| 144 | 19 | சோழன் சேரன் | சோழன் |
| 145 | 5 | கரும்பனூர், | கரும்பனூர். |
| 146 | 8 | இறந்தவுடன். | இறந்தவுடன், |
| 146 | 17 | தலைநகரான. | தலைநகரான, |
| 147 | 11 | ஒருவனே. | ஒருவனே, |
| 147 | 14 | கௌணியைப் | கௌணியப் |
| 147 | 24 | அச்சிறுகுடி, அச்சிறுகுடியின் | அச்சிறுகுடியின் |
| 148 | 2 | விரக்கழல் | வீரக்கழல் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 148 | 4 | வேளான் | வேளாண் |
| 148 | 16 | பாராட்டியுள்ளான், | பாராட்டியுள்ளான். |
| 148 | 20 | வீரத்தாய் | வீரத்தால் |
| 148 | 22 | பெற்றவன், | பெற்றவன். |
| 150 | 3 | ஊனூர் | ஊணூர் |
| 150 | 25 | காண்கிறோம், | காண்கிறோம். |
| 151 | 4 | யுடைட்ய | யுடைய |
| 151 | 7 | திதியன | திதியன் |
| 151 | 9 | வெள்ளி வீதியார் | வெள்ளி வீதியார், |
| 151 | 13 | ஒருவன் | ஒருவன். |
| 151 | 24 | விற்படை, | விற்படை; |
| 152 | 5 | பாடியுள்ளதால். | பாடியுள்ளதால், |
| 152 | 8 | பாடியுள்ளவையால். | பாடியுள்ளமையால், |
| 153 | 5 | அல்லன் | அல்லன |
| 153 | 21 | சடலிலே | கடலிலே |
| 155 | 4 | நன்னன், | நன்னன், |
| 155 | 14 | கொணட | கொண்ட |
| 157 | 2 | நன்னன் | நன்னன்; |
| 158 | 4 | ஒருவனாவாள், | ஒருவனாவான். |
| 158 | 11 | அதனால். | அதனால், |
| 159 | 27 | அடிப்படை | அப்படை |
| 160 | 23 | ஒன்றை. | ஒன்றை, |
| 162 | 2 | ஆற்றினான | ஆற்றினான் |
| 162 | 10 | பேராண்மயும் | பேராண்மையும் |
| 162 | 16 | நாஞ்சில் மலை | நாஞ்சில் மலை. |
| 162 | 25 | அரியனாகவும் | அரியனாகவும், |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 163 | 24 | சேரலோடு. | சேரலோடு, |
| 165 | 8 | பெறும். | பெறும், |
| 165 | 19 | புகழ்ப் பட்டவன் | புகழப் பட்டவன் |
| 166 | 2 | வந்தான், | வந்தான். |
| 166 | 6 | சேரமன்னன் | சேரமன்னன், |
| 166 | 13 | படையொன்று. | படையொன்று, |
| 166 | 28 | வேற்படைட் யுடைட்யவன் | வேற்படையுடையவன் |
| 167 | 22 | அசசாத்தனார் | அச்சாத்தனார் |
| 168 | 16 | மணியும். | மணியும், |
| 168 | 25 | நாட்டி | நாட்டு |
| 169 | 11 | புல்லி | புல்லி. |
| 169 | 20 | வகையால். | வகையால், |
| 170 | 24 | பொறையாறு, | பொறையாறு. |
| 172 | 3 | கொன்றவரைப். | கொன்றவரைப் |
| 172 | 5 | வென்று. | வென்று, |
| 172 | 9 | மத்தி | மத்தி. |
| 172 | 26 | பெற்றவன், | பெற்றவன். |
| 173 | 17 | எனவும். | எனவும், |
| 174 | 17 | நன்னன | நன்னன். |
| 174 | 17 | துணையாக் | துணையாக |
| 175 | 5 | பூண்களும். | பூண்களும், |
| 175 | 18 | சாத்தனார் தம் | சாத்தனார்தம் |
| 177 | 5 | சிறுகருந்தும் பியார் | சிறுகருந் தும்பியார் |
| 177 | 17 | ஆசிரியர். | ஆசிரியர் |
| 178 | 3 | அரசன் | அரசன். |
| 178 | 21 | மணந்தால், | மணந்தால், |

| | | | |
|---|---|---|---|
| 179 | 19 | பெற்றவன். | பெற்றவன். |
| 179 | 23 | வெளிமான் | வெளிமான். |
| 180 | 20 | முற்றிகை | முற்றுகை |
| 175 | 32 | அசும் | அகம் |
| 188 | 7 | மரபினரும். | மரபினரும், |
| 190 | 6 | கொங்கரையும். | கொங்கரையும், |
| 190 | 12 | கையப்படுத்தி | கையகப்படுத்தி |
| 190 | 28 | வென்று. | வென்று, |
| 191 | 26 | கடலையொட்டி. | கடலையொட்டி, |
| 194 | 15 | தொண்டைமான். | தொண்டைமான், |
| 194 | 16 | புலவர்களான. | புலவர்களான, |
| 196 | 18 | துரத்தினான், | துரத்தினான். |
| 197 | 7 | நின்றனர். வடுகர் | நின்றனர் வடுகர். |
| 198 | 2 | பிடவூரும். | பிடவூரும், |
| 198 | 3 | பெருஞ்சிக்கலும். | பெருஞ்சிக்கலும், |
| 198 | 4 | தோன்றி. | தோன்றி, |
| 198 | 9 | அழுந்நூர் | அழுந்தூர் |
| 198 | 9 | மகனை | மகளை |
| 199 | 2 | பெண்ணரசு | பெண்ணரசி |
| 199 | 10 | மன்னா | மன்னர் |
| 199 | 21 | வேண்மாள் | வேண்மான் |
| 199 | 22 | வேண்மான். | வேண்மான், |
| 199 | 30 | ஒருவன், | ஒருவன். |
| 200 | 3 | பெருவனத் தானோடு | பெருவளத்தானோடு |

# எழிலகம் வெளியீடுகள்

## புலவர் கா. கோவிந்தனார் படைப்புகள்

### இலக்கியம் :

| | | |
|---|---|---|
| 1. | வள்ளுவர் சொல்லாட்சி மாட்சி | 15 00 |
| 2. | மனையுறை புறாக்கள் | 15 00 |
| 3. | காவிரி | 20 00 |
| 4. | சிலம்பொலி | 12 00 |
| 5. | புண் உமிழ் குருதி | 10 00 |
| 6. | அருநெறிய ஆவுதி | 10 00 |
| 7. | கழற்கால் நுழாய் | 10 00 |
| 8. | கடாரின் வேங்கை | 10 00 |
| 9. | வடு அடும் நுண் அயிர் | 10 00 |

### வரலாறு

| | | |
|---|---|---|
| 10. | தமிழக வரலாறு சங்ககாலம் —அரசர்கள் | 25 00 |
| 11. | தமிழக வரலாறு—கோசர்கள் | 30 00 |

## டாக்டர் கோ. திருமாவளவன் நூல்கள்

| | | |
|---|---|---|
| 12. | சம்புவரையர் | 10 00 |
| 13. | புலவர் வாழ்வும் பணியும் | 10 00 |
| 14. | History of the Cholas as gleaned from Ula (உலா) Literature | 125 00 |

**எழிலகம்**

46, செல்வ விநாயகர் கோயில் தெரு

திருவத்திபுரம்-604 407

ISBN—81-85703-13-2